உயர்நீதிமன்றத்தின் மேனாள் பார்கவுன்சில் தலைவர், மூத்த வழக்கறிஞர், அடிஷனல் சொலிஷெட்டர் ஜெனரல் ஆப் இந்தியா உயர்திரு. அரு.லெ. சுந்தரேசன் அண்ணன் அவர்கள். ''எப்படியும் வாழலாம் என்பவர்களுக்கு இடையே இப்படித்தான் வாழ வேண்டும்'' என்று நெறியான வாழ்க்கை வாழ்ந்து மதுரை நகரில் மிகப்பெரிய கம்யூட்டர் சாம்ராஜ்யத்தை நடத்திக்கொண்டிருக்கும் திரு. கதிர்காமநாதன் அண்ணன் அவர்கள் போன்றவர்களின் பணி நமது மகுடத்தில் வயிரங்கள் பதிப்பதாக அமைந்தது.

நமது திருப்பணிக்குழுத் தலைவர் திரு.மு.ப.மு.பழ. முத்துக்கருப்பன் அண்ணன் அவர்கள், செயலாளர் சுறுசுறுப்பின் மறு உருவம் திரு. லெ.அரு.நாச்சியப்பன் அண்ணன் அவர்கள், நமது திருப்பணிக்குழு பொருளாளர் மிகச் சிக்கனமாக நடவடிக்கைகளை நடத்தி நிதி சேர்ப்பதில் மிக கவனமாக இருந்து செயல்பட்டு கொண்டிருக்கும் திரு. எஸ்.எம்பி. அருணாச்சலம் அண்ணன் அவர்கள், நமது அறங்காவலர் குழு தலைவர் திரு. வீர. வீரசேகரன் அண்ணன் அவர்கள், சேவைச் செம்மல் ஆன்மீக பேரொளி அண்ணன் திரு.ஆர்.கே. செல்வம் அவர்கள் ஆகியோர்களின் வழிகாட்டுதல் இந்த மலர் மலர பெரும் பங்காற்றியது.

மேலே நான் குறிப்பிட்ட பெருமக்கள் அனைவரும் வயதில் மூத்தவர்கள். தத்தமது துறையில் சாதித்துக்காட்டி, பெருவாழ்வு வாழ்ந்து கொண்டிருப்பவர்கள். நான் வயதில் சிறியவன், தகுதியில் எளியவன், அனுபவத்தில் இளையவன். அவர்கள் அனைவரும் கட்டி முடிக்கப்பட்ட கோபுரம். நான் கொட்டி வைக்கப்பட்டுள்ள செங்கல் அறிவேன். ஆனாலும் என்னையும் ஒரு பொருட்டாக கருதி இந்த பணி நிறைவடைய தக்க ஆலோசனைகள் தந்த பெருமக்கள் அனைவருக்கும் மீண்டும் ஒரு முறை நெஞ்சம் நிறைந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன். இந்த மலரில் குறைகள் ஏதும் இருப்பின் அவை என்னால்தான் எனச்சொல்லி என்னைப் பொறுத்தருள வேண்டுகிறேன். மலரின் நிறைகள் அனைத்தும் மலர்க்குழுவினரைச் சேர்ந்தது. மலர்க்குழுவினருக்கும், நிர்வாக குழுவினருக்கும் நன்றி பாராட்டி மகிழ்கிறேன்.

ஊர் கூடித் தேர் இழுப்போம்! ஒற்றுமையாய் நாம் இருப்போம்!! நல்லவர்கள் மட்டுமல்ல வல்லவர்களும் நாம் என்று நிருபிப்போம்!!! நன்றி வணக்கம்.

**இராம. இளங்கோ**
மலர்குழு தலைவர்

## குடமுழுக்கு விழாச் செயலாளரின் நன்றி!



**வி**காரி ஆண்டு கார்த்திகைத் திங்கள் 19 ஆம் நாள் 5.12.2019 வியாழக்கிழமை நடைபெற்ற குடமுழுக்கு விழாக்கூட்டத்தில் தலைவர் நீதியரசர் தேவகோட்டை, திரு.அரு.லெட்சுமணன் செட்டியார் அவர்கள் தலைமையில் செயலாளர், இணைச் செயலாளர், பொருளாளர் மற்றும் விழாக் குழுவினர்கள் மொத்தம் 87 பேர் ஏகமனதாகத் தேர்க்தெடுக்கப் பெற்றார்கள்.

அடுத்து 27.2.2020-ஆம் நாள் நடைபெற்ற கூட்டத்திற்கு வந்திருந்த நமது பங்காளிகள் பெரும்பாலான கோபுரத் திருப் பணிகளை அவர்களது பொருட் செலவில் செய்து தர ஒப்புதல் அளித்தது மிகவும் சிறப்பாக இருந்தது.

26.8.2020 ஆம் நாள் தலைவர் நீதியரசர் திரு.அரு.லெட்சுமணன் செட்டியார் அவர்கள் எதிர் பாராதவிதமாக இயற்கை எய்தியபடியால் 16.1.2021 ஆம் நாள் நடைபெற்ற கூட்டத்தில் கொப்பனாபட்டி திரு.மு.ப.மு.பழ.முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றார்கள்.

திருக்கோவில் திருப்பணி என்பது கிடைத்தற்கரியது புதிய கோவில் கட்டுவதைவிட பழைய கோவில்களை பழைமை மாறாமல் திருப்பணி செய்வது அரிதினும் அரிதாகும். நம் இரணிக்கோவில் ஆட்கொண்டநாதர், பத்ரகாளியம்மன், நீலமேகப் பெருமாள் திருக்கோவில்களையும் பழைமை மாறாமல் திருப்பணி செய்திருப்பது சிறப்பிற்குரியது. இதற்கு பெரிதும் பொறுப்பாக இருந்து திருப்பணி வேலைகள் சிறப்பாக நடைபெற உதவிபுரிந்தவர் கொப்பனாபட்டி திரு.ஆர்கே. செல்வம் செட்டியார் அவர்கள். அவர்களுக்கும் எனது நன்றி.

2020, 2021 ஆம் ஆண்டுகளில் கொரானா தாக்கம் அதிகமாக இருந்தபடியால் திருப்பணி வேலைகளும் கால தாமதமாக நடைபெற்றது. நன்கொடைகளும் எதிர்பார்த்த அளவு தாராளமாக நமது இரணிக்கோவில் நகரத்தார்கள் கொடுத்து உதவினார்கள். ஆகவே குடமுழுக்குவிழாவும் சிறப்பாக நடைபெற்றது. குடமுழுக்கு விழாவிற்கும் 24.5.2023 மற்றும் 25.5.2023 ஆம் நாள் என்று தேதி குறிப்பிட்டதும் வேலைகளும் மிகத் துரிதமாக நடைபெற்றது.

நகரத்தார், நாட்டார் விருந்தும் காரைக்குடி மற்றும் கண்டனூர் நகரத்தார்கள் மேற் பார்வையில் மிகவும் சிறப்பாக நடைபெற்றது. அதற்கும் நகரத்தார்கள் தாராளமாக நன்கொடை தந்து உதவினார்கள். அவர்களுக்கும் நன்றி.

யாகசாலை சாமான்கள் சிவாச்சாரியார்கள் சன்மானம் உட்பட அனைத்துச் செலவுகளையும் கொப்பனாபட்டி நகரத்தார்கள் அவர்களது பொருட் செலவில் ஏற்றுக் கொண்டார்கள். அவர்களுக்கும் நமது நன்றி.

மூன்று திருக்கோவில்களின் அனைத்து கோபுரங்களையும் மராமத்துச் செய்து வண்ணங்கள் பூசித்தர நமது இரணிக் கோவில் நகரத்தார்கள் அவரவர்கள் தனிப் பொறுப்பில் ஏற்றுக் கொண்டு அதற்குரிய நன்கொடையை அளித்துள்ளார்கள். அவர்களுக்கும் நமது நன்றி.

குடமுழுக்கு விழாக்கள் சிறப்பாக நடந்தேறியதும் 25.5.2023 திருக்கல்யாணம் மற்றும் பஞ்சமூர்த்திகள், காளியம்மன், நீலமேகப் பெருமாள் திருவீதி உலா சிறப்பாக நடைபெற்றது.

குடமுழுக்கு விழாசிறப்பாக நடைபெற எந்தவித மனக் கசப்பும் இல்லாமல் அனைத்து உதவிகளையும் செய்து கொடுத்த நமது இரணிக் கோவில் நகரத்தார்கள் அனைவருக்கும் அருள்மிகு சிவபுரந்தேவி சமேத ஆட்கொண்ட நாதர் அருள் புரியப் பிரார்த்திக்கின்றோம்.

**- அரு.நாச்சியப்பன்**

செயலாளர் குடமுழுக்கு விழா



# இரணியூர் ஸ்ரீ ஆட்கொண்ட நாதர் சிவபுரந்தேவி அறக்கட்டளை

உ
சிவமயம்
அன்பே சிவம்
ஸ்ரீராமஜெயம்

''தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி
இச்சைவம் ஏற்றிய பெரியோன் வாழ்க!
இச்சீர்வளர் மரவு தந்த பேராளன் வாழ்க!

''குடிசெய்வல் என்னும் ஒருவற்குத் தெய்வம்
மடி தற்றுத் தான் முந்துறும்'' - குறள் 1023

**பொருள்:** தான் பிறந்த குடி உயர பாடுபடும் ஒருவர்க்கு தெய்வம் வரிந்துகட்டிக் கொண்டு உதவி செய்யும்.

## இரணியூர் ஸ்ரீ ஆட்கொண்டநாதர் சிவபுரந்தேவி அறக்கட்டளை

''கல்வாச நாட்டில் இளையாத்தாங்குடியான குலசேகர புரத்தில் இரணியூர் மருதங்குடியான இராச நாராயணபுரத்தில் இரணியூர் திருவேட் பூருடையார்'' பங்காளிகளில் ஆன்மீக வேட்கை கொண்ட சிலர் இணைந்தும் தெய்வத்திரு. சிவனேசச் செல்வர் குருவிக்கொண்டான்பட்டி கரு. அண்ணாமலை செட்டியார் அவர்களின் நன்முயற்சியாலும் ஆரம்பிக்கப் பெற்றது.

### அறக்கட்டளையின் நோக்கம்:

இறைத்தொண்டும் - இறைஅடியவர்க்குத் தொண்டும் செய்தல், ஆருயிர்களிடத்து - அன்பு செய்தல், இரணியூர் திருக்கோவில்கள் மூன்றை யும் கண்ணெக் காத்தல்.

### விநாயகர்

இமையவர் செல்வமே கள்ள வாரணக்கனகமே!
இறைப் பணியில் எமைப் பணித்த கற்பகமே!
இப்பெரியபணி சிறக்க எமைக்காக்க ரெத்தினமே
இரணியூர் சுந்தர விடுதி வித்தக விநாயகரே சரணம்
- மு. பெரியணன்



### ஆட்கொண்டநாதர் சிவபுரந்தேவி

'இரணிய' வதம் செய்து உலகம் ஏழும் நடுங்க உதித்த நரசிம்மத்தை - ''சரபேஸ்வரம்'' உருக்கொண்டு **ஆட்கொண்ட ஈசன் ஆட் கொண்ட நாதர்** அடியவர் குடியாக அமர்ந்த இடம் இரணியூர்.

'வீரசரபேஸ்வரமாய்' வீறுகொண்டெழுந்த இரணியூர் ஈசனை - சதுர் செய்து சாந்தமிட்ட இமயவான் மகள் **''சிவபுரந்தேவி''** இமயம் இனிபோதும் என இரணியூரில் குடிகொண்டார்.

### நீலமேகப் பெருமாள் கனவல்லித் தாயார்

'ஆட்கொண்டார்' ஆட்கொண்ட நரசிம்மம் மீட்கொண்டு - குளிர்ந்து ''நீலமேகமாய் அமர்ந்தது கனிவாய் காத்தருளும் 'கனகவல்லித் தாயார் - நீலமேகப் பெருமாளுக்கு பல்லாண்டு கூறுவோம்.

### வடக்கு வாசல் தெய்வம் இரணியூர் காளிகாம்பாள்

வடக்கு வாசல் காத்தருளும் வளர்மங்கை!
நடம் நவில் களிதரு உமைகாளி
சங்கரி - சாம்பவி - சாமளை - சுந்தரி - மாலினி
**"பைரவி இரணியூர் காளிகாம்பாள்"** திருவடி பணிவோம்

முத்துவதனத்தி, முகந்தொறு முக்கண்ணி
சத்தி, சதுரி, சகளி, சடாதரி
பத்துக் கரத்தி, பராபரன் பைந்தொடி
வித்தகி, என் உள்ளம் மேவி நின்றாளே!

- திருமூலர் 'திருமந்திரம்'

### இல்லை எனா இரணியூர்

இரணியூர் சென்று **ஆட்கொண்டநாதரை** வழிபடுங்கள். ''வள்ளல்'' அவர் உங்களை ஆட்கொள்வார். வினையால் மாளாது ஆட் கொள்வார். மந்திரமும் - தந்திரமும் - மருந்து மாகி ஆட்கொள்வார். பேராயிரம் தந்து ஆட் கொள்வார். வாராத செல்வமும் தந்து ஆட் கொள்வார் தாராளமாய் கை கூப்புங்கள் தரணி ஏழும் காத்தருளும் அப்பனை.

இமயம் இனிபோதும் என இரணியூரில் குடிகொண்ட அன்னை **'சிவபுரந்தேவி'** சன்னதி அடையுங்கள் சீக்கிரமே பிள்ளைப்பேறும், பெரும் செல்வமும் அரும்புகழும் தந்திடுவாள். அந்த அழகு தெய்வத்தை உற்று நோக்குங்கள். திருப்பாதம் காணுங்கள் உங்களை நோக்கி அடிஎடுத்து வைக்கும் பாதங்களைக் காண்பீர்கள் 'அம்மா' என்று சொல்லுங்கள் எடுத்த அடிகள் உங்கள் பக்கம் வருவதை உணர்வீர்கள். இதுபலர் கண்டு பரவசமடைந்த அனுபவம், தனமும், கல்வியும், தளர்வறியா மனமும், நல்லன எல்லாம் தரும் அன்னையை கைகூப்பி வணங்குங்கள், வளமான வாழ்வு பெறுங்கள்.

ஈசனின் தோழன் **குபேரரை** குதிரைமீது காணுங்கள் - கோடிப்பொன் கிடைக்கும் குறைவிலா வாழ்வு கிடைக்கும்.

**நீலமேகப்** பெருமாளை வணங்குங்கள் ''நீலமேகம்'' குளிர்ந்து மழைபொழிவது போல கேட்டதெல்லாம் கிடைத்தது நினைத்ததெல்லாம் நிறைந்து மகிழ்வீர்கள். நீலமேகப்பெருமானை உற்று நோக்குங்கள். கண்ணங்கள் குவித்து பேசுவதுபோல காட்சி கொடுப்பார். உங்களோடு பேசுவார், உரிமையோடு கேளுங்கள். அத்தனையும் தந்தருள்வார்.

**கனகவல்லி** தாயாரை கைகூப்பி வணங் குங்கள் ''கனகம்'' என்றால் 16 வகை செல்வங் கள் நிறைந்த பெட்டகம் என்று பொருள். செல்வம் அனைத்தும் தன்னகத்தே கொண்ட கனகவல்லித் தாயார் 16 வகை செல்வமும் தந்தருள்வார். தாராளமாய் கை கூப்புங்கள் ஏராளமாய் தருவார். ''ஏற்ற கலங்கள் எதிர் கொண்டு மீதளிப்ப மாற்றாதே பால் சொரியும் வள்ளல் பெரும் பசுக்களை போல'' கேட்டதற்கு மேல் கொடுக்கும் கனகவல்லித் தாயாரை வணங்க வாருங்கள்.

**இராமபக்த ஆஞ்சநேயரை** வணங்குங்கள். நலம் பல கிடைக்கும். 2007ல் நடைபெற்ற கும்பாபிஷேகத்தில் நீலமேகப்பெருமாள் சன்னதியில் புதிதாக கொடிமரம் அமைக்கப்

பெற்றது. விதானத்தில் கொடிமரத்திற்க்கென விடப்பட்ட துவாரத்தில் கொடிமரத்தை நிலை நிறுத்த பலர் முயன்றும் முடியவில்லை சேது பந்தனம் செய்தவரும், 'சஞ்சீவி' மலையைக் கொணர்ந்தவருமான - 'ராமபக்த ஆஞ்ச' நேயரை வணங்கி, பிரார்த்தித்து வேண்டுதல் செய்த பின், சில நிமிடங்களில் கொடிமரம் தம் இடம் அமர்ந்தது. சக்தி வாய்ந்த இந்த ஆஞ்சநேயரை வழிபடுங்கள். காரிய வெற்றியும், உடல் நலமும் கைகூடும்.

''ஸ்ரீராமஜெயம் ஸ்ரீராமஜெயம்''

இங்குள்ள **கருடாழ்வார்** என்கிற 'பெரிய திருவடியார்' ஆபத்துக்களில் இருந்து காத்து அபயம் வழங்குபவர்.

வடக்குவாசல் தெய்வம் **இரணியூர் காளிகாம்பாள்** ஆதிசக்தி, உக்கிரதெய்வம், எலுமிச்சம்பழமும் - குங்குமமும் இவர் பாதத்தில் சேர்த்து வணங்கினால், பில்லி, சூன்யம், பெரும்பகை, மனப்பயம் போன்றவை அடியோடு அற்றுப் போகும். 'தில்லை காளிக்கு' நிகரான சக்தி படைத்தவள். பயம் வேண்டாம் பணிவோடு செல்லுங்கள் நிறைவோடு திரும்புவீர்கள். அன்னையின் கனிவு. திரும்பத் திரும்ப சென்று வழிபடத் தூண்டும், இரணியூர் காளிகாம்பாள் மலர்கரத்தாள் பிள்ளையைத் தொட்டு, அரவணைத்து ஆறுதல் சொல்லும் தாய் என்பதை உணர்வீர்கள். குடும்பத்தோடும், சுற்றத்தோடும், செல்லுங்கள் - சுகம் பல பெறுங்கள்.

### ''நகரத்தார் சிற்பக்கலை''க்கு எடுத்துகாட்டாய் திகழும் இரணியூர் - சிற்பங்களைக் காண கண்கோடி வேண்டும்.

இரணியூர் ஆட்கொண்டநாதர் சன்னதியில் உள்ள சிற்பங்கள் உயிர் ஓவியங்கள்:

1. வல்லப விநாயகர்
2. திருக்கடையூரை நினைவு கூறும் காலசம்கார மூர்த்தி - மார்க்கண்டேயருக்கு என்றும் 16 வரம் நல்கும் அருட்காட்சி. சிவன் - லிங்கோத்பவர் - எமதருமர் - மார்க் கண்டேயர் - பாசக்கயிறு அத்தனையும் ஒரே கல்லில் வடிவமைக்கப் பெற்றது.
3. உருத்திரமூர்த்தி
4. தலாடரூபர்
5. கல்யாண சுந்தரர், மீனாட்சி திருக்கல்யாணம்
6. உருத்திர துர்க்கை
7. தூலதுர்க்கை
8. மகிடசம்காரி
9. மகா துர்க்கை
10. சலதுர்க்கை
11. சூலினி துர்க்கை
12. நவதுர்க்கை
13. விட்டுணு துர்க்கை
14. பிரம்ம துர்க்கை

(6–14: நவதுர்க்கை)

15. மாதொருபாகர்
16. விடைபாகர்
17. பிட்சாடனார்
18. அகோரமூர்த்தி
19. வீரபத்திரர்
20. முப்புரம் எரித்தவர்
21. ஆறுமுகன்

நவதுர்க்கையின் சிற்பச் சிறப்பை சிற்பக் கலை பயிலும் மாணவர்கள் ''கண்டு கற்கின் றனர்'' என்பது குறிப்பிடத்தக்கது. ஆட்கொண்ட நாதர் சன்னதிக்குச் செல்லும் நுழைவாயிலின் மேற்பகுதியில் ''சரபேஸ்வரர்'' உருவம் உள்ளது. இது சரபேஸ்வரர் உருக்கொண்டு எம்பெருமான் நரசிம்மரை ஆட்கொண்டார் என்பதை குறிக்கிறது.

அஷ்டலெட்சுமி மண்டபத்தில் உள்ள எட்டு லெட்சுமிகளின் திருஉருவங்கள் சிறப்புடை யவை.

### இராச கோபுரத்தின் தளவரிசையில் உள்ள சிற்பங்கள்

1. தட்சிணாமூர்த்தி, 2. எமதருமர், 3. வயிரவர், 4. காளி, 5. மாதொருபாகர், 6.

திருவேங்கடமுடையார், 7. அக்கினி மூர்த்தி, 8. துருவாசர், 9. கூத்தாடும் விநாயகர், 10. துவாரபாலகர், 11. பாலசுப்பிரமணியர், 12. மாணிக்கவாசகர், 13. இந்திரன், 14. முப்புறம் எரித்தவர், 15. வீரபத்திரர், 16. ஈசானமூர்த்தி, 17. கௌரி, 18. அங்காரமூர்த்தி, 19. பிரமன், 20. குபேரர், 21. குதிரைவீரன், 22. மகிடாசூர மர்த்தினி, 23. ஊர்த்துவதாண்டர், 24. வாயு பகவான், 25. கூத்தாடும் காளி, 26. இரதி, 27. மன்மதன், 28. இரணியன் - நரசிம்மர் - போர் காட்சி, 29. இரணியசம்காரம், 30. கல்யாண சுந்தரர், 31. வருணன், 32. திருமால், 33. நரசிம்மர், 34. திருதி அக்னிமூர்த்தி, 35. மன்மதன், 36. விடைபாகர்.

இக்கோவிலின் கலைப் பொக்கிசத்தைக் காப்பதையும், அதன் சிறப்பை உலகுக்கு எடுத்துச் செல்வதையும் நம் கடமையாக ஏற்போம். பல ஆராய்ச்சியாளர்கள் எழுதி உள்ள நூல்களில் இருந்தும் டாக்டர் வ. தேனப்பன் அவர்களின் ஒன்பது நகரக்கோவில்கள் என்கிற நூலில் இருந்தும் இரணியூர் பற்றி தகவல் தரப்பட்டுள்ளது. அந்த பெருந்தகைகளுக்கு நன்றி.

### நகரத்தார் மரபு வழியும் - இரணியூரும்

''கோயிலும், கோயிலைச் சார்ந்த குடிகளுமான'' நகரத்தார்கள் கி.மு. 2988ல் நாக நாட்டின் சந்தியாபுரியில் வாழ்ந்தார்கள். இவர்கள் சந்திரகுல கோத்திர வைசியர்கள் என்று அழைக்கப்பட்டனர். சைவ நெறியிலே வாழ்ந்தார்கள்.

அதன்பின் காஞ்சிபுரத்திற்கும் - அங்கிருந்து காவிரிப் பூம்பட்டிணத்துக்கும் புலம்பெயர்ந்தார்கள். மன்னர் பின்னோர் என்று அழைக்கப்பட்ட நகரத்தார்கள் செல்வச் செழிப்பாய் வாழ்ந்து வந்தார்கள்.

பூவந்திச் சோழன் நகரத்தார் குலப் பெண்ணைச் சிறை வைத்தமையால் தம் ஆண் பிள்ளைகளை ஆத்மநாத சாஸ்த்திரியிடம் விட்டு விட்டு, இன் உயிரை மாய்த்துக் கொண்டார்கள். அதன்பின் சாஸ்த்திரிகளால் வளர்க்கப்பட்ட பிள்ளைகளுடன் சவுந்தர பாண்டிய மன்னர் காலத்தில் பாண்டிய நாட்டுக்கு வந்து சேர்ந்து திருநெல்வேலி, வேளாளர் குலத்தில் (வீரசைவர்கள்) பெண் எடுத்துக் கொண்டார்கள். பின் எந்தவித கொள்வினை கொடுப்பினை இல்லை என்கிற நிபந்தனையுடன் இஃது மேற்கொள்ளப்பட்டதால் அதன்பின் எந்தவித மான திருமண பந்தங்களும் செய்து கொள்வதில்லை. நகரத்தார் திருமண முறைகளில் ''வெள்ளாட்டிக்கு பணம் எழுதுவது (அல்லது) பணம் முடிவது என்னும் பழக்கம் இன்று வரை இருந்து வருவது இதை மெய்ப்பிக்கிறது.

நகரத்தார்களுக்கு குருபீடமான கோவிலூரில் (காரைக்குடி) குடிகொண்டுள்ள இறைவர் கொற்றவாளீசுவரர் இறைவி நெல்லை உமை அன்னை ''நெல்லைஉமை என்கிற திருநாமம் திருநெல்வேலி வீர சைவர்கள் பெண் கொடுத்த உதவியதை நினைவில் கொள்ள சூட்டப் பெற்ற பெயர். கொற்றவாழீசர் என்பது இழந்த, கையை திரும்பக் கொடுத்தவர் என்னும் பொருள்பட அமைந்தது.

பூங்கொன்றை வேலங்குடி கல்வெட்டுக்கள் மூலம் நகரத்தார்கள் கி.பி. 718ம் ஆண்டில் ஏழு கோவிலைக் கொண்டு பாண்டியநாட்டில் குல சேகரதேவர் குருமன்னன் ஆட்சிக்கு உட்பட்டு இருந்தார்கள். அதுசமயம் இரணியூர் கோவிலையும் பிள்ளையார்பட்டிக் கோவிலையும் தோற்றுவித்து, ஒன்பது கோவில் நகரத்தார்கள் என அழைக்கப்பட்டனர்.

இளையாத்தங்குடிக் கோவிலில் இருந்து திருவேட்பூருடையார் என்கிற பிரிவில் இருந்து அண்ணன், தம்பி ஆகிய இருவர் முறையை இரணியூர் - பிள்ளையார்பட்டி என்கிற பிரிவை தோற்றுவித்தார்கள். இரணியூர் - பிள்ளையார் பட்டிக் கோவிலைச் சேர்ந்தவர்கள். திருமண வீட்டில் எழுதிக் கொள்ளும் ''இசைவுப் பிடி மானத்தில்'' ஒரே வாசகம் இடம் பெற்றிருப்பது இதை உறுதி செய்கிறது.

நகரத்தார்களின் நிர்வாக மேன்மையையும் நேர்மையையும் கண்டு ஒன்பது நகரக் கோவில்கள் உள்ள ஊர்களில் இருக்கும். கிராம தேவதைகளின் கோவில்களும் ஊர் மக்களால் நகரத்தார்களிடம் ஒப்படைக்கப்பட்டது.

### நகரக் கோவில்கள் ஒன்பது

1. இளையாற்றங்குடி கோவில்
2. மாத்தூர் கோவில்
2. இலுப்பைக்குடி கோவில்
4. பிள்ளையார்பட்டி கோவில்
5. வயிரவன் கோவில்
6. நேமம் கோவில்
7. சூரக்குடி கோவில்
8. இரணிக்கோவில்
9. வேலங்குடி கோவில்

### சிவனேச செல்வர்கள் பார்வைக்கு சில தகவல்கள்

### சோதி லிங்கங்கள்

1. இராமேஸ்வரம் (தமிழ்நாடு)
2. ஸ்ரீசைலம் (ஆந்திரா)
3. பீமசங்கர் (மகாராஷ்டிரா)
4. கிரிஷ்னேஷ் (மகாராஷ்டிரா)
5. தியாகம்பரேஸ்வரர் (மகாராஷ்டிரா)
6. சோமநாதர் (குஜராத்)
7. நாகேஸ்வர் (குஜராத்)
8. உஜ்ஜயினி (மத்தியபிரதேசம்)
9. ஓம்காரேஸ்வரா (மத்தியபிரதேசம்)
10. வாரணாசி (காசி) (உப்பிரபிரதேசம்)
11. கேதார்நாத் (உத்திரப்பிரதேசம்)
12. வைத்தியநாத் (பீகார்)

### பஞ்சபூத தலங்கள்

1. ஸ்ரீகாளகஸ்தி - வாயு (காற்று)
2. காஞ்சிபுரம் - பூமி (பிருதிவி)
3. திருவண்ணாமலை - நெருப்பு (அக்னி)
4. சிதம்பரம் - வானம் (ஆகாயம்)
5. திருவானைக்காவல் - நீர் (அப்பு)

### அட்டவீரட்டத் தலங்கள்

1. திருக்கோவிலூர் - அந்தகாதர சம்ஹாரம்
2. திருவதிகை - திரிபுவனத் தகனம்
3. திருக்கடவூர் - காலனை (எமனை) உதைத்தல்
4. பரசலூர் - தக்கனின் தலை நீக்குதல்
5. குருக்கை - காமதகனம்
6. வழுவூர் - கஜாசுரசம்ஹாரம்
7. விற்குடி - ஜலந்தராசு சம்ஹாரம்
8. கண்டியூர் - பிரம்மனின் தலையை அறுத்தல்

### சப்தவிடத்தலங்கள் (ஸ்படிக லிங்கங்கள் உள்ள ஏழு திருக்கோவில்கள்)

1. திருவாரூர்
2. திருநள்ளாறு
3. நாகப்பட்டினம்
4. திருக்குவளை
5. திருவைமூர்
6. திருக்காரைவாசல்
7. வேதாரண்யம்

### பஞ்ச சபைகள்

1. சிதம்பரம் - கனகசபை - ஆதிசபை - ஆனந்த நடனம் - மூத்தசபை
2. திருவாலங்காடு - இரத்தினசபை - ஊர்த்துவ நடனம் (காரைக்கால் அம்மையாருக்கு இறைவன் ஆடல் காட்சி கொடுத்த தலம்)
3. மதுரை - வெள்ளியம்பலம் - சந்தியா நடனம் (குலசேகர பாண்டியனுக்காக - கால்மாறி நடனமிட்டு அருள்செய்த சபை)
4. திருநெல்வேலி - தாமிரசபை - முனி நடனம்
5. திருக்குற்றாலம் - சித்திரசபை - திரிபுர நடனம்

**நவக்கிரகத் தலங்கள்**

1. சூரியன் - சூரியனார் கோவில்
2. சந்திரன் - திருவாரூர் - திங்களூர்
3. செவ்வாய் - வைத்தீஸ்வரன் கோவில்
4. புதன் - திருவெண்காடு
5. வியாழன் - ஆலங்குடி - திருச்செந்தூர்
6. சுக்கிரன் - கஞ்சனூர்
7. சனீஸ்வரர் - திருநள்ளாறு
8. இராகு - திருநாகேஸ்வரம்
9. கேது - கீழப்பெரும்பள்ளம் (இராகு, கேது, ஸ்ரீகாளாஸ்தி)

சமயக்குரவர்கள் எனப் போற்றி வணங் கப்படுகிற திருஞான சம்மந்தர் திருநாவுக்கரசர் - சுந்தரமூர்த்தி சுவாமிகள் மாணிக்கவாசகர், ஆகிய நால்வர் உள்ளிட்ட **63 நாயன்மார்களால்** பாடல் பெற்ற சிவத்தலங்கள் **தேவாரத் திருமுறைத் தலங்கள்** என்றழைக்கப்படுகிறது.

**திருமுறைத்தலங்களாவன:**

1. சென்னை மயிலாப்பூர் திருவாலங் காடு உள்ளிட்ட தொண்டை நாட்டுத் தலங்கள் 32
2. திருவண்ணாமலை திருவதிகை உள்ளிட்ட நடுநாட்டுத் தலங்கள் 22
3. திருவெண்காடு வைத்தீஸ்வரன் கோவில் சீர்காழி, திருவையாறு, திருநாரையூர் திருஆனைக்கா உள்ளிட்ட காவிரி வடகரை நாட்டுத் தலங்கள் 63
4. திருச்சிராப்பள்ளி, குடந்தை, திருக் கண்டியூர், திருக்கடவூர், திருநள்ளாறு, ஸ்ரீவாஞ்சியம் உள்ளிட்ட காவிரி தென் கரை சோழ நாட்டுத்தலங்கள் 127
5. திருஆலவாய் (மதுரை) இராமேஸ் வரம், திருநெல்வேலி திருப்புவனம், உள்ளிட்ட பாண்டிய நாட்டுத்தலங்கள் 14
6. அவிநாசி, கரூர் உள்ளிட்ட கொங்கு நாட்டுத்தலங்கள் 2
7. திரு அன்னக்களம் என்னும் மலை நாட்டுத்தலம் ஒன்று
8. திருக்கோகர்ணம் என்னும் துளுவ நாட்டுத்தலம் ஒன்று
9. திருக்கேதாரம் ஸ்ரீசைலம் உள்ளிட்ட வடநாட்டுத் தலங்கள் 5
10. திருக்கோணமலை திருக்கேதீசுவரர் முன்னம் ஈழ நாட்டுத்தலம் இரண்டு என வகைப்படுத்தப் பெற்றது.

**மாணிக்கவாசகர் (பாடி மகிழ்ந்த) திருவாசகத்தலங்கள்**

திருப்பெருந்துறை (ஆவுடையார் கோவில்)
தில்லை (சிதம்பரம்)
திரு. உத்திரகோசமங்கை
திருவண்ணாமலை
திருக்கழுக்குன்றம்
சீர்காழி
திருவாரூர்

**திருவிசைப்பா - திருப்பல்லாண்டு தலங்கள்:**

சிதம்பரம்
கங்கை கொண்ட சோழபுரம்
களந்தை ஆதித்தேச்சரம்
கீழ்க்கோட்டூர் மணியம்பலம்
திருமுகத்தலை
திரைலோக்கியசுந்தரம்
திருப்புவனம்
திருச்சாட்டியக்குடி
தஞ்சை இராச ராசேச்சரம் (பெரிய கோவில்)
திருவிடைமருதூர்
திருவாரூர்
திருவீழிமிழலை
திருவாவடுதுறை
திருவிடைக்கழி

**திருத்தொண்டர் 63 நாயன்மார்களில்**

திருமறையோர் 13 ஆதிசைவர் 5
மாமாத்திரம் - 1 முடிமன்னர் 6 -
குறுநில மன்னர் - 5

வணிகர் 5 - வேளாளர் 13 - ஆயர் 2
சாலியார் 1 - குயவர் - 1
செக்கார் 1 - பரதவர் - சான்றார் 1
ஏகாலியார் - 1 வேடர் - 1 - புலையர் 1
பாணர் - 1 மரபறியாதவர் - 4
என கண்டறியப்பட்டுள்ளது.

### பெரியபுராணம்

பெரியபுராணம் என்னும் திருத்தொண்டர் புராணம் இறைவனால் ''உலகெலாம்'' என அடி எடுத்துக் கொடுக்கப்பட்டு அருள்மொழித்தேவர் என்னும் சேக்கிழாரால் 4286 பாக்களுடன் இயற்றப்பட்டது. அநபாயச் சோழர் காலத்தில் இயற்றப்பட்ட பெரியபுராணம் தில்லை கனக சபையில் அம்பலவாணர் ஆனந்தத் தாண்டவம் புரிந்த திருவாதிரை நாளில் - சித்திரை மாதம் பொன்னம்பலத்தில் ''ஈசன்'' முன் வைக்கப் பெற்றது. இதற்கு முன் திருமுறைகளைப் பதினொன்றாக வகுத்து வைத்தவர் நம்பி ஆண்டவர் நம்பிகள் ஆவார்.

### காரைக்கால் அம்மையார்

பெரியபுராணத்தில் நகரத்தார் மரபைச் சார்ந்த புனிதவதி என்னும் காரைக்கால் அம்மையாரின் சரிதத்தை சேக்கிழார் பெரியபுராணத்தில் நெக்குறுக வழங்கி இருக்கிறார். அம்மை அப்பனை தரிசிக்க வேண்டி கயிலைமலை சென்ற காரைக்கால் அம்மையார் கயிலை மலையை காலால் மிதிக்க அஞ்சி தலையால் நடந்து ஏறினார். தலை எலாம் புண் உண்டாக இரத்தம் வடிந்தது. ஈசனை நினைத்து உள்ளம் உருகினார். தாயும் - தந்தையும் இலாத - ஆதி அந்தமில்லாத, பிறப்பில்லா பெரியோன் ஈசன் ''அம்மையே'' என்று அழைத்து யாது வேண்டும்? கேள் என்று கேட்கிறார். அம்மையார் அப்பனே பிறவாமை வேண்டும். பிறப்பு உண்டேல் உன்னை ஒருபோதும் மறவாமை வேண்டும். நீ ஆனந்த நடனம் செய்யும்போது உமது திருவடியின் கீழ் மகிழ்ந்து பாடிக்கொண்டு நான் இருக்க வேண்டும் என்று வேண்டினார். கைலாசநாதர் அதுபோல் வரம் நல்கி திருவாலங்காட்டில் தமது நடனத்தை காணும்படி கருணை புரிந்தார். அம்மையாரும் திருவாலங்காட்டிற்கு வந்தபோது அத்தலத்தை காலால் மிதிக்க அஞ்சித் தலையினால் நடந்து வந்தடைந்தார். அவ்வூரில் சிறுகற்களும் சிவனாகத் தெரிந்ததால் தலையால் நடக்கத் தலைப்பட்டார். இன்றும் திருவாலங்காட்டுக்கு முன்பு உள்ள ஆற்றில் மிகுந்த சிறுகற்கள் - லிங்க வடிவில் கிடைப்பதை நாம் பார்க்கலாம். ரெத்தினசபை என்னும் திருவாலங்காட்டில் எம்பிரான் ஊர்த்துவதாண்டவம் செய்வதை அம்மையார் தரிசித்து பதிகங்கள் பாடியருளினார். இன்றும் காரைக்கால் அம்மையார் திருவாலங்காட்டில் ரெத்தின சபையில் திருநடனம் கண்டு ஆனந்தம் கொண்டு அமர்ந்திருப்பதாக உணரப்படுகிறது. இறைவனால் ''அம்மையே'' என்று அழைக்கப் பெற்ற அரும் பெருஞ்சிறப்புடைய தாய் காரைக்கால் அம்மையார் ஒருவரேயாகும்.

''இறவாத இன்ப அன்பு வேண்டிப்பின் வேண்டுகின்றார். பிறவாமை வேண்டும் - மீண்டும் பிறப்புண்டேல் உன்னையென்றும் மறவாமை வேண்டும். இன்னும் வேண்டும் நாள் மகிழ்ந்து பாடி அறவா - நீ ஆடும் போதுன் அடியின் கீழ் இருக்க'' என்றார் என பெரிய புராணத்தில் சேக்கிழார் காரைக்கால் அம்மையாரின் சரிதத்தை நெக்குறுக தொடுத்திருக்கிறார்.

இதுபோலவே மற்ற நாயன்மார் சரிதங்களையும் உள்ளம் நெகிழ உரை செய்திருக்கிறார். பெரியபுராணத்தைப் படிப்பவரும் திருத்தொண்டர் ஆகுவர்.

### ஆட்கொண்ட திருமுறைபதிகங்கள்

என் அப்பன் என்னையும் ஆட்கொண்டான் நாயிற்கடையேனையும் ஆட்கொண்டான் என்று திருத்தொண்டர்களால் பலமுறை பாடப்பெற்ற திருமறைகளில் இருந்து ஈசன் அடியவரை ''ஆட்கொள்கிறபாங்கை'' தெரிந்து கொள்கிறோம். இரணியூரில் கோவில் கொண்டுள்ள

எம்பெருமான் 'ஆட்கொண்டநாதர்' அவரே நம்மையும் ஆட்கொள்ள வேண்டி திருமுறைகளில் இருந்து சில பதிகங்கள் தரப்பெற்றுள்ளது. இந்த திருமுறைகளை ஓதுங்கள் உங்களையும் ஆட்கொள்வார்.

## 1-ம் திருமுறை - (திருஞானசம்பந்தர்)

மற்றினை இல்லா மலைதிரண்டன்னதிண்
தோளுடையீர்
**கிற்றெமையாட்கொண்டு** கேளாது,
ஒழிவதுந்தன்மை கொல்லோ
சொற்றுனை வாழ்க்கை துறந்துந்
திருவடியடைந்தோம்
செற்றொமைத் தீவினை தீண்டப் பெருதிரு
நீலகண்டம்.

## 2-ம் திருமுறை

கனிதனைக் கனிந்தவரைக்
**கலந்தாட்கொள்ளும்**
முனிதனை மூவுலகுக் கொரு மூர்த்தியை
நனிதனை நல்லவர்தாந் தொழும்
வெண்ணியில்
இனிதனை யேத்துவர் ஏதுமிலாதரே.

## 4-ம் திருமுறை திருநாவுக்கரசு சுவாமிகள்

சாடவெடுத்தது தக்கன்தன் வேள்வியிற்
சந்திரனை
வீட வெடுத்தது காலனை - நாரணன் நான்
முகனும்
தேட வெடுத்தது தில்லையும் சிற்றம்பலந்து
நட்டம்
''ஆடவெடுத்தபாத'' மன்றோ **நம்மையாட்
கொண்டதே.**

மாய்ந்தன தீவினை மங்கின நோய்கள்
மறுகிவிழத்
தோய்ந்தன பாவஞ் செறுக்கில்லா நம்மைச்
செற்ற நங்கைக்
காய்ந்தபிரான் கண்டியூரெம் பிரானங்கம்
ஆறினையும்
ஆய்ந்த பிரானல்லனோ அடியேனை யாட்
**கொண்டவனே.**

## 5-ம் திருமுறை

தேடிச்சென்று திருந்தடி ஏத்துமின்
நாடிவந்தவர் நம்மையும் **ஆட்கொள்வார்**
அடிப் பாடி யண்ணாமலை கை தொழ
ஓடிப் போம்நம துள்ள வினைகளே.

## 6-ம் திருமுறை

முடிகொண்டார் முளையிள வெண்டிங்களோடு
- முசுமிள நாகமுடனாகக் கொண்டார்
அடிகொண்டார் சிலம்பலம் புகழுமார்ப்ப
பவடங்காத முயல கனையடிக் கீழ்க்கொண்டார்
வடிகொண்டார்ந்திலங்கு மழுவலங்கைக்
கொண்டார். மாதையிடப்பாகத்தே
மருவக் கொண்டார்
துடி கொண்டார் கங்காளந் தோன் மேற்
கொண்டார் சூலை தீர்த்தடியேனேயாட்
**கொண்டாரே**

## 7-ம் திருமுறை சுந்தரமூர்த்தி நாயினர்

பேராது காமத்திற் சென்றாற் போலன்றியே
பிரியாதுள்கிச்
சீரார்ந்தவன் பராய்ச் சென்று முன்னடி -
வீழுந்திருவினாரை
ஓராது தருமனார் தமர் செக்கிலிடும் போது -
**தடுத்தாட்கொள்வான்**
பெரியோர்கள் புலியூர்ச் - சிற்றம்பலத்
தெம்பெருமானைப் பெற்றாமன்றே.

**ஓடியாட்கொண்டு** போயொளித் திட்டவுச்சிப்
போதனை நச்சாவார்த்த
பட்டியைப் பகலையிரு டன்னைப் பாவிப்பார்
மனத்தூற - மத்தேனைக்
கட்டியை கரும்பின்றெளி தன்னைக் காதலாற்
- கடற்சூர் தடிந்திட்ட
செட்டியப்பனைப் பட்டனைச் செல்வ
வாரூரானை மறக்கலுமாமே.

## +8-ம் திருமுறை மாணிக்கவாசக சுவாமிகள்

கண்ணப்பர் ஒப்பதோர் அக்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும்
**ஆட்கொண்டருளி**
வண்ணப் பனிந்தென்னை வாவென்ற
வான் கருணைச்

கண்ணப் பொன் நீற்றற்கே சென்றூதாய்
கோத்தும் பீ.

விண்ணாளும் தேவர்க்கு மேலாய வேதியானை
மண்ணாளும் மன்னவர்க்கு மாண்பாகி
நின்றானைத்
தண்ணார் தமிழளிக்கும் தென்பாண்டி நாட்டானை
பெண்ணாளும் பாகனைப் பேணு
பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனே **ஆட்கொண்ட**
அண்ணாமலை யானைப் பாடுதுங்காண்
அம்மானை.

பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள் தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனே **ஆட்கொண்ட**
ஐயா என் ஆருயிரே, அம்பலவா என்றவன்றன்
செய்யார் மலரடக்கே சென்றுதாயற் கோத்தும்பீ.

பிட்டு நேர்பட மண்சுமந்த பெருந்துறைபெரும்
பித்தனே
சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன்
உன்னைச் சார்ந்திலேன்
கிட்டனே சிவலோகனே சிறு நாயினுங்
கடையாயவெம்
கட்டனேனையும் **ஆட்கொள்வான்** வந்து
கட்டினாய் கழுக்குன்றிலே.

## 9-ம் திருமுறை
## திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

எம்பந்த வல்வினை நோய் தீர்த்திட்
டெமையாளும்
சம்பந்தன் காழியர் கோன்றன்னையும்
**ஆட்கொண்டருளி**
அம்புந்து கண்ணாளுந்தானும் அணிதில்லைச்
செம்பொன் செய் அம்பலமே
சேர்ந்திருக்கையாயிற்றே.

## 12-ம் திருமுறை பெரியபுராணம்,
## சேக்கிழார் சுவாமிகள்

அன்றிரவே ஆதிபுரி ஒன்றிக்கொண்டார்
**ஆட்கொண்ட**
பொன்திகழ் புண்வன் தொண்டர் புரிந்தவினை
முடித்தருள
நின்று புகழ் திருஒற்றியூர் நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள
உணர்த்துவார்.

''மாதோர்பாகத்தாரை'' மனம் கொண்டு சிந்திக்க
மாண்புமிக மகத்துவமும் நல்வாழ்வும்
தந்தருளி **ஆட்கொள்வார்.**

## இரணியூர் ஸ்ரீ ஆட்கொண்டநாதர் சிவபுரந்தேவி அறக்கட்டளை

*நீடு புகழ்பெற்று நிறை செல்வம் பெற்று இப்புவி உள்ளவரை திருத்தொண்டில் சிறந்து சீர்பெற ஆட்கொண்டநாதர் - சிவபுரந்தேவியை பிரார்த்தித்து வாழ்த்துவோம்.*

''காவியங்கள் ஐந்தினிலும் முன்றிலே
தலைதூக்கிக் காட்டுவதும் எங்கள் குலமே
தர்மத்தைப் பாடுவது சாதி வெறியாகாது
தமிழுக்கே நன்மை என்பேன்.''

*என்று கவியரசு கண்ணதாசன் வாழ்த்திய நகரத்தார் சமுதாயம் 'அளவிலே பெரிதாக வளர்ந்து செயலிலே சிறந்து பல்லாண்டு வாழ்ந்து சிறக்க நலமும்' வளமும் பெற வாழ்த்துவோம்.*




*உலக வரலாற்றில் பதியப்பட்ட நகரத்தார் வாழ்வியல் - பண்பாடு - வளர்க! வாழ்க!*

எழுத்தும் - தொகுப்பும்
**மு. பெரியணன்**
திண்டுக்கல் - நெற்குப்பை
செல் : 98421 42502

# நாடு போற்றும் நகரத்தார்



கவிஞர் சேவு முத்துக்குமார்
காரைக்குடி
அலைபேசி : 9443288931

நாட்டுக் கோட்டை நகரத்தார்
நலம்பல பெறவே மன்னனிடம்;
கேட்டுப் பெற்ற நல்லூர்கள்
தொன்னூற் றாரின் அடிப்படையில்;
நாட்டிய கோயில் ஒன்பதுவாம்
நலமாய்ச் சைவ நெறிஎன்றும்;
காட்டிய பாதையில் வாழ்பவர்கள்
கருணைக் கடலாய்ச் சிறப்பவர்கள்!

மானம் ஒன்றே பெரிதென்று,
மதித்து வாழும் நகரத்தார்;
தானம் தர்மம் செய்வித்தே
தன்னல மின்றிச் சிறப்பவர்கள்!
தேனாய் இனிக்கும் பேச்சாலே;
தெள்ளு தமிழைக் காப்பவர்கள்!
ஊனம் மனதில் இல்லாமல்
உலகில் நன்மை செய்பவர்கள்!

சிற்றூர் வாழும் மக்களுமே;
சிறந்திட சாலை அமைத்திடுவர்!
நற்பலன் நல்கும் மரங்களையும்
நாற்புறம் நட்டுக் காத்திடுவர்!
பற்பலர் பயனுற சுமைதாங்கிக்
கற்களை நடுவர் இளைப்பாற;
நற்பய னாக நீர்ப்பந்தல்
நல்கித் தாக்கம் தீர்த்திடுவர்!

மருத்துவ மனைகள் ஊர்தோறும்
மகிழ்வாய் கட்டி நலம்சேர்ப்பர்!
பெருநிலம் வியக்கப் பள்ளிகளைப்
பெரிதாய்க் கட்டிப் புகழ்பூப்பர்!

திருவிழா நிகழும் போதெல்லாம்
திரளும் மக்கள் பசியாற;
வருவாய் தன்னில் சத்திரங்கள்
வகையாய்க் கட்டி பசிதீர்ப்பர்!

ஆலயப் பணியே அறப்பணியாம்;
அன்பே தாரக மந்திரமாம்;
காலமும் நேரமும் போற்றிதிசை
காட்டும் கருவியாய் வாழ்பவர்கள்!
வானை அளக்கும் கட்டடங்கள்
வளன்மனை யாக அமைத்தவர்கள்!
சேனைப் படையிலா மன்னனாகச்
செழிப்புடன் உலகில் திகழ்பவர்கள்!

செந்தூர் நின்று அருள்வழங்கும்
செட்டி முருகன் துணையாலே;
வந்த அயலக தேசமெங்கும்
வாணிகம் செய்தே பொருளீட்டி
சிந்தை நிறைந்த கடவுளுக்குச்
சிறப்பாய்க் கோயில் பலஎழுப்பி;
இந்து மதத்தை உலகெங்கும்
ஏற்றம் பெறவே செய்தவர்கள்!

கோயில் கூரை விரிசலானால்
கூப்பிடு வார்கள் செட்டியாரை;
கோயில் கட்டியும் புதுப்பித்தும்
குளங்கள் வெட்டிப் பாடசாலை
ஆயிரம் ஆயிரம் கட்டியுமே
அத்தனை இடத்திலும் பசுமடங்கள்
தாயுளம் கொண்டே கட்டுவித்து
தன்னலம் இன்றி வாழ்பவர்கள்!

கல்விச் சாலை அமைத்துபலர்
கண்ணைத் திறந்த மேன்மைக்குடி!
பள்ளிகள் துவங்கி கல்லூரி
பற்பல படைத்த நல்லகுடி!
பல்கலைக் கழகம் நிறுவிநிதம்
பல்துறை வல்லுநர் உருவாக்கி;
நல்வித மாக நாட்டுநலன்
நாளும் காக்கும் உயர்ந்தகுடி!

உண்மை உழைப்பு உயர்வுநலம்
ஒருங்கே பெற்ற நகரத்தார்
மன்றில் ஆடும் ஈசனையே
மனதில் போற்றித் துதிப்பவர்கள்!
முன்னோர் சொல்லை மூச்சாக
முழுதும் பற்றி வாழ்பவர்கள்!
நன்றாய் செய்யும் கொடையாலே
நாட்டைச் சிறக்கச் செய்பவர்கள்!

சைவராக இருந்திடினும்
சமரச ஞானம் உடையவர்கள்!
சிவனை வழிபடும் வேளையிலும்
திருமால் வணக்கம் செய்திடுவர்!

தவமே செய்ய வேண்டுமம்மா
தகுதி மிக்க இக்குலத்தில்
நலமாய்ப் பிறந்து வளங்காத்து;
நல்லோர் வாழ்த்தைப் பெறுவதற்கே!

அறிவில் சிறந்த நகரத்தார்
அகத்தில் அன்பு கொண்டவர்கள்!
பெரிய முயற்சி கொண்டுதினம்
பெருந்தொழில் செய்து புகழ்சேர்ப்பர்!
அரிது இவர்போல் ஓரினத்தை
அகிலம் காண்பது இனிமேலே;
சிறிய இனம்தான் என்றாலும்
சிறந்த சாதனை கொண்டஇனம்!

இப்படி வாழ்வதே வாழ்க்கையென
இயற்றினர் விதிகள் நம்மவர்க்கு
அப்படி வாழ்ந்து சிறப்போரை
அகிலம் விரும்பும் அறிந்தோமே!
தப்பிதம் இன்றி வாழ்கின்ற
தகுதி மிக்க செட்டிகுலம்
ஒப்பில் லாத உயர்ந்தகுலம்
உலகில் உண்டோ சொல்லம்மா!





# பக்தி மார்க்கம்

முவீ.அ.கா. அண்ணாமலை
கடியாபட்டி

ஞானமார்க்கம், யோகமார்க்கம், கர்ம மார்க்கம் முதலான மார்க்கங்களைவிட, பக்தி மார்க்கம் எளிதானது! அதாவது, பக்தி மார்க்கத்தைப் பின்பற்றுவது எளிது! மூச்சையும் மனதையும் அடக்க வேண்டிய கடினமான பயிற்சி, இந்த மார்க்கத்தில் இல்லை! இதற்குப் பணம் தேவையில்லை! விரதங்கள் இருக்கத் தேவையில்லை! வர்ணாஸ்ரமங்களின் தடைகள், அதைத் தாக்குவதுமில்லை!

பக்தி மார்க்கத்தில்தான் ஜாதியிலும், பெயரிலும் சிறப்பில்லை என்ற பெரிய உண்மையை, எல்லோராலும் பின்பற்ற முடியும்! இறை நாமத்தைச் சொல்வதற்கு எந்தப் பிரிவினருக்கும் தடையேதுமில்லை! அந்தணரில் சிறந்த, ஸ்ரீசைதன்யரும், பெண்மணியான மீரா பாயும் - யாருமே பக்தி மார்க்கத்தில் சிறப்படையத் தடையில்லை!

பக்தி மார்க்கத்தில், மனிதர்களை இயற்கைக்கு எதிராக மனதையும், புலன்களையும் அடக்கச் சொல்லவில்லை! மாறாக, இறைவன் பால் அவைகளைத் திருப்பிவிடச் சொல்கிறது! பக்தி மார்க்கம், எல்லோராலும் எளிதாகப் பின்பற்றக் கூடியது! அது, முக்தி நிலைக்குக் கொண்டு செல்கிறது! இதுவே அதன் சிறப்பு!

கடவுளின் கீர்த்தியைக் கேட்பது, அவன் பெருமைகளை பாடுவது, அவனை எப்பொழுதும் நினைப்பது, அவனது பாதங்களுக்கு சேவை செய்வது, வணங்குவது, வழிபாடு செய்வது இறைவனின் சேவகன் என்ற வகையில், தொண்டாற்றுவது, அவனுடைய நண்பனாவது, அவனிடம் சரணாகதி அடைவது என்பன, ஸ்ரீமத்பாகவதத்தில், கடவுளை பூஜிக்கும் ஒன்பது அங்கங்களாகக் குறிப்பிடப்பட்டுள்ளது!

பக்தி இருப்பவனிடம், மேலும் பக்தி அதிகரிக்க, விக்கிரகங்கள் உதவுகின்றன! கடவுளிடம் நட்பு பாவிப்பதுவும், முழுவதும் சரணாகதி அடைவதும், முதலில் கடினமாக இருக்கும்! ஆனால், சாதாரண பக்தன்கூட, கடவுளின் பெருமையைக் கேட்பதிலும், பாடுவதிலும், விக்ரகங்களை ஆராதிப்பதிலும், பலவிதமான சேவைகளில் ஈடுபடுவதிலும், எளிதாகப் பயிற்சி செய்யலாம்! ஆலயங்களுக்குச் சென்று, கடவுளை வணங்குவது, கடவுள் ஆராதனையாகக் கூறப்பட்டுள்ளது!

ஆனால், பக்தி மார்க்கத்தில், இந்த யாத்திரை, அவசியமான அங்கம் அல்ல! உலகில், மக்கள் பொருட்களின் மேல்பற்று வைப்பது போல், கடவுளையும் நேசிக்கிறார்கள்! பக்தி மார்க்கத்தில் பலவழிகள் கூறப்பட்டுள்ளன! அவைகளில், ஒன்றையாவது, ஈடுபாட்டுடன் சிரத்தையுடனும் மேற்கொண்டால், உயர்ந்த பக்தி நிலையை அடையலாம்!

மூன்றுவிதமான தவங்களை எடுத்துக் கொண்டு, விதிமுறைகள் மீறாமலும், செய்த புனிதப் பயணம், நம் மனதையும் புலன் களையும் சுத்திகரித்து, இறைவன்பாலுள்ள

ஈடுபாடுகளை அதிகரிக்கிறது! எதைக் காண்பதால், மனம் அமைதி அடைந்து, பரமேஸ்வரன்பால் திரும்புகின்றதோ, அதை தரிசனம் என்கிறோம்! ஏனெனில், அந்தப் புனிதப் பயணம் மூன்றுவிதமான பயிற்சிகளுக்கு தரிசனம் அளித்து, மற்றவைகளைவிட, சிறந்த பக்தியாக ஒளிர்கிறது!

மனிதர்களுடைய விருப்பங்களும், ஈர்ப்புகளும் தங்களுடைய நிலைமைகளுக்கு ஏற்றாற்போல் மாறுவதால், அவர்கள் முக்தியை அளிக்கும் நான்கு பாதைகளில் ஒன்றைத் தேர்ந்தெடுப்பதிலும் மாறுபடுகிறார்கள்! சிலர், கடவுளின் பெருமைகளைப் பாடுவதன் மூலம், கடவுளை வழிபடுகிறார்கள். மற்றவர்கள் பணம் செலவழித்து, 16 அங்கபூஜைகள் செய்து, வழிபடுகிறார்கள்!

சிலர், இந்த உலகை ஆளும் இறைவனின் நினைவில், அமைதியாக, ஆனந்தம் அடைகிறார்கள்! சிலர் கஷ்டங்களை அனுபவித்து, தொலைவில் உள்ள கோயில்களுக்குச் சென்று, எங்கும் பரவியிருக்கும் அந்த, மாயஜாலக்காரனை வழிபடுகிறார்கள்! மற்றும் சிலர், எல்லா வழிகளிலும் சமமாக ஈடுபாடு உள்ளவர்களாக இருக்கிறார்கள்! இவ்வாறு ஒருவன், ஆழ்ந்த அன்புடனும், நம்பிக்கையுடனும் இந்த பக்தி மார்க்கங்களைப் பழகும் பொழுது, அவன் இறைவன்பால் ஆழ்ந்த பக்தி செலுத்துகிறான்! இறைவன் அருளால், மனத்தூய்மை அடைந்து, வேதாந்த அறிவை அடையத் தகுதி பெறுகிறான்! அதுவே, அவனுக்கு முக்தி அடையும் மார்க்கமாக இருக்கிறது! மனத்தின் சூட்சுமமான வாசனைகளான, பற்றுதல்களும் வெறுப்புகளும் அழிந்தால்தான், உயர்ந்த தத்துவமான, அத்வைத உண்மையை அடையத் தகுதி உள்ளவனாகிறான்!

உண்மையான அறிவு நிலை என்பது, மனம் இடையறாது அழிவற்ற, இரண்டற்ற உண்மை நிலை என்னும் ஆத்மாவை அடைவதுதான்! இந்த ஞான நிலைக்கு, ஏறுவதற்கும், அதில் நிலைத்திருப்பதற்கும் ஒருவன் தன் மனதிலிருக்கும் எதிர்மறை எண்ணங்களை, அடியோடு அழிக்க வேண்டும்! இதற்கு, இறைவனிடம் ஈடுபாடும் இறையருளும் மிக மிக அவசியம். இந்த அழிவு இல்லாமல், புனர்ஜென்மம் எடுக்கும் வாழ்விலிருந்து, நமக்கு விடுதலை கிடையாது!

பக்தியை இரண்டாகப் பிரிக்கலாம்! 1) கீழ்நிலை பக்தி! 2) உயர்நிலை பக்தி! உயர்நிலை பக்தி அதிகரிக்கையில், ஜீவன், ஈஸ்வரன் - உலகம் என்ற இரட்டை நிலையைத் தொடுவதில்லை! அது பிரம்ம நிலையில் ஒளிர்கிறது! ஆகையால் சிலர், பராபக்தி ஆகிய உயர்நிலை பக்தியே, வேதாந்திகளின் பிரம்மஞானம் எனக் கூறுகிறார்கள்! அது எவ்வாறாக இருந்தாலும், உடல் அளவிலும் மனதளவிலும், சக்திகள் குறைந்த இந்தக் காலத்தில், மோட்சம் அடைய நினைக்கும் பக்தனுக்கு, இறைவனின் தாமரைப் பாதங்களிடம் அன்பு வைப்பதுதான் சிறந்த பக்தி ஆகும்!

இறைவனுக்குப் பெயரும், உருவமும் இல்லாவிட்டாலும் வார்த்தைகளாலும், மனதாலும் அவனை அடைய முடியாவிட்டாலும், பக்தி மார்க்கத்தால் மட்டுமே பரமனைச் சேரலாம்! பல மதங்களை நிறுவிய, மதபிரசாரர்கள் பக்தி மார்க்கத்தின் மேன்மையை அறிந்திருந்தார்கள்! ஆகையால், மக்களிடமும் அவ்வழியைப் பிரச்சாரம் செய்தார்கள்! அதனால் தான் இவ்வுலகம் பக்தி சாலைகளாயிற்று!

ஆன்மீக வாழ்வு வாழ நினைப்பவர்கள், தங்களுடைய புத்திக்கும், புலன்களுக்கும் மட்டுமே முக்கியத்துவம் தராமல், சாஸ்த்திரத்திலும், அதிலுள்ள உண்மைகளிலும் மட்டுமே, அசைக்க முடியாத நம்பிக்கை வைக்க வேண்டும்! எனவே, இறைவனை அடையும் வழியில், நம்பிக்கை வைத்து, பக்தி மார்க்கத்தில் பயணிப்போமாக!





# வரலாற்றில் இரணியூர்

## அமைவிடம்

நகரத்தார்களின் குலமரபுக் கோயில்கள் ஒன்பதில் இரணியூர் ஒன்றாகும். ஏனைய எட்டுக்கோயில்களான, இலுப்பைக்குடி, இளையாத்தங்குடி, வைரவன் கோயில், மாத்தூர், நேமம், சூரைக்குடி, பிள்ளையார்பட்டி, வேலங்குடி போல இந்தக் கோயிலும் சிவகெங்கை மாவட்டத்தில் அமைந்துள்ளது. திருப்பத்தூர் வட்டத்திலுள்ள இவ்வூர், கீழச்சீவல்பட்டிக்கு அருகில் உள்ளது.

திருப்பத்தூரில் இருந்து 13 கி.மீ. தொலைவில் ஆவிணிப்பட்டி சாலையின் மேற்புறம் 3.6 கி.மீட்டரில் இரணியூர் உள்ளது. காரைக்குடி ரயில் நிலையத்திலிருந்து 19 கி.மீ. தொலைவில் கீழச்சீவல்பட்டியை அடுத்தும் திருமெய்யத்திலிருந்து விராமதி வழியாக திருப்பத்தூர் செல்லும் வழியில் இரணியூரை அடையலாம். காரைக்குடியிலிருந்தும் திருப்பத்தூரிலிருந்தும் நகரப் பேருந்துகள் மூலமாக இவ்வூரை அடையலாம்.

## ஊரும் பேரும்

இரணியூர் என்பதே இன்றைய வழக்குப் பெயராக இருப்பினும் பண்டைய நாளில் இரணி, இரணியல், மருதங்குடி, இராசநாராயணபுரம் என்ற பல பெயர்களில் அழைக்கப்பட்டு வந்துள்ளது. கி.பி. 12-ஆம் நூற்றாண்டு முதல் இரணியூர் என்னும் பெயரே கல்வெட்டுகளிலும், செப்பேடுகளிலும், நடைமுறையிலும் பெருவழக்காக இருந்து வருகிறது. இவ்வூர் கல்வாயில் நாட்டைச் சார்ந்த ஊர்களில் ஒன்றாகும். இரணிய சம்ஹாரத்திற்குப் பிறகும் சீற்றம் தணியாத சிங்கபிரானான நரசிம்மனை இவ்வூர் இறைவன் ஆட்கொண்டதாக தலபுராணம் கூறுகிறது. எனவே நரசிம்மன் பூசித்த தலமானதால் இவ்வூர் இறைவனின் பெயர் ஆட்கொண்டநாதர் என்று தமிழிலும், நரசிம்மேஸ்வரர் என்று வடமொழியிலும் அழைக்கப்பட்டு வருகிறது. கல்வெட்டுகளிலும் இவ்விறைவனது பெயர் ஆட்கொண்டயீசுவரமுடையார் ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார், ஆட்கொண்டநாதர் என்றே குறிக்கப்படுகிறது. எனவே, 700 ஆண்டுகளுக்கு மேலாக இவ்வூர் இரணியூர் என்ற பெயரிலே வழங்கி வந்துள்ளது.

பாண்டிய மன்னர்கள் இப்பகுதியை ஆண்ட பொழுது அவர்களது விருதுப் பெயர்களில் ஒன்றான இராசநாராயணன் என்ற பெயர் இவ்வூருக்கு சூட்டப்பட்டு இராசநாராயணபுரம் என்றும் அழைக்கப்பட்டு வந்துள்ளது. வரலாற்றுச் சிறப்பும், சமயச் சிறப்பும் பெற்ற இவ்வூர் இரணியூர் என்றும் பின்னர் மருதங்குடி என்றும் இராச நாராயணபுரம் என்றும் அழைக்கப்பட்டு வந்துள்ளது.

## தொன்மைச் சிறப்பு

இரணியூர் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட தொன்மை வாய்ந்த ஊராகும். இவ்வூரைச் சார்ந்த ஊருணிக் கரைகளிலும், கண்மாய்க் கரைகளிலும், வயல் வெளிகளிலும் பல முதுமக்கள் தாழிகள் கிடைத்துள்ளன. அத்தாழிகளில் 1500 ஆண்டுகளுக்கு முற்பட்ட கருப்பு சிவப்பு நிறத்தில் செய்யப்பட்ட மட்கலங்கள் பல கிடைத்துள்ளன. இவை தொன்மைச் சிறப்பு உடையவை. சங்க காலத்திற்குச் சற்று பிற்பட்டவை. கி.பி. 4-5ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை. எனவே, 1500 ஆண்டுகளுக்கு முன்பிருந்தே மக்கள் இப்பகுதியில் வாழ்ந்து வந்துள்ளார்கள். என்பது அறிய முடிகிறது. கி.பி. 9-ஆம் நூற்றாண்டில் மதுரையைத் தலைநகராகக் கொண்டு பாண்டிய நாட்டை ஆட்சி செய்தவன் சீமாற ஸ்ரீவல்லபன் என்னும் பாண்டிய மன்னன் ஆவான். புகழ்பெற்ற சித்தன்னவாசல் ஓவியங்கள் இம்மன்னன் காலத்தில் தோற்றுவிக்கப்பட்டவை. இம்மன்னன் பெயரில் அழைக்கப்பட்ட ஸ்ரீவல்லபுரம் இன்று மருவி சீவல்பட்டி என்ற பெயரில் அழைக்கப்பட்டு வருகிறது. இவ்வூர் இரணியூரிலிருந்து 4 கி.மீ. தொலைவில் அமைந்து கீழச்சீவல்பட்டி என்ற பெயரில் இன்றும் அழைக்கப்பட்டு வருகிறது.

இத்தகைய வரலாற்றுச் சிறப்புடைய ஊர்களை அருகாமையில் கொண்டு விளங்கும் இரணியூர் தொடர்ந்து கி.பி. 12-13-ஆம் நூற்றாண்டில்பாண்டிய மன்னர்களான சுந்தரபாண்டியன், குலசேகரபாண்டியன், வீரபாண்டியன் ஆகியோரது வரலாற்றுத் தொடர்பினைப் பெற்று விளங்குகிறது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டில் இப்பகுதியை ஆட்சி செய்த மன்னர் மரபினரது கல்வெட்டுகளும் இவ்வூரில் உள்ளன. கி.பி. 17-ஆம் நூற்றாண்டில் இரணியூர்ப் பகுதி நாயக்க மன்னர்களின் ஆட்சியிலும், கி.பி. 18 நூற்றாண்டில் சிவகெங்கை மன்னரது ஆளுகையிலும் இருந்து வந்துள்ளது. கி.பி. 16-ஆம் நூற்றாண்டிலிருந்து கல்வாசல் நாட்டு இளையாத்தங்குடியான குலசேகரபுரத்து திருவேட்பூருடையார்கள் இரணியூருடனும், இவ்வூர் கோயில்களுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தார்கள் என கல்வெட்டுகள் மூலமாக அறிகிறோம். தொடர்ந்து நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் இரணிக் கோயிலோடும் மக்களோடும் தொடர்பு கொண்டு திருப்பணிகள் பல செய்து, ஊருணிகளை வெட்டி, விடுதிகளைக் கட்டி, பாலங்களைச் செப்பனிட்டு, சாலைகளை அமைத்து பல அறச் செயல்களை செய்து வந்துள்ளனர்.

## கல்வெட்டுச் சிறப்பு

இரணியூர் பற்றிக் கூறும் 10 கல்வெட்டுகள் மத்திய அரசால் படியெடுக்கப்பட்டுள்ளன. அவற்றில் இரணியூர் பத்திரகாளியம்மன் கோயில் கல்வெட்டு மட்டும் இன்று எஞ்சியுள்ளது. ஏனைய கல்வெட்டுகள் 18-19-ஆ ம்நூற்றாண்டில் நடந்த திருப்பணிகளில் கோயில் முழுமையாக புதுப்பிக்கப்பட்டதால் அக்கல்வெட்டுகள் மறைந்துவிட்டன. இக்கல்வெட்டுகள் சுந்தரபாண்டியன், குலசேகர பாண்டியன், வீரபாண்டியன் ஆகிய பாண்டிய மன்னர்கள் காலத்தவை. தவிர 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டு ஒன்றும் 19-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கல்வெட்டுகள் இரண்டும் இவ்வூரில் உள. இக்கல்வெட்டுகள் இரணியூர் ஆட்கொண்ட ஈசுவரமுடையார் கோயிலுக்கு அளிக்கப்பட்ட நிலக்கொடையைப் பற்றியும், இறைவனுக்கு அளித்த நிபந்தங்கள் பற்றியும், பத்திரகாளியம்மன், அஸ்திரதேவர் ஆகிய தெய்வச் சிலைகளை கோயிலுக்கு செய்தளித்தமை பற்றியும் விரிவாக குறிக்கின்றன. இக்கல்வெட்டுகளின் பல்வேறு அரசியல் அதிகாரிகளின் பெயர்களும், அவர்களது பணிகளும் விரிவாக கூறப்பட்டுள்ளன.

# அதிகாரிகளும் அவர்களது பணிகளும்

## 1. காங்கேயன்

வீரபாண்டிய தேவனுடைய 11-ஆம் ஆட்சியாண்டில் காங்கேயன் ஆணைப்படி (எழுத்துப் பூர்வமான ஆணை) அற்புதக்கூத்தன் ஊருணிக்கு $^1/_2$ மா நிலம் தந்ததுடன், பல்வேறு வரிகளையும், நீக்கித் தந்துள்ளான். காங்கேயன் ஆணையை நிறைவேற்றி வைத்த அதிகாரிகள், குலசேகர மூவேந்த வேளான், சிங்களராயன், வில்லவராயன், வேணாட்டரையன், ஆளவந்த பிள்ளை சீனத்ரையன் என்றறிகிறோம். இதே காங்கேயனின் மற்றொரு ஆணைப்படி ஆலங்குடியான ஜனநாத சதுர்வேதிமங்கலத்து நரசிங்கபட்டன் மகன் அருளாளப்பட்டனுக்கு 1 மா நிலம் குடிதாங்கிக் கோலால் அளந்து வழங்கப்படுகிறது. இதைப் பெற்ற பட்டன் ஆட்கொண்டீஸ்வரமுடையாருக்குச் செலுத்த வேண்டிய நிபந்தம் செலுத்த வேண்டும். குலசேகர பாண்டியன் மூன்றாவது ஆட்சியாண்டில் காங்கேயன் உத்தரவுப்படி முதலியார்க்கு ஒருவன் குருதட்சணைக்கு நிலம் வழங்கியுள்ளான்.

## 2. காங்கேயன் சேனாவரையன்

மாதவர்மன் குலசேகர பாண்டியனின் 16-ஆவது ஆட்சியாண்டில் இரணியூரைச் சேர்ந்த முதலியார் மலையான் தேவர் சீடர்களில் ஒருவன், தஷிணாமூர்த்தி சேதிசிவன் இரணியூர் காங்கேயனான சேனாவரையன் பேரில் நிலம் வாங்கி மடப்புறமாக விடுகிறான். சபை இறை இழித்துத் தருகிறது. வடகங்கை கோமப் பல்லவதரையன், தமிழ்ப் பல்லவதரையன், சூரங்காமப் பல்லவதரையன், கண்டன்குரைபரன், கங்கை கொண்டசோழ பல்லவ தரையன், நாட்டு வேளாண் போன்ற அதிகாரிகள் ஆவணத்தில் சான்றிட்டுள்ளனர். சேனாவரையன் என்ற பெயர் தமிழ் இலக்கண நூல் அறிந்தோருக்குப் பரிச்சயமானதாகும். இங்கும் ஒரு சேனாவரையரைக் காண்கிறோம்.

## 3. கண்டன் உதயம் செய்தானான காங்கையன்

சுந்தரபாண்டியனுடைய 15-ஆவது ஆட்சியாண்டில் கண்டன் உதயம் செய்தானான காங்கையன் வரி நீக்கி கல்வெட்டித் தருகிறான். திருப்பத்தூரைச் சேர்ந்த ஸ்ரீராமன் திருத்தலிக்கூத்தன் என்பவன், சங்கரந்திதேவன், பெருமாள் இருவரிடமும் விலைக்கு வாங்கிய நிலத்தை ஏற்கனவே கோயிலுக்கு வழங்கியிருந்தான். அந்த நிலத்திற்கு இவன் வரி நீக்கித் தந்தான். இவனே சுந்தர பாண்டியனுடைய மூன்றாவது ஆட்சியாண்டு கல்வெட்டிலும் வருகிறான்.

## 4. நல்லமங்கை பிள்ளையார்

இராஜராஜ சுந்தர பாண்டியன் 13-ஆவது ஆட்சியாண்டில் நல்லமங்கை பிள்ளையார் சில நிலங்களை ஊர்ச் சபையிடமிருந்து விலைக்கு வாங்கி உள்ளார்.

## 5. அரும்பர்கிழார் மாணிக்கத்தான் பெரிய பெருமாள்

ஊராருக்காக கலியகாலப் பெருந்தெருவில் ஊருணி எடுப்பித்துள்ளான். இவ்வூர் ஊர் கல்வாய் நாடாகும்.

## 6. பிறவிக்கு நல்லார்

கேரளசிங்க வளநாட்டு பிரம்ம தேயமான திருப்பத்தூர் மூலபருஷ மகாசபை நிலம் வாங்கின பொறித்துள்ளது. விலைக்கு வாங்கிச் சபையிடம் வழங்கிய பிறவிக்கு நல்லான், திருமேனிப்பாடி பிள்ளையாரையும் எழுந்தருளிவிக்கிறான். நினைத்தது முடித்த தேவர் என்ற பெயரும் இவனுக்குண்டு. இவன் ஊர் சாத்தனேரி.

## 7. எழுந்தான் கண்ணாலன்

குலசேகரபுரத்தில் நிலமும் மனையும் கோயிலுக்கு விலைக்கு வாங்கி விட்டவனாவான். காலம் சக ஆண்டு 1448 ஆகும்.

## 8. பெரியநாட்டு முத்தரையன்

சுந்தரபாண்டியன் ஏழாவது ஆட்சியாண்டில் வலையர் பிள்ளான் ஆளவந்தானான பெரியநாட்டு முத்தரையன், கோயிலுக்கு வழங்கிய நிலத்திற்கு ஊரவை இறை இழிச்சித்துத் தருகிறது. இது தொடர்பாக முனையதரையன். கூத்தப் பெருமான் தஞ்சாண்டார், வேளார், செழிய பல்லவதரையன், கங்கனான சீனத்தரையன் கையெழுத்திட்டுள்ளார்கள்.

## 9. சேரமான் பெருமானான சீவலமாராயன்

சுந்தரபாண்டியனுடைய 3-ஆவது ஆட்சியாண்டில் மதுரையாகிய நான்மாடக் கூடலில் வாழும் கைக்கோளர் மரபில் வந்த தவம் செய்தான் சேரமான் பெருமாளான சீவல மாராயன் நிலம் விலைக்கு வாங்கி வழங்குகிறான். பல்வேறு வரிகளை நீக்கி இறையிலியாக கோயிலுக்கு வழங்கப்படுகிறது. கண்டன் உதையன் செய்தானான காங்கையனும் முக்கோடி மூவேந்த வேளானும் மேற்படி கல்வெட்டை வெட்டி வைத்துள்ளார்கள்.

## 10. கந்தன் ஆளுடையான்

சுந்தரபாண்டியனின் 7-வது ஆட்சியாண்டில் கோயிலுக்கு வரி விதித்த அதிகாரிகளில் ஒருவன். இவன் கல்வாயில் நாட்டைச் சேர்ந்த பெருந்தெருவில் வாழ்ந்தவனாவான். விண்ணகர் எம்பெருமானுக்கு மிருக சிருஷப நட்சத்திரத்தில் விசேஷ பூசைக்கு இவனே ஏற்பாடு செய்கிறான். மற்றொரு கல்வெட்டில் இரண்டு வணிகர்களிடமிருந்து நிலம் வாங்கி கோயிலுக்கு வழங்கி உள்ளான். குலசேகரனின் 27-ஆவது ஆட்சியாண்டில் தொத்தா விளக்கு ஒன்று வைக்க ஏற்ாடு செய்கிறான் தேவன் தில்லைநாயகன் இதற்கு நிலம் வழங்குகிறான். சுந்தரபாண்டியன் 7-ஆவது ஆட்சியாண்டில் இவனே இரண்டு விளக்குகள் வைக்க ஏற்பாடு செய்கிறான். திருக்காம கோட்ட நாச்சியார் ஐம்பொன் சிலையைச் செய்து வைத்தவனும் இவனேயாவான். கல்வாயில் நாடாள்வான் என்றும் அழைக்கப்பட்டுள்ளான்.

## 11. விசயாலயதேவர்

கிருஷ்ணராயர் என்ற விசயநகர அரசர் காலத்தில் சக ஆண்டு 1444இல் வைரவதேவ நாயனார் மகன் விசயாலய தேவர் நண்பகல் வழிபாட்டிற்காக மன்னன் பிறந்த உத்தர நட்சத்திரத்தன்று தானம் செய்துள்ளான். இவனே இளையாத்தங்குடி இறைவனுக்கு திருவிடையாட்டமாக பூசை மற்றும் செலவுகளுக்கும் தானம் வழங்கியுள்ளான்.

### ஊர்ச் சபைகள்

இரணியூர் கல்வெட்டுகளின் மூலம் ஊர்ச் சபைகள் ஆற்றியுள்ள அருந்தொண்டுகளைப் பார்க்கிறோம். வீரபாண்டியன் காலத்தில் உய்யவந்த கூத்தர் எடுப்பித்த குளத்திற்கு ஊர்ச் சபை வரி நீக்கித் தந்துள்ளது. இரணியூர் ஊரோரம் என்ற பெயரை கல்வெட்டுகள் குறிக்கக் காண்கிறோம். நல்லமங்கை பிள்ளையாரும் மற்றவர்களும் நிலம் வாங்கி கோயிலுக்கு விட்டதை, கோயிலில் சபை குறித்து வைத்துள்ளது. இரணியூர் சபை போல மூலப் பருஷ மகாசபையும் திருப்பத்தூரில் இருந்துள்ளது. கல்வெட்டுக்களிலும் ஊர்சபையின் பணிகள் விரிவாக குறிக்கப்பட்டுள்ளன.

### பத்திரகாளி அம்மன் பற்றிய கல்வெட்டு

கி.பி. 1501-ஆம் ஆண்டைச் சார்ந்த கல்வெட்டு இரணியூர் வடக்கு வாசலில் உள்ள நல்ல தண்ணீர் ஊருணியையும் அதற்குத் தெற்கு வடபால் அமைந்துள்ள பத்திரகாளி அம்மன் கோயிலையும், மூல வேதகத்தையும் கல்வாச நாட்டு இளையாத்தங்குடியான குலசேகரபுரத்தில் திருவேட்பூருடையார்களும் பிறரும் தர்மம் செய்ததைக் குறிக்கிறது. இக்கல்வெட்டில் குறிக்கப் பட்டுள்ள திருவேட்பூருடையார்கள் இளையாத்தங்குடி கோயிலைச் சேர்ந்த பிரிவினர் ஆவார்.

இச்செய்தி மூலம் இவ்வூர் நல்ல தண்ணீர் ஊருணியான அம்மன்சேங்கைக்கு திருவேட்பூருடையான் என்ற பெயர் இருந்தது தெரிகிறது.

இக்கல்வெட்டின் இரண்டாம் பகுதி சகம் 1423 (கி.பி. 1501ல்) இரௌத்திரி வருஷம் தை மாதம் 2ம் தேதி கல்வாசல் நாட்டு இளையாத்தங்குடி என்ற குலசேகரபுரத்து திருவேட்பூருடையார்கள் இரணியூர் பத்திரகாளி அம்மன் கோயிலுக்கு செய்த கொடையை கூறி பின் வீதி எழுந்தருளுகிற பீடாரியார் என்ற உற்சவ சிலையையும் அஸ்திரதேவரையும் பிறர் தர்மமாக செய்து கொடுத்ததைத் தெரிவிக்கிறது. இதனை கல்வெட்டு, இன்றைநாள் 1. சொக்கனாரான நியாய பரிபாலரும், 2. இன்பவனப் பெருமாளயான வடிவதரையரும், 3. இவர் தம்பி ஆளுடையாரும், 4. அளக்க கோனார் மெய்யரான அமைய பரிபாலரும் ஆக இவர்கள் உடன் பாதியும், மற்றும் 1) சூரிய தேவரான சமயபரிபாலரும், 2) திருநெல்வேலி உடையாரான இசையராயரும், 3) ஆளுடையாரான கனகபரிபாலரும் இவர்கள் உடன்பாதியாகவும் சேர்ந்து எழுந்தருளுகிற பீடாரியாரையும், அஸ்தர தேவரையும் தர்மமாக செய்து அளித்ததை விரித்துக் கூறுகிறது. முதலில் சொன்ன நால்வரும் இரண்டாவது கூறப்பட்ட மூவரும் ஆக இவர்கள் இத்தர்மத்தை சரிபாதியாக பகிர்ந்து அளித்துள்ளனர்.

இக்கல்வெட்டின் மூன்றாம் பகுதி இரணியூர் பத்திரகாளி அம்மனுக்கு தானமாக இரணியூர் வயலில் வளத்துவாச்சான்தடி இரண்டு, நிலம் இரண்டும், தியாக வல்லி வயலில் ஆலஞ்செய் நிலம் ஒரு மாவும், செங்கழுநீர் புஞ்சையும் இவ்வூரிலேயே விலைக்கு வாங்கி கொடுத்ததை குறிக்கிறது.

இக்கல்வெட்டின் நான்காம் பகுதி, இக்கோயில் தர்மகர்த்தாவுக்கு இவ்வூரின் மேலத்தெருவில் ஆறு மனையும், திங்கள், திவசம், திருநாளுக்கு பரிவட்டமும் கட்டி, அம்பாள் அருள்பாடு முதலிய மரியாதைகளும் கொடுத்தமையைக் குறிக்கிறது.

கல்வெட்டின் இறுதிப்பகுதி சூரிய தேவரான சொன்ன வண்ணம் செய்தார் உள்ளிட்டார்க்கும், சொக்கனாரான நியாய பரிபாலருக்கும் இரணியூர் ஊரார் பிரமாணம் பண்ணிக் கொடுத்த செய்தி அறியப்படுகிறது.

இறுதியில் இந்த அறச்செயல்களுக்குச் சாட்சியாக தொண்டைமான், பெரியவனான முனையதரையன், மெய்யரான முத்தரையன், உதய பெருமாளான முன்சோழியத்தரையன், பெரிய பெருமாளான மீனத்தரையன் ஆகியோர் கையெழுத்திட்டுள்ளனர்.

### ஊர் வரிகள்

இக்கல்வெட்டுகளில் கோயிலுக்கு நிலக்கொடை அளிக்கப்பட்டபோது வரி நீக்கி இறையிலியாக வழங்கப்பட்டுள்ளது. இக்கல்வெட்டுகளால் பண்டைய நாளில் இருந்த பல்வேறு வகையான வரிகளை அறிய முடிகிறது. அவை, அச்சு வரி, அந்தராயம், கடமை, காராண்மை, பொன்வரி, சில் வரி, பெரு வரி, எச்சோறு, கூற்றரிசி, வெட்டிமுட்டி, வாள் விநியோகம், ஊர் விநியோகம், குறுவை, கோட்டைப் போகம் ஆகிய வரிகள் குறிக்கப்படுகின்றன. எனவே, இத்தகைய வரிகள் பண்டைய நாளில் வசூலிக்கப்பட்டுள்ளது என்பதை அறிகிறோம். பயிர் பார்த்து வரி நிர்ணயிக்கப்பட்டது. நெல்லுக்கு ஒரு வரி, புஞ்செய் பயிர்களுக்கு குறைவான வரி எனத் தரத்திற்கேற்ப வரி வசூலிக் கப்பட்டுள்ளது. குறுவை விளைந்த நெல்லுக்கு பாதி வசூலிக்கப்பட்டது. பயிர்த்தலை பாத்து கழிவு நீக்கி நின்ற நிலத்துக்கு வரி நீக்க வேண்டும் என்று காங்கையன் உத்தரவிட்டதை ஒரு கல்வெட்டில் காண்கிறோம்.

### இறைவன் இறைவி

பாண்டியர் கால கல்வெட்டுகளில் இவ்வூர் இறைவன் ஆட்கொண்ட ஈசுவரமுடைய நாயனார் என்றும், ஆட்கொண்ட ஈசவரமுடையார் என்றும் குறிக்கப்பட்டுள்ளது. பிற்காலச் செப்பேடுகளில் ஆட்கொண்டநாதர் கோயில் என்று குறிக்கப்பட்டுள்ளது.

### கோயில் சிறப்பு

இவ்வூரின் மையத்தில் கல்லூருணியின் தென்மேற்குப் பகுதியில் இயற்கையான சூழலில் கோயில் அமைந்துள்ளது. இக்கோயிலின் நான்கு திசைகளிலும் தேரோடும் வீதிகள் அமைந்துள்ளன. கோயில் கீழ்த்திசையில் நெடிதுயர்ந்த ராஜகோபுரம் பொலிவோடு காட்சியளிக்கிறது. கோயிலுக்கு நேரே கீழ்த்திசைப் பக்கம் $3^1/_2$ கிலோ மீட்டர் தூரத்திற்கு ஒரு நீண்ட சாலை உள்ளது. இரணியூர் கோபுரம் 75 அடி உடையது. அதில் உள்ள சிற்பக் கலை ஒப்புயர்வற்றது. கீழச்சீவல்பட்டியிலிருந்து செல்லும்போது, அந்நெடுஞ்சாலையில் 3 கல் தொலைவுக்கு முன்பே நமக்கு கோபுர தரிசனம் கிடைக்குபடி நகரத்தார்கள் திட்டமிட்டு சாலையை அமைத்துள்ளனர்.

கோயிலுக்கு மேற்புறம் நீலமேகப் பெருமாள் கோயில் இருக்கிறது. வடபுறம் பத்திரகாளி அம்மன் கோயில் உள்ளது. தென்புறம் ஐயனார் கோயில்கள் உள. இவை பெரிய கோயிலின் பொறுப்பிலேயே நடைபெறுகின்றன. ஆட்கொண்டநாதர், சிவபுரந்தேவி தேவஸ்தானம் என்பதை ஆள, சிவ தேவஸ்தானம் என விலாசமிட்டு குறிப்பிடும் மரபு போற்றத்தக்கது.

### சிற்பச் சிறப்பு

நகரத்தாரின் சிற்பக் கலைக்கு கருவூலமாக இத்திருக்கோயில் விளங்குகிறது. நகரத்தார் கால கலைக்கு சிறப்பளிக்கக் கூடிய பல சிற்பங்களை இங்கு காண்கிறோம். சுவாமி சன்னதி முன்புறம் உள்ள மண்டபத்தில் பிச்சாடனர், அகோராஸ்திரம், வீரபத்திரர், முப்புரம் எரித்தவர், காலஸம்ஹார மூர்த்தி, ருத்திரமூர்த்தி, தலாடரூபர், கல்யாண சுந்தரமூர்த்தி ஆகிய சிற்பங்களை காணலாம். நகரத்தார் சிற்பங்களுக்கு இவை மகுடமாக திகழ்பவை.

சிவபுரந்தேவி சன்னதி எதிரே நவதுர்க்கை மண்டபத்தில் 9 சக்திகளின் உருவங்கள் அழகிய சிற்பங்களாக படைக்கப்பட்டுள்ளன. அவையாவன: 1) நவதுர்க்கை, 2) உருத்திர துர்க்கை, 3) ஸ்தூல துர்க்கை, 4) மகிடாசுரமர்த்தினி, 5) சூலனி துர்க்கை, 6) ஜலதுர்க்கை, 7) மகா துர்க்கை, 8) பிரம்ம துர்க்கை, 9) விஷ்ணு துர்க்கை ஆகியவையாகும்.

இரணியூர் இராஜகோபுர சிற்பங்கள் புகழ் பெற்றவை. இங்கு சிவனது பல்வகை வடிவங்களையும், வைணவ தெய்வ உருவங்களையும், எண்திசைக் காவலர்களையும், ரதிமன்மதன் ஆகியோரின் அழகிய சிற்பங்களையும் செதுக்கி உள்ளனர். இவற்றில் குபேரன், வாயு பகவான், வருணன், ஈசான மூர்த்தி, எமதர்மர் போன்ற திசைக் காவலர்களைப் படைத்து அவர்களுக்குரிய வாகனங்களோடு சிற்பங்களை உருவாக்கியுள்ள திறன் போற்றுதலுக்குரியது.

அவ்வாறு அஷ்டலட்சுமி மண்டபத்தை எண்வகை லட்சுமியின் உருவங்கள் அலங்கரிக்கின்றன. வீரலட்சுமி, தான்யலட்சுமி, சௌபாக்கிய லட்சுமி, சந்தான லட்சுமி, தனலட்சுமி, விஜய லட்சுமி, ஆதி லட்சுமி, அன்ன லட்சுமி ஆகிய இச்சிற்ப வடிவங்கள் பார்ப்போர் அனைவரையும் பரவசப்படுத் துபவையாகும். தவிர பாரத மாதா, கதர்க் கொடிச் சிற்பங்கள் முதலியனவும் இக்கோயிலில் காணலாம். விடுதலைப் போராட்டக் காலத்தில் இக்கோயில் திருப்பணி செய்யப்பட்டவை என்பதை இச்சிற்பங்கள் நினைவூட்டுகின்றன. இந்திய விடுதலைக்குக் காரணமான மகாத்மா காந்தியின் சிற்பத்தையும் இங்கு காணலாம்.

**நகரத்தார் கலைப் பாணி**

நாட்டுக்கோட்டை நகரத்தார்களின் குலமரபுக் கோயில்கள் 9-ல் ஒன்றான இரணியூர் கோயில் இரணியூர் நகரத்தாரின் கலைப்பணியாக விளங்குகிறது. இக்கோயில் பண்டைய காலந்தொட்டு பாண்டியர் காலம் முதல் பல்வேறு கலைச் செல்வங்களை பெற்றுத் திகழ்ந்துள்ளது. ஆனால், காலவெள்ளத்தில் சிதைந்துவிட்ட பாண்டியர் கோயிலின் அடித்தளத்தில் நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் கோயிற்கலை இலக்கணத்தைத் தழுவி படைத்துள்ள பெருங்கோயிலை இன்று நாம் காண்கிறோம். எழுவன் கோட்டை சிற்பிகளின் வழியினர் செய்தளித்த செழுமையான சிற்பங் களையும், சீரிய படைப்புகளையும் இங்கு காணமுடிகிறது. கடந்த 200 ஆண்டு காலமாக செட்டி நாட்டு மண்ணிலே நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் எவ்வித சலனமுமின்றி மிக அமைதியான முறையில் ஆலயங்களுக்குச் செய்து வந்த அறப்பணிகளும், கொடைகளும், ஆக்கப்பணியும், சமயப்பணியும், இன்று நகரத்தார் கலை தோன்றுவதற்கு காரணமாயின.

நகரத்தார் கலை என்பது சோழர், பாண்டியர், விஜயநகரர், நாயக்கர் ஆகிய அரச மரபினர் வளர்த்த கலைப் பாணியின் தொடர்ச்சியே என்றாலும் அது ஒரு வகையில் செட்டி நாட்டு மண்ணின் மணத்தையும் மக்கள் வளத்தையும், படைக்கப்பட்ட காலத்தின் பண்பாட்டையும், வட்டார வளத்தையும், அன்றைய அரசியல் திருப்பங்களையும், சிற்பிகளின் சீரிய சிந்தனைகளையும், வெளிக்காட்டும் காலக் கண்ணாடியாக அமைந்து விளங்குகிறது.

இந்திய சுதந்திரத்தின் தந்தையான மகாத்மா காந்தியை தமிழகத்தின் தலைநகரான சென்னையிலே ராய்சௌத்திரி என்னும் கலைஞர் தோற்றுவிப்பதற்கு முன்னரே எழுவன் கோட்டைச் சிற்பிகள், இரணியூர் கோயிலில் காந்தி முதலிய சிற்பங்களையும் கதை உருவங்களையும் தோற்றுவித்து முன்னோடியாகத் திகழ்ந்து உள்ளனர் என்பதை இரணியூரில் காண்கிறோம்.

# கட்டடக்கலை

## இரணியூர்க் கோயில் அமைப்பு

இக்கோயில் கருவறை, அர்த்தமண்டபம், மகா மண்டபம், முகமண்டபம், அம்மன் சன்னதி, பைரவர் சன்னதி, நந்தி, பீடம், கொடிமரம், திருச்சுற்று, திருச்சுற்று மாளிகை பததி, பரிவார ஆலயங்கள், வாகன அறை, உற்சவ மண்டபம், பள்ளியறை, கருவூலம், யாகசாலை, வெஞ்சன அறை, மடைப்பள்ளி, அலங்கார மண்டபம், ராஜகோபுரம், லட்சுமி மண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. விநாயகர், சுப்பிரமணியர், மகாலட்சுமி, சண்டிகேசுவரர், பைரவர், சூரியன், சந்திரன் ஆகிய பரிவார தெய்வங்களுக்குச் சிற்றாலயங்கள் உரிய இடங்களில் அமைக்கப்பட்டுள்ளன. தவிர திருச்சுற்றின் தென்மேற்கு மூலையில் சோமாஸ்கந்தர் சன்னதியும், வடகிழக்குப் பகுதியில் நவக்கிரகங்களுக்கு உரிய மேடையும் அமைந்து விளங்குகின்றன.

இவை தவிர திருச்சுற்று மாளிகை பத்தியின் தென்மேற்கு மூலையில், நர்த்தன கணபதி, அண்ணாமலையார், நான்முகன், துர்க்கை ஆகிய தெய்வ உருவங்கள் யாவும் வழிபாட்டில் உள்ளன. இவை இக்கோயில் முதல் திருப்பணியை ஒட்டி அமைக்கப்பட்டு, பழைய கோயிலின் கருவறை மற்றும் அர்த்த மண்டப தேவகோட்டங்களை அலங்கரித்தவை. நாட்டுக்கோட்டை இரணியூர்க் கோயில் நகரத்தார்கள் 1944-ஆம் ஆண்டு நடத்திய 2-வது திருப்பணியை ஒட்டி, இவைக் கோயிலில் (பாலாலயத்தில்) வைக்கப்பட்ட பின்னர், திருப்பணியையொட்டி சுவாமி கோயில் பளபளப்பான கருப்புக் கல்லால் நூதனமாக எழுப்பப்பட்டதால் அக்கோட்டங்களில் கற்சிலைகளை வைக்க இயலாது உலோகச் சிலைகளை வைத்துவிட்டு இக்கற்சிலைகளை திருச்சுற்றுப் பத்தியில் வைத்துள்ளனர். இவை யாவும் கி.பி. 18-19ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

மேலும் பைரவர் சன்னதிக்கு நேர் எதிரே வெளிப்பிரகாரத்தில் முனீசுவரர் பீடம் வழிபாட்டில் உள்ளது. சுவாமி கோயிலின் வெளியே தென்கிழக்கு மூலையில் திருக்குளமான கல்லூரணியும், ஊருணி விநாயகர் ஆலயமும் அமைந்து உள்ளன.

இரணியூர் ஆட்கொண்டநாதர் கோயில் கிழக்கு நோக்கிய சன்னதியை உடையது. கருவறை சதுர வடிவமானது. கருவறையின் வெளிப்பக்க அளவு 5.50 மீட்டர் உள் பக்க அளவு 2.15 மீட்டர். கருவறை நடுவே வட்டமான ஆவுடையார் மீது அமைந்துள்ள லிங்கம், ஆட்கொண்ட நாதர் என்ற பெயரில் வழிபாட்டில் உள்ளது. இக்கோயில் கருவறையில் நிலைகளின் இருபக்கங்களிலும் சிற்ப வேலைப்பாடுகள் கொண்ட அரைத்தூண்கள் அலங்கரிக்கின்றன.

**ஆட்கொண்டநாதர் திருக்கோவில் கருவறையைச் சுற்றியுள்ள புறச் சுவர்கள் சிற்பங்களின்றி எளிமையான கட்டட வேலைப்பாடுகள் கொண்டு திகழ்கின்றன. கருவறை புறச்சுவர்கள் கருமையாகவம், வழவழப்பாகவும் காட்சியளிக்கின்றன. கருவறையின் அதிட்டானம் முதல் சுபோதம் வரை உள்ள கட்டடப் பகுதிகள் எளிமையாக அமைந்து விளங்குகின்றன. சுவாமிக் கோயில் கருவறை, அர்த்த மண்டபம், மகாமண்டபம் ஆகிய பகுதிகளை அலங்கரிக்கும் கருமை நிறக் கற்கள் யாவும் திருச்சி உறையூர் பகுதியிலிருந்து கொண்டுவரப்பட்டவை.**



**விமானம்**

இக்கோயில் விமானம் அதிட்டானம் (பீடம்), சுவர் (கால்), பிரஸ்தரம் (கூரை), கிரீவம் (கழுத்து), சிகரம் (தலை), ஸ்தூபி (குடம்) என்ற ஆறு பெரும் பகுதிகளைக் கொண்டு கம்பீரமாகக் காட்சியளிக்கின்றன. ஒவ்வொரு பகுதியும், பல நுணுக்கமான அங்கங்களை அளவோடு பெற்றுத் திகழ்கின்றன.

**அதிட்டானம்**

இக்கோயில் அதிட்டானம் உபானம், பத்மம், கண்டம், கபோதம், பத்ம ஜகதி, குமுதம், கண்டம், பட்டிகை, கண்டம், வேதிகை ஆகிய பல பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. இவற்றில் உபானம் எளிமையான அமைப்புடையது. உபானத்தின் மீது உள்ள பத்ம வரி விரிந்த பத்மம், கபோதம் ஆகியவற்றைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இங்கு பத்ம வரியில் உள்ள இதழ்கள் மடித்த நிலையில் நீர்த்தாரையை ஒத்து அமைக்கப்பட்டுள்ளது. இதனை அதிட்டானத்தின் கட்டட அமைப்பில் தனிச்சிறப்பாகக் காணலாம்.

தேவகோட்ட மாடங்களுக்குக் கீழ் உள்ள ஜகதிப் படை வரியில் மட்டும் மலர்ந்த பத்மங்கள் காட்டப்பட்டு ஏனைய பகுதிகள் எளிமையாக அமைந்து விளங்கக் காண்கிறோம். ஜகதி மீது அமைந்துள்ள குமுதப்படை முப்பட்டை வடிவிலும், வட்ட வடிவிலுமாக மாறி மாறி அமைக்கப்பட்டுள்ளது. இக்குமுதப்படையின் மீது உள்ள கண்டத்திலும், சதுரப்படைகளிலும் சிற்பங்கள் செதுக்கப்படாமல் எளிமையாக உள்ளன.

கண்டத்தின் மீது உள்ள பட்டிகைப் பகுதி எளிமையாகவும், தேவகோட்டங்களின் கீழ்ப் பகுதியில் மட்டும் கபோதம் என்ற அமைப்புடன் காணப்படுகிறது. அவ்வாறு வேதிகைப் பகுதி, தேவகோட்டங்களின் கீழ் பட்டையாக அமைந்தும், ஏனைய பகுதிகள் இதழ்களாகப் பிரிந்தும் அமைந்து வனப்பூட்டுகின்றன.

பிற்காலப் பாண்டியர் காலக் கட்டடக் கலையில் அதிட்டானத்தில் ஏற்பட்ட புதுமையான அமைப்பு முறை கி.பி. 16-17-ஆம் நூற்றாண்டில் நாயக்கர் காலத்துக் கோயில்களில் மிகுதியாக கையாளப்பட்டிருப்பினும், இம்முறை நகரத்தார் காலத்திலும் தொடர்ந்து வந்துள்ளது. இது கட்டடக் கலையில் நகரத்தார் பின்பற்றிய பாரம்பரிய கலை மரபின் தொடர்ச்சியினையும் அவர்களது கலைவளர்ச்சியினையும் காட்டுவதாக அமைகிறது.

### சுவர்

அதிட்டானத்தின் மேலுள்ள புறச்சுவர் பகுதி அரைத்தூண்களையும், தேவகோட்ட மாடங்களையும் பெற்று விளங்குகிறது. கருவறை புறச்சுவரைச் சுற்றிலும், தெற்கு, மேற்கு, வடக்கு ஆகிய மூன்று திசைகளிலும், தேவகோட்ட மாடங்கள் சற்று முன்நோக்கிய நிலையில் வெளிப்பட்டு காணப்படுகின்றன. இம்மாடங்களில் முறையே தட்சிணாமூர்த்தி, அண்ணாமலையார், பிரம்மன் ஆகிய தெய்வ உருவங்கள் காட்சியளிக்கின்றன. இவற்றில் தட்சிணாமூர்த்தி சிற்ப வடிவிலும், ஏனைய இரண்டும் செப்புத் திருமேனியாகவும் திகழ்கின்றன.

### புற அமைப்பு

தேவகோட்டத்தின் இருமருங்கிலும், இரு அரைத்தூண்களைக் கொண்ட கோஷ்ட பஞ்சரம் அலங்கரிக்கின்றது. இதன் தலைப்பாகம் சாலை வடிவில் அமைந்து அழகு செய்கிறது. தேவ கோட்டங்களில் பக்கச் சுவரின் இடையிடையே பல அரைத்தூண்கள் அலங்கரிக்கின்றன. இத்தூண்கள் யாவும் வழவழப்பாக வட்ட வடிவிலும், எண்பட்டை வடிவிலும், செங்குத்தாக வரம்புகள் வெட்டப்பட்டும் வேலைப்பாடு மிக்கதாக விளங்குகின்றன. இத்தூண்கள் ஒவ்வொன்றும் கால் முதல் போதிகை வரை பல உறுப்புகளைக் கொண்டு விளங்குகிறது. கருவறை புறச் சுவரை அலங்கரிக்கும் தூண்களில் தேவகோட்ட மாடத்தையொட்டி விளங்கும் தூண்கள் மட்டும் மிகக் கவனமாகச் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூண்களின் உடல், கலசம், குடம், பத்மம் ஆகிய பகுதிகள் யாவும் சீரிய கட்டடக்கலை நுணுக்கத்தோடு செதுக்கப்பட்டுள்ளன.

### கும்பபஞ்சரம்

கருவறைக்கும், அர்த்த மண்டப புறச்சுவர்களுக்கு இடையே உள்ள பகுதியை கும்பபஞ்சரம் அணி செய்கின்றது. இதன் கும்பத்தின் கீழ்ப்பகுதி விசிறி மடிப்புடன் கூடிய பல வரம்புகள் வெட்டப்பட்டு வனப்போடு விளங்குகிறது. அதன் மேல் இரு பக்கங்களிலும் பாயும் இரு யாளிகளின் வாயிலிருந்து வெளிப்படும் நிலையில் கொடிக்கருக்குகளும், வேலைப்பாடு மிக்க தோரணங்களும் காட்டப்பட்டுள்ளன. கும்பபஞ்சரத்தின் உடல் பகுதி செங்குத்தான பட்டைகள் வெட்டப்பட்டு அடுக்கடுக்காக விளங்குகிறது. இத்தூண்களின் மேல் விரிந்த தாமரையும், பலகையும் அணி செய்கின்றன. பலகையின் மீது நாசிக்கூடுகள் நிறைந்த கூரைப் பகுதியும் அதன் மீது சிகரம் அமைந்து பொலிவோடு விளங்குகிறது.

### கோமுகி

கருவறையின் வடதிசை புறச்சுவரில் அதிட்டானத்தையொட்டியாளியின் வாயிலிருந்து வெளிப்பட்டு வரும் நிலையில் நீர்த்தாரை என்ற கோமுகி அமைக்கப்பட்டு உள்ளது. இக்கோமுகி யின் முகம் மலர் போதிகையில் வளைந்து நிற்கும் நாணுதலை ஒத்து பூமுனையுடன் காணப்படுகிறது.

கோமுகியின் மேல் புறத்தில் நீர்த்தாரையை அமைத்துள்ள பாங்கு நேரில் கண்டு இன்புறத்தக்கது. அத்தாரையிலிருந்து வெளிப்படும் அபிடேக நீர் பூமுனை வழியாக வெளிப்பட்டு கீழே உள்ள நீர்த்தொட்டியில் சேருகிறது. நீர்த்தொட்டி சேகரிக்கும் அபிடேக நீர் தொட்டியிலுள்ள ஒரு துளை வழியே வெளிப்பட்டு சாளரத்தில் விழுந்து வெளியேறி சுற்று மதிலுக்கு வெளியே உள்ள பெரிய தொட்டியில் விழுந்து மீண்டும் வெளியேறி இரணிக் கண்மாயை அடைகிறது. இவ்வமைப்பு நாட்டுக் கோட்டை நகரத்தாரின் திட்டமிட்ட கட்டடக் கலைக்குச் சான்றாக விளங்குகிறது.

### கல் குழாய்கள்

இதே போன்று கோமுகியை அம்மன் சன்னதியிலும் மற்றும் பரிவார சன்னதிகளிலும் காணலாம். இரணிக் கோயில் கட்டடக் கலையில் மற்றொரு அதிசயம் இங்கு காணத்தக்கது. கோயில் மேல் மட்டத்தில் பெய்யும் மழை நீர் அனைத்தும் ஓடி வர இரும்பு அல்லது சிமெண்டு குழாய்கள் வைக்கப்படாமல் வெள்ளைக் கல்லாலான கல் குழாய்களை வைத்துள்ளனர். கல்லாலான இக்குழாய்கள் சுமார் 4 மீட்டர் உயரமும் 1.20 மீட்டர் சுற்றளவும் உடையவை. கல்லாலான தூண் போன்ற இக்குழாய்கள் பண்டைய சிற்ப வல்லுநரின் திறமைக்குச் சான்றாகும்.

இத்தகைய அமைப்பில் இக்கோயிலில் 3 கல்குழாய்கள் உள. அவை சுவாமிக் கோயில் அர்த்த மண்டபத்தின் வடபுறமும், தென்புறமும், அம்மன் பைரவர் சன்னதிக்கு இடையிலும் அமைந்துள்ளன.

### பிரஸ்தரம்

சுவற்றின் மேலுள்ள பிரஸ்தரம் என்ற கூரைப் பகுதி கருவறையை மூடும் அங்கமாக விளங்குகிறது. கூரைப் பகுதியின் கீழ் பூத கணங்களின் உருவங்களுக்கு பதில் பூவிதழ்கள் மதளைகளை ஒத்து வரிசையாக அணி செய்கின்றன. கூரைப் பகுதியில் உள்ள கபோதம் நாசிக்கூடுகள் நிறைந்து காணப்படுகிறது. அந்நாசிக் கூடுகளில் பல்வகை சிறிய சிற்பங்களும், தெய்வ உருவங்களும் அலங்கரிக்கின்றன. கபோதத்தின் மேலுள்ள யானி வரியில் உருவங்கள் இன்றி எளிமையான அமைப்பினைக் கொண்டுள்ளது. அதன் மேல் மூலைப் பகுதியில் மட்டும் மகரக் கட்டுகளைக் காண்கிறோம். பொதுவாக கருவறை மற்றும் அர்த்தமண்டபத்தின் கூரைப் பகுதி இங்கு எளிமையாக அமைந்து விளங்குகிறது.

### தட்சிணாமூர்த்தி கொரடு

கருவறையின் தென்புறம் தட்சிணாமூர்த்தி சன்னதி அமைந்துள்ள கல் மண்டபம் பகுதி 'தட்சிணாமூர்த்தி கொரடு' என அழைக்கப்படுகிறது. இதன் கீழ் உள்ள மேடையின் மீது இரு அமர்ந்த சிம்மங்கள் காட்டப்பட்டுள்ளன. அச்சிம்மங்கள் தலையில் தாங்கும் நிலையில் இரு தூண்களைக் கொண்ட வடிவில் கல்மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இக்கல் மண்டபத்தைத் தாங்கி நிற்கும் தூண்கள் இரண்டும் உருவில் பெரியவை. கட்டட வேலைப்பாடு மிக்கவை. சிற்பங்கள் நிறைந்தவை. பார்ப்போரின் கருத்தையும், கவனத்தையும் ஈர்ப்பவை. மரங்களை செதுக்கியதைப் போன்று கல் வேலைப்பாடுகள் கொண்டு விளங்குபவை. இதன் கூரைப் பகுதி உட்புறத்தில் நீண்ட கம்பிகளை ஒத்தும், உருட்டுக் கம்பிகளை ஒத்தும், முறுக்குக் கம்பிகளை ஒத்தும் விளங்குகின்ற கல் வேலைப்பாடுகள் காண்போரை களிப்பிலும், வியப்பிலும் ஆழ்த்துபவை. அவ்வாறு இங்கு பொறுத்தப்பட்டுள்ள சட்டங்களும், அச்சட்டங்களின் மீது அறையப்பட்டிருக்கும் கல் ஆணிகளும்,

குமிழ்களும் மரத்தையே செதுக்கியதை ஒத்த பண்டைய தச்சு வேலைப்பாடுகளை நினைவூட்டு பவையாகத் திகழ்கின்றன.

இவை கொடுங்கைக்கு புகழ்பெற்ற ஆவுடையார் கோயிலை பின்பற்றி அமைக்கப் பட்டிருப்பினும், நகரத்தார் காலத்திலும் இவை தொடரப்பட்டிருப்பது தமிழகக் கோயிற் கலை வரலாற்றில் நீண்ட பாரம்பரியத்தை வெளிப்படுத்துவதாக உள்ளது. இரணிக் கோயில் தட்சிணாமூர்த்திக் கொரடு அமைப்பிலும் அழகிலும் இலுப்பைக்குடி, மாத்தூர் போன்ற ஏனைய நகரக் கோயிலின் கட்டடக் கலையுடன் ஒப்பிடத்தக்கது. மரத்தை உளியில் செதுக்கியதை ஒத்த வேலைப்பாடுகளை கல்லில் சிற்பிகள் சிற்றுளியால் செதுக்கியுள்ள பாங்கு நகரத்தார் காலகட்டடக் கலைக்கு கட்டியம் கூறுபவையாகத் திகழ்கின்றன.

## விமான அமைப்பு

தேவகோட்டத்தின் தலைப்பாகம், விமானத்தின் கீழ்த்தள கூரையின் உட்புறம் செருகப்பட்டது போல காணப்படுகிறது. கருவறைக்கு மேல் இருதளங்கள் சாலைகளாலும், செங்குத்தான கர்ணக் கூடங்களாலும் மாறி மாறி அலங்கரிக்கின்றன. சாலைகளுக்கும், கர்ணக் கூடுகளுக்குமிடையே நீண்ட பஞ்சரங்கள் காட்டப்பட்டுள்ளன.

விமானத் தளங்களில் உள்ள கோட்டங்களில் தெற்கு, மேற்கு, வடக்கு, கிழக்கு ஆகிய திசைகளில் முறையே வீணை வாசிக்கும் தட்சிணாமூர்த்தி, நிலமகள், பூமகள் ஆகியோருடன் தோன்றும் திருமால், சரசுவதி, சாவித்திரியுடன் தோன்றும் நான்முகன், இரு தேவியருடன் தோன்றும் சிவன் ஆகியோரது இறை உருவங்கள் சுதை சிற்பங்களாகக் காட்சியளிக்கின்றன.

இவற்றில் முதல் தளத்தில் சனகாதி முனிவர்கள் இருவருடன் அடர்ந்த ஆலின் கீழ் அமர்ந்து அமைதியே உருவாக கைகளில் வீணை ஏந்தி மென்மையாக வீணை மீட்டும் தென்திசைச் செல்வனும், அவ்வீணையின் நாதத்தில் தோய்ந்து இருக்கும் இரு சனகாதி முனிவர்களின் உருவங்களும் கோயிலில் கண்டு இன்புறத்தக்கவை

அவ்வாறு விமானத் தளங்கைளைத் தாங்கி நிற்கும் தாங்கிகளின் ஆண், பெண் உருவங்களும் கண்டுகளிக்கத் தக்கவை. இவ்விமானத்தின் கிரீவம் வட்ட வடிவுடையது. இதன் வேதியாகிய அடிப்படையின் கோடிகளில் இரட்டை நந்திகளும் அவற்றின் நடுவே, கர்ணக் கூடுகளும் காணப்படுகின்றன. பொதுவாக இரு நந்திகளின் நடுவே, காணப்படும் சிவகணங்கள் இங்கு காட்டப்படவில்லை. கிரீவ கோட்டங்களில் நான்கு திசைகளிலும் வனப்புடைய தெய்வச் சிலைகளைக் காணலாம். இதன் சிகரமும் தூபியும் கிரீவத்தைப் போன்று வட்டவடிவுடையது.

வட்ட வடிவுடைய சிகரத்தின் மீது ஊர்த்துவபத்மம், கட்டுமாலை, கண்ணாடிச்சட்டம், மகாபத்மம், வீரகண்டம் ஆகிய உறுப்புக்கள் அணி செய்ய அதன்மீது உலோகத்தாலான குடம் அமைந்து விளங்குகின்றது.

இவ்விமானம் அதிட்டானத்திலிருந்து கூரை வரை கருப்புக் கல்லாலும், அதன் மேலுள்ள இரு தளமும், சிகரமும், செங்கல்லைக் கொண்டும், காரையைக் கொண்டும் கட்டப்பட்டுள்ளது. ஆட்கொண்டநாதர் ஆலய விமானம் அதிட்டானம் முதல் விமானம் வரை 12.95 மீட்டர் (42-6'') உடையது. இவ்விமானத்தை அண்மையில் அதன் பழமை கெடாதவாறு வண்ணம் பூசிப் புதுப்பித்து 1990-ஆம் ஆண்டு சூலை 5-ஆம் தேதி குட நீராட்டு விழா செய்துள்ளனர்.

## அர்த்த மண்டபம்

கருவறை முன் உள்ள அர்த்த மண்டபம் செவ்வக வடிவுடையது. இதன் உட்புறம் 3.80 மீட்டர் நீளமும், 2.65 மீட்டர் அகலமும் உடையது. அர்த்த மண்டபம் தூண்களின்றி எளிமையான அமைப்புடையது.

அர்த்த மண்டப வாயில் நிலைக்கால்கள் வனப்புடையன. திருநிலைக்காலும், படியும், படியடையும் எளிமையான அமைப்புடையன. இத்திருநிலைக் கால்கள் 2.19 மீட்டர் உயரமும், அதனடிப்பகுதி 1.02 மீட்டர் அகலமும் கொண்டது.

அர்த்தமண்டப வாயிலின் மேற்புறம் உள்ள கபோத கூடுகளின் நடுவே கஜலட்சுமியும், இரு பக்கங்களில் லிங்க உருவமும் உள்ளன. வாயிலை ஒட்டி நிலைக்காலின் இரு பக்கங்களிலும் உள்ள அரைத்தூண்கள் கருமையும் திரட்சியும் பளபளப்பாயும், வனப்பும் கொண்டு திகழ்கின்றன. இவற்றில் ஒன்று வட்ட வடிவிலும், மற்றொன்று எண்பட்டை வடிவிலும் உள்ளன. இவற்றின் கால், இடை, பத்மபந்தம், தூபி, கலசம், பத்மம், பலவகை யாவும் எளிமையான அமைப் புடையவை. பலகை மீதுள்ள புட்ப போதிகை, வாழைப்பூவை ஒத்து வளைந்து வனப்பூட்டுகிறது. அர்த்த மண்டபத்தின் புறச் சுவரில் வடதிசையிலும், தென்திசையிலுமாக துர்க்கை, விநாயகர் ஆகிய தெய்வ உருவங்களின் படிமங்கள் உள்ளன. தேவகோட்ட மாடத்தின் இருமருங்கிலும் அரைத்தூண்களைக் கொண்ட கோஷ்ட பஞ்சரங்கள் அலங்கரிக்கின்றன.

## மகா மண்டபம்

அர்த்தமண்டபத்தின் முன்னுள்ள மகாமண்டபம் சதுர வடிவுடையது. அதன் பக்க அளவு 6.22 மீட்டர் ஆகும். அதன் வடக்கிலும், தெற்கிலுமாக சுவரை ஒட்டி பிள்ளைக் கால்களுடன் நான்கு தூண்கள் தாங்கி நிற்கின்றன. அத்தூண்களின் மீது மதளையும், சட்டமும், சிம்மமும், நாணுதல் மற்றும் பூ முனையும் அமைந்து அழகு செய்கின்றன. மகாமண்டபத்தின் மேற்சுவரில் வடக்கிலும், தெற்கிலும் காற்றும், வெளிச்சமும் வரத்தக்க வகையில் பக்கத்திற்கு இரு சன்னல்களை அமைத் துள்ளனர். அவ்வாறு மேல் திசைச் சுவரின் மீது பித்தளைக் கம்பிகள் கோத்து ஒற்றைச் சன்னல்களைக் காண்கிறோம். இவ்வாறு மண்டபத்தை உயர்த்தி அதன் சுவரில் காற்றோட்டம் தரும் சன்னல்களை அமைக்கும் வழக்கம் நகரத்தார் காலத்து கட்டடக் கலையில் ஒரு சிறப்பு அம்சமாக விளங்குகிறது.

மகாமண்டபத்தின் நான்கு மூலைகளிலும் உற்சவ சிலைகள் வைக்கும் வகையில் சுவரை ஒட்டி கல்மேடைகள் அமைந்துள்ளன. இம்மண்டபத்தின் நடுவே உள்ள மேடையின் மீது நந்தி, பீடம், கண்ணாடி ஆகியன நித்திய வழிபாட்டில் உள்ளன.

## நடராசர் சபை

மகாமண்டபத்தில் வடதிசையில் நடராசர் சபை உள்ளது. இது தென்திசை நோக்கி அமைந்துள்ளது. இச்சபை நீள் சதுர வடிவுடையது. சபையின் வடபுறத்தை ஒட்டி நீண்ட கல்மேடை அமைத்து, அம்மேடையின் மீது நடராசர் - சிவகாமி, மாணிக்கவாசகர் ஆகிய உலோகச் சிலைகளை வைத்துள்ளனர்.

நடராசர் சபைக்குரிய விமானம் ஒரு தளத்தையுடையது. நடராசர் சபையை அலங்கரிக்கும் விமானப்பகுதி நீண்ட வண்டிக் கூரையை ஒத்து சாலை வடிவில் அமைந்துள்ளது. நடராசர் சபைக்குரிய திருநிலைக்காலும், நிலைப் படியும் சுவாமி சன்னதியின் வாயிலை ஒத்த கட்டடப் பாணியில்

அமைந்துள்ளது. திருநிலைக் காலின் மேற்புறம் உள்ள கபோதக் கூடுகளின் நடுவே நடராசர், சிவகாமி, காரைக்கால் அம்மையார் ஆகியோரின் உருவங்களும் பக்கங்களில் லிங்க உருவமும் உள்ளன.

நடராசர் சபைக்குரிய வெளிவாயில் மகாமண்டபத்தின் தென்புறத்தில் அமைந்துள்ளது. இவ்வாயிலை அடைய கல்படிக்கட்டுகள் உள்ளன. இவ்வாயிலின் பக்கங்களில் அரைத் தூண்கள் அலங்கரிக்கின்றன. அவ்வாறு மகா மண்டபத்தை அடையும் நிலை வாயில் 5 படிகளைக் கொண்டது. திருநிலைக் காலின் பக்கங்களில் உள்ள தூண்கள் வேலைப்பாடு மிக்கவை. இவை செங்குத்தாக வரம்புகள் வெட்டப்பட்டு திகழ்கின்றது.

நிலை வாயில் மேற்புறம் உள்ள கபோதத்தின் நடுவே, சிவனும், உமையும் அம்மை அப்பனாக தோன்றி இடப வாகனத்தில் காட்சியளிக்கிறார்கள். பக்கத்தில் இரு சிவகணங்கள் தட்டைத் தலையில் தாங்கி நிற்கின்றன. நந்திகேசுவரர் மத்தளம் கொட்டுகிறார்.

இவ்வாறு கருவறை, விமானம், அர்த்தமண்டபம், மகாமண்டபம், நடராசர் சபை யாவும் கருப்புக்கல்லைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. இவை கி.பி. 20-ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தவை. இவை இரணியூர் நகரத்தாரால் தொடங்கப்பட்ட இரண்டாவது திருப் பணியைச் சார்ந்தவை. இத்திருப்பணி கி.பி. 1930-ஆம் ஆண்டு தொடங்கி 1934-ஆம் ஆண்டு முடிவடைந்துள்ளது. இக்காலக்கட்டத்தைப் பிந்திய நகரத்தார் காலத்தியதாகக் கருதலாம்.

### முகமண்டபம்

மகாமண்டபத்தின் முன்புறம் சுவாமி சன்னதிக்கும், அம்மன் சன்னதிக்கும், பைரவர் சன்னதிக்கும் பொதுவாக முகமண்டபம் விளங்குகிறது. இது மிக விசாலமாக விரிந்து காட்சி யளிக்கிறது. இம்முக மண்டபத்திலிருந்து சுவாமி சன்னதியுயம், அம்மன் சன்னதியையும், பைரவர் சன்னதியையும், அடியார்கள் தரிசிக்கும் வகையில் நன்கு திட்டமிட்டு கட்டப்பட்டுள்ளது.

### நவதுர்க்கை மண்டபம்

இம்மண்டபத்தின் வடதிசையில் அம்மன் சன்னதியும், பைரவர் சன்னதியும் அமைந்துள்ளன. அம்மன் சன்னதி எதிர்புறம் நவதுர்க்கை மண்டபம் அமைக்கப்பட்டுள்ளது. இவை இருவரிசையில் நவதுர்க்கையின் சிற்பங்களைத் தாங்கி நிற்கின்றன. வரிசைக்கு மூன்று தூண்கள் வீதம் இரண்டு வரிசைகளில் ஆறு தூண்கள் அலங்கரிக்கின்றன. இவை ஒவ்வொன்றும் 3.80 மீட்டர்; மொத்த உயரம் 7 மீட்டர் உடையவை. இவற்றில் இரண்டு கர்ணக்கால் வகையைச் சார்ந்தவை. ஏனைய இரண்டு அணி ஒட்டி கால் வகையைச் சார்ந்தவை. இத்தூண்களில் உள்ள சிற்பங்கள் சிற்பக்கலை பகுதியில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

அவ்வாறு சுவாமி சன்னதியின் எதிரே மகாமண்டபத்தின் முன்புறம் இரு வரிசைகளில் 10 தூண்கள் உள்ளன. கர்ணக்கால் வகையைச் சார்ந்த இத்தூண்கள் கம்பீரமாக உயர்ந்து மகாமண்டபத்தை அலங்கரிக்கின்றன. இத்தூண்களில் உள்ள தெய்வ உருவங்களை சிற்பக் கலைப் பகுதியில் காணலாம். இம்மண்டபத்தின் முன்பு உள்ள கல்மேடை மீது, நந்தி, பீடம், கொடிமரம் முதலியன சுவாமி சன்னதியை நோக்கி அமைக்கப்பட்டுள்ளன. முகமண்டபத்தின் மேல்புறம் உயர்ந்த விதானங்களை அமைத்து அதன் பக்கச் சுவர்களில் காற்றும் வெளிச்சமும் வரத்தக்க வகையில் பித்தளைக் கம்பிகள் செருகப்பட்ட பெரும் சன்னல்களை அமைத்துள்ளனர். இம்மண்டபம் சுமார் 300 பேர்கள் அமரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது. இம்மண்டபம் 19 மீட்டர், நீளமும் 14 மீட்டர் அகலமும் கொண்டு நீள் சதுர வடிவில் காணப்படுகிறது.

## மேல் சுற்றுப்பிரகாரம்

ஆட்கொண்டநாதர், சிவபுரத்தேவி, பைரவர், சண்டிகேசுவரர் ஆகிய சன்னதிகளைச் சுற்றி வலம் வருவதற்கு ஏற்ற வகையில் மேல் சுற்றுப்பிரகாரம் அமைக்கப்பட்டுள்ளது. இச்சுற்றுப் பிரகாரத்தில் இரண்டுபத்திகளில் தூண்கள் அமைந்துள்ளன. இத்தூண்கள் ஒவ்வொன்றும் 3.80 மீட்டர் உயரம் உடையவை. இவை சித்திர மண்டபக்கால் வகையைச் சார்ந்தவை.

இத்தூண்கள் மேலும், கீழும், நடுவிலும் சதுரமாக அமைத்து இடையே உள்ள பகுதி 16 பட்டை வடிவுடையதாக அமைந்து விளங்குகிறது. இத்தூண்களின் சதுரப் படைகளில் அன்னம், அமர்ந்த சிம்மம், யானை மீது அமர்ந்த சிம்மம், யாளி, மான், பூந்தொட்டிகளுடன் கூடிய பூச்செடிகள், கொடிக்கருக்குகள் போன்ற சிற்பங்கள் உள்ளன. இவற்றில் மிருகத்தின் உடலும், அன்னப் பறவையின் தலையும், இறக்கையும் கொண்ட ஒரு விசித்திர உருவம் நேரில் கண்டுகளிக்கத்தக்கது. இத்தூண்களின் மீது இருதலையுடைய புட்பபோதிகை வளைந்து வனப் பூட்டுகிறது. போதிகை மீது உத்திரங்களும், அதன் மீது விதானமும் அமைந்துள்ளன. தூண்களுக்கு இடையே நடந்து கொள்வதற்கு ஏற்ற வகையில் மேல் சுற்றுப்பிரகாரம் விசாலமாக அமைக்கப்பட்டுள்ளது. மேல் சுற்றுப்பிரகாரத்தை மொத்தம் 40 தூண்கள் அலங்கரிக்கின்றன.

## பைரவர் சன்னதி

இது இக்கோயில் முகமண்டபத்தில் சன்னதியை அடுத்து தென் திசையை நோக்கி உள்ளது. இது சிறிய கருவறையும் நீள்சதுர அர்த்தமண்டபத்தையும் உடையது. அதிட்டானம் முதல் கபோதம் வரை வெள்ளைக் கல்லாலும், விமானம் செங்கல்லாலும் காரையும் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. பைரவர் சன்னதி ஒரு நிலை விமானத்தை உடையது. கருவறை மற்றும் அர்த்தமண்டப புறச்சுவரை சுற்றிலும் அரைத் தூண்கள் அலங்கரிக்கின்றன. இத்தூண்களின் கீழ்ப் படைகளில் பைரவரின் பல்வேறு திருக்கோலங்கள் வடிக்கப்பட்டுள்ளன. இங்கு மொத்தம் 68 சிறிய சிற்பங்கள் உள்ளன. அவற்றில் 28 சிற்பங்கள் பைரவரின் பல்வகை வடிவங்களைக் காட்டுகின்றன.

ஆடையுடனும், ஆடையின்றியும் திகம்பரராகவும், அசுரனை அழிக்கும் நிலையிலும், நாய் வாகனத்தோடு நின்ற கோலத்திலும், பல சிறிய சிற்பங்களைக் காணலாம். இக்கோயில் உள்ள சிறிய சிற்பங்களில் இவை குறிப்பிடத்தக்கவை. பைரவர் சன்னதியின் கருவறையில் பைரவர் நான்கு கைகளுடன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். மேற்கைகள் இரண்டும், உடுக்கையும், ஆடும் அரவத்தையும் பிடித்துள்ளது. கீழ் வலக்கை திரிசூலத்தைப் பிடித்தும் கபாலத்தைப் பற்றியும் உள்ளன. பைரவரின் பக்கத்தில் அவரது வடுக வாகனம் காத்து நிற்கிறது. பைரவரின் உருவம் இவ்வாறு அளவோடும், அழகோடும் அமைந்துள்ளது.

## சண்டிகேசுவரர் சன்னதி

மேற்பிரகாரத்தின் வடதிசையில் சண்டிகேசுவரர்க்கு தனிச் சன்னதி எழுப்பப்பட்டுள்ளது. இது அதிட்டானத்திலிருந்து கபோதம் வரை வெள்ளைக் கல்லாலும், ஏனைய விமானப் பகுதி செங்கல், காரையைக் கொண்டு அமைக்கப்பட்டுள்ளது. இதன் அதிட்டானம் உபானம், பத்மம், கண்டம், ஜகதி, குமுதம், கண்டம், கபோதம், வேதிகை ஆகிய உறுப்புக்களைக் கொண்டு அமைந்து விளங்குகிறது. சுவரைச் சுற்றிலும் அரைத்தூண்களும், தேவகோட்ட மாடங்களும் அலங்கரிக் கின்றன. இச்சன்னதி ஒரு தள விமானத்தையுடையது. இதன் கிரீவமும் தூபியும் வட்ட வடிவுடையன. கிரீவ கோட்டங்களின் நான்கு திசைகளிலும் அமர்ந்த கோலத்தில் அலங்கரிக்கும் சண்டிகேசுவரரின் சுதை சிற்பங்கள் உள்ளன.

சன்னதியின் நடுவே இடது காலை மடித்து வலது காலை தொங்கவிட்ட நிலையில் சண்டிகேசுவரரின் உருவம் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கின்றது. அவரது வலது கை கோடாரியைத் தாங்கியும் இடது கை தொடை மீது அமைந்தும் உள்ளன. இது நகரத்தார் கால முதல் திருப்பணியின் போது பிரதிட்டை செய்து வைக்கப்பட்டுள்ளது.

## திருச்சுற்று

திருச்சுற்றை வலம் வருவதற்கு நீண்ட அகன்ற திருச்சுற்றுப் பாதை அமைக்கப்பட்டுள்ளது. இது மேல் சுற்றுப் பிரகாரத்திற்கும் திருமதிலை ஒட்டியுள்ள திருச்சுற்று மாளிகை பத்திக்கும் இடையே ஆற்றைப்போல் அமைந்து நீண்டும் விரிந்தும் செல்கின்றன.

இந்த திருச்சுற்றுப்பாதை கீழ் மேலாக 45.40 மீட்டர் நீளமும், தென் வடக்காக 27.50 மீட்டர் நீளமும் உடையது. திருச்சுற்றைச் சுற்றி வர மொத்தம் 145.80 மீட்டர் நீளத்தில் பாதை அமைத்துள்ளனர். இந்நெடிய பாதையின் அகலம் 4.24 மீட்டர் ஆகும்.

## திருச்சுற்று மாளிகை

திருச்சுற்று பிரகாரத்தையொட்டி திருச்சுற்று மாளிகை பத்தி எழுப்பப்பட்டுள்ளது. இப்பத்தியில் மொத்தம் 68 தூண்கள் அலங்கரிக்கின்றன. இவற்றில் 4 தூண்கள் கர்ணக்கால் தூண்களாக அமைந்து கம்பீரமாக காட்சி அளிக்கின்றன. 54 தூண்கள் அணிவொட்டிக் கால் வகையைச் சார்ந்தவை. 8 தூண்கள் சித்திரக்கால் வகையைச் சார்ந்தவை. ஏனைய 2 எளிய பிள்ளைக்கால் தூண்களாக உள்ளன.

கர்ணக்கால் வகையைச் சார்ந்த தூண்கள் முகப்பு மண்டபத்தில் உள்ள கொடி மரத்திற்கு எதிரே இரண்டும், அம்மன் சன்னதி எதிரே உள்ள நவதுர்க்கை மண்டபத்திற்கு முன்புறம் இரண்டும் கம்பீரமாக அமைந்துள்ளன. அணிவொட்டி தூண்களில் சஞ்சீவி மலையை தூக்கி வரும் அனுமான், வில்லும் அம்பும் ஏந்தி நிற்கும் இராமபிரான், ஒயிலாக நிற்கும் பெண் அணங்கு போன்ற சிற்பங்களைத் தவிர பெரும்பாலும் பூச்செடிகளையும் கொடிக்கருக்குகளையும் மட்டுமே செதுக்கப்பட்டத்தைக் காண்கிறோம். இத்தூண்களில் கட்டடக் கலையின் சிறப்பு மிகுந்தும் சிற்பங்கள் குறைந்தும் விளங்குகின்றன.

இன்றைக்கு 46 ஆண்டுகளுக்கு முன்பு (1944) எழுப்பப்பட்டுள்ள இத்திருச்சுற்றும், திருச்சுற்று மாளிகைப் பத்தியும் நாயக்கர், சேதுபதி காலத்து கட்டடக் கலையின் தொடர்ச்சியினைக் காட்டுகின்றன. எனினும், இங்குள்ள கம்பீரமான கர்ணக்கால் தூண்களும் அணி ஒட்டிக்கால் தூண்களும் அத்தூண்கள் தாங்கி நிற்கும் சிற்ப வடிவங்களும் சீறிப் பாயும் சிம்மங்களும் நகரத்தார் காலத்தில் வளர்க்கப்பட்ட கட்டடக் கலையை அடையாளம் காட்டும் வகையில் தனித்தன்மையோடு விளங்கக் காண்கிறோம். கோயில் கலையிலும், கட்டடக் கலை நிர்மாணிக்கும் ஆற்றலிலும், சைவ சமயத்திலும், நாட்டுக்கோட்டை நகரத்தார்களுக்கு உள்ள ஈடுபாட்டை இவை தெளிவாகக் காட்டுவதாக அமைகிறது.

திருச்சுற்று மாளிகையின் மேல்திசையில் சோமாஸ்கந்தர், விநாயகர், சுப்பிரமணியர், மகாலட்சுமி ஆகிய தெய்வங்களுக்குத் தனிச் சன்னதிகள் எழுப்பப்பட்டுள்ளன.

## சோமாஸ்கந்தர்

இது திருச்சுற்று மாளிகையின் தென் மேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. சன்னதி கீழ்த்திசையை நோக்கி உள்ளது. இச்சன்னதியின் அதிட்டானம் முதல கபோதம் வரை வெள்ளைக் கல்லால்

கட்டப்பட்டுள்ளது. சன்னதியின் வாயில் முகப்பைக் கஜலட்சுமியின் சிற்பங்கள் அலங்கரிக்கின்றன. இச்சிற்பத்தின் இரு பக்கங்களிலும் இரு பணிப்பெண்கள் காட்டப்பட்டுள்ளனர். சன்னதியின் சுவர்ப் பகுதியை வடக்கிலும், தெற்கிலுமாக இரு தேவகோட்ட மாடங்களும், அரைத்தூண்களும் அலங்கரிக்கின்றன. சன்னதியின் விமானத்தை ஒருதள விமானம் அலங்கரிக்கின்றது. சன்னதியில் சோமாஸ்கந்தர் தனியம்மன் ஆகிய தெய்வங்கள் வழிபாட்டில் உள்ளன.

### விநாயகர் சன்னதி

சோமாஸ்கந்தர் சன்னதியை அடுத்து பரிவாரத் தெய்வங்களில் ஒன்றான வினாயகருக்கு சன்னதி அமைந்து உள்ளது. சன்னதியின் நடுவே நான்கு கரங்களுடன் வீற்றிருக்கும் இடம்புரி விநாயகரின் திருக்கோலம் காட்சியளிக்கிறது. விநாயகர் மேற்கைகளில் அங்குசம், பாசம் ஏந்தி கீழ்க்கைகளில் தந்தம், மோதகம் கொண்டு காட்சி தருகிறார். இடம்புரியாக வளைந்துள்ள துதிக்கையிலும் மோதகம் ஒன்று காட்டப்பட்டுள்ளது. இத்திருவுருவம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இச்சன்னதி அதிட்டானம் முதல் கபோதம் வரை வெள்ளைக் கல்லைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. விநாயகர் சன்னதியின் மீது உள்ள விமானம் ஒரு தளத்தையுடையது. செங்கல்லும் சுதையும் கொண்டு கட்டப்பட்டுள்ளது.

### உற்சவ மண்டப மேடை

விநாயகர் சன்னதியை அடுத்து விநாயகர், சுப்பிரமணியர் இன்ன பிற தெய்வப் படிமங்களுக்கு நீண்ட மேடை அமைக்கப்பட்டுள்ளது. தற்போது அவை பயன்பாட்டில் இல்லை. உற்சவ சிலைகள் அனைத்தும் சுவாமி சன்னதியின் மகாமண்டபத்தில் வைக்கப்பட்டுள்ளன.

### சுப்பிரமணியர் சன்னதி

இச்சன்னதி திருச்சுற்று மாளிகையின் வடமேற்குப் பகுதியில் அமைந்துள்ளது. சன்னதியின் நடுவே சுப்பிரமணியர் நான்கு கைகளுடன் மயில் வாகனத்தில் அமர்ந்து காட்சியளிக்கிறார். மேற்கைகளில் வச்சிரப்படையும், சக்திப்படையும் கொண்டு கீழ்க்கைகளால் அபயவரதம் அளிக்கிறார். சுப்பிரமணியர் வலப்புறமும் இடப்புறமும் வள்ளியும் தெய்வானையும் தாமரை மலரையும், நீலோத்பலத்தையும் ஏந்தி மயில் வாகனத்தில் தனித்து காட்சியளிக்கிறார். இவ்வாறு வள்ளி தெய்வானை ஆகிய தேவியர் இருவரும் மயில் வாகனத்தில் தனித்துக் காட்சியளிப்பதைப் பண்டைய சிற்பங்களில் காண்பது அரிது. இது முந்தைய நகரத்தார் காலத்திய சிற்பக்கலையின் சிறப்பு அம்சமாகக் காணலாம். இவ்வுருவம் கி.பி. 18-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. முந்தைய நகரத்தார் காலத்திய சிற்பத் திருப்பணிக்கு 1944-ஆம் ஆண்டு நடந்த குடநீராட்டு விழாவை ஒட்டி சன்னதி எழுப்பப்பட்டுள்ளது. இது கபோதம் வரை வெள்ளைக் கல்லாலும் ஏனைய செங்கல்லைக் கொண்டும் கட்டப்பட்டுள்ளது. இச்சன்னதியின் விமானம் ஏகதள விமானமாக விளங்குகிறது.

### மகாலட்சுமி சன்னதி

திருச்சுற்று மாளிகையின், வடமேற்குப் பகுதியில் சுப்பிரமணியர் சன்னதியை அடுத்து இச்சன்னதி அமைந்துள்ளது. சன்னதி கீழ்த்திசையை நோக்கி உள்ளது. சன்னதியின் நடுவே மகாலட்சுமி நான்கு கைகளுடன் வீற்றிருக்கும் திருக்கோலம் காட்சி அளிக்கிறது. மகாலட்சுமி மேற்கைகளில் தாமரை மலரைப் பற்றி கீழ்க்கைகளால் அபயவரதம் அளித்து அருள்பாலிக்கிறார்.

மகாலட்சுமிக்கு இரு பக்கங்களிலும் யானைகள் அமுத குடத்தைத் தூக்கி நீர் சொரியும் நிலையில் காட்டப்பட்டுள்ளது. மகாலட்சுமி சுற்றிலும் அணி செய்யும் திருவாட்சி வேலைப்பாடு மிக்கது. இச்சிற்ப உருவங்கள் நகரத்தார் கலையை வெளிப்படுத்தி நிற்கின்றன. இச்சன்னதி அதிட்டானம் முதல் கபோதம் வரை வெள்ளைக் கல்லால் கட்டப்பட்டுள்ளது. சன்னதியின் சுவரை அரைத்தூண்களும் மாடங்களும் அலங்கரிக்கின்றன. இச்சன்னதியின் விமானம் ஒரு தள விமானம் ஆகும்.

### பள்ளியறை

திருச்சுற்று மாளிகையின் வடதிசையில் அமைந்துள்ளது. சன்னதி கீழ்த்திசையை நோக்கியது. அதிட்டானம் முதல் கபோதம் வரை கருப்புக் கல்லாலும் அதன் மேலுள்ள ஏக தள விமானம் செங்கல்லினாலும் காரையாலும் எழுப்பப்பட்டுள்ளன. பள்ளியறையில் கேடய ஊஞ்சலில் பள்ளியறை அம்மன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறார். அதிகாலையில் தொடங்கும் திருவனந்தல் கால சந்தி ஆகிய காலங்களிலும், இரவு சந்தியின் போதும், பள்ளியறை திறக்கப்பட்டு பூசை நடைபெறுகிறது. இச்சன்னதி திருச்சி-ஊறையூரில் இருந்து கொண்டு வந்த கருப்புக் கல்லைக் கொண்டு பளபளப்பாகத் தேய்த்து உருவாக்கப்பட்டுள்ளது. இச்சன்னதியின் திருநிலைக்காலும், வாயிலும், முகப்பும் வேலைப்பாடு மிக்கவை. பள்ளியறையின் மேல் முகப்பை லட்சுமியின் உருவம் அலங்கரிக்கிறது.

### வாகன அறை

வடக்கு திசுச்சுற்று மாளிகையை ஒட்டி பள்ளியறையின் பின்புறம் வாகன அறை விசாலமாக அமைக்கப்பட்டுள்ளது. பொதுவாக இக்கோயில் திருச்சுற்றில் வடக்குப் பகுதியில் உள்ள வாகன அறை புதிய அம்சமாகும். இத்தகைய வாகன அறையை செட்டி நாட்டுப் பகுதியில் வேறெங்கிலும் காண்பது அரிது. 9 நகரக் கோயில்களில் இரணியூர் கோயிலில் மட்டும் இது தனிச் சிறப்பாக விளங்குகிறது.

### அலங்கார மண்டபம்

திருச்சுற்று மாளிகையின் வடகிழக்கு மூலையில் அமைந்துள்ளது. இம்மண்டபத்தைத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. இவற்றில் அணிவொட்டி தூண்களின் மீது அமர்ந்த சிற்பங்கள் சிறப்பாகக் காட்சியளிக்கின்றன. திருவிழா நாட்களில் தெய்வத்திற்கு உருவங்களை அலங்காரம் செய்ய இம்மண்டபத்தைப் பயன்படுத்துகின்றனர். இம்மண்டபத் தூண்களில் உள்ள வில்லேந்திய வேடன், தோகை விரிந்து ஆடும் மயில், பாயும் மான், கொடிப் பெண்கள், கருப்பு சாமி, தாமரை மலர்களை ஏந்தி நிற்கும் லட்சுமி, விரைந்து செல்லும் குதிரை, கொடிக் கருக்குகள், மலர்க் கொடிகள், இரட்டைக் கிளிகள் ஆகிய சிற்ப உருவங்களைக் காணலாம்.

திருச்சுற்றின் வடகிழக்குப் பகுதியில் கேகியல் கருவூலமும், அதன் தென்புறம் யாகசாலையும், பெரும் அறைகளாகப் பாதுகாப்புடன் கட்டப்பட்டுள்ளது. யாகசலையின் தென்புறம் நவக்கிரக மண்டபம் அமைந்துள்ளது. ராஜகோபுரத்தின் உட்புறம் முகப்பு வாயிலை ஒட்டி வடதிசையிலும் தென்திசையிலுமாக சூரியன், சந்திரன் ஆகிய பரிவாரங்களில் உருவச் சிலைகள் உள்ளன. இவற்றில் சூரியன் உருவம் தாமரை மலர்களைப் பற்றியும், சந்திரனின் உருவம் அல்லி மலர்களைப் பிடித்தும் காட்சியளிக்கிறது.

# சிவபுரந்தேவி அம்மன் கோயில்

ஆட்கொண்ட நாதர் கோயில் முக மண்டபத்தில் வடதிசையில் அமைந்து உள்ளது. அம்மன் கோயில் தென்திசையை நோக்கி உள்ளது. இக்கோயில் கருவறை, அர்த்த மண்டபம் ஆகிய பகுதிகளைக் கொண்டு விளங்குகிறது. கருவறை சதுர வடிவுடையது. கருவறை நடுவே அம்மன் சிவபுரந்தேவி என்ற பெயரில் வழிபாட்டிலுள்ளாள்.

## சிவபுரந்தேவி

அம்மனின் திருவுருவம் தாமரை பீடத்தின் மீது இரண்டு கைகளுடன் நின்ற கோலத்தில் காட்சியளிக்கிறது. வலக்கை நீலோத்பலத்தைப் பிடித்து உள்ளது. இடக்கை தாழ் கையாக மேலெழுந்த நிலையில் உள்ளது. தலையைக் கரண்ட மகுடம் அலங்கரிக்கின்றது. கரங்களில் மகர குண்டலங்களும், கழுத்தில் மங்கல அணியும் கல்பதித்த சரப்பளியும் கைகளில் வளைகளும், மார்பில் நூலும், இடையில் கச்சையும், காலில் பாதசரமும் அணிந்து அம்மன் அழகே உருவாகக் காட்சியளிக்கிறாள்.

கருவறையின் அழகிய திருநிலைக்கால்களிலும், இரு பக்கங்களிலும் வட்ட வடிவிலும் எண்பட்டை வடிவிலும் உள்ள அரைத்தூண்கள் அலங்கரிக்கின்றன. இவை சுவாமி சன்னதி கருவறைவாயில் அமைப்பினை ஒத்து விளங்குகிறது.

## அர்த்த மண்டபம்

கருவறை முன்புறம் உள்ள அர்த்த மண்டபம் வடக்கு தெற்காக நீண்டு செவ்வக வடிவில் உள்ளது. இதன் நீளம் 2.70 மீட்டர்; அகலம் 2.10 மீட்டர் ஆகும். அர்த்த மண்டப வாயிலைத் திருநிலைக் கால்களும், அரைத்தூண்களும் அலங்கரிக்கின்றன. அர்த்த மண்டப வாயில் முகப்பை கஜலட்சுமியின் சிற்ப உருவம் அலங்கரிக்கிறது. இதன் பக்கத்தில் சாமரை வீசும் நிலையில் இரு பணிப்பெண்களும் விநாயகர், சுப்பிரமணியர் ஆகிய உருவங்களும் காட்டப்பட்டுள்ளன.

## அம்மன் கோயில்

கருவறை புறச்சுவர் கட்டட வேலைப்பாடும், சிற்ப நுணுக்கமும் மிகுந்து விளங்குகின்றன. அம்மன் கோயில் அதிட்டானம் உபானம், பத்மம், கண்டம், கபோதம், பத்மம், ஜகதி, முப்பட்டைக் குமுதம், கண்டம், பட்டிகை, கண்டம், வேதிகை ஆகிய உறுப்புகளைக் கொண்டு விளங்குகிறது. அம்மன் கோயில் கருவறை அர்த்த மண்டப புறச்சுவர்களை வேலைப்பாடு மிக்க தேவகோட்ட மாடங்களும், அதன் பக்கங்களில் செங்குத்தாக வரம்புகள் வெட்டப்பட்ட வனப்புயைட தூண்களும் கோட்ட பஞ்சரங்களும், கும்ப பஞ்சரங்களும் அரைத்தூண்கள் பலவும் அமைந்து காட்சியளிக்கின்றன. இவை சுவாமிக் கோயிலைவிட நேர்த்தியாக அமைக்கப்பட்டுள்ளன. இக்கோயில் விமானம் வெள்ளைக் கல்லைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. இதன் விமானம் ஒரு தளத்தை உடையது.

## சிற்பங்கள்

கருவறை அர்த்த மண்டப புறச்சுவரை அலங்கரிக்கும் அரைத்தூண்களின் அடிப்படையில் எழில் வாய்ந்த சிற்பங்கள் பல நேர்த்தியாகச் செதுக்கப்பட்டுள்ளன. இவற்றில் விநாயகப் பெருமான்,

சுப்பிரமணியர், துவார சக்தி, சங்கு ஊதும் பூதகணங்கள், சாமரை ஏந்திய பணிப்பெண்கள், கன்னிமார் எழுவர் ஆகியோரது சிற்ப உருவங்களைக் காணலாம். இவற்றில் பிராமி, மகேசுவரி, இந்திராணி, வைணவி, கௌமாரி, வராகி, சாமுண்டி ஆகிய ஏழு மகளிர் உருவங்களும் தனியாக அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கின்றன.

சங்கு, சக்கரம், அங்குசம், பாசம், வில், அம்பு, குறுவாள், கத்தி, கைமணி, கபாலம், திரிசூலம் ஆகிய பல்வகை ஆயுதங்களை நான்கு, எட்டு மற்றும் பத்து கைகளில் ஏந்திய நிலையில் தேவியின் வடிவங்கள் பல காட்சியளிக்கின்றன. அவை அடியார்களுக்கு அருள்பாலிக்கும் நிலையிலும், அசுரர்களை அழிக்கும் நிலையிலும், ஐந்து அசுரர்களை அடுக்கி படுக்க வைத்து அவர்கள் மீது அமர்ந்து ஐந்து தலைகளையும் பத்துக் கைகளையும் கொண்டு தோன்றும் நிலையிலும் காணப்படுகின்றன. அம்பும் கரும்பும் ஏந்தி நிற்கும் அம்மனாகவும், மழுவும் மானும் ஏந்தி காளை வாகனத்தில் சாய்ந்து நிற்கும் பெண் தெய்வமாகவும், லிங்க பூசை செய்யும் தெய்வப் பெண்ணாகவும், தம் குழந்தைகளோடு தோன்றும் தாய்த் தெய்வமாகவும், நுணுக்கமாகப் படைக்கப் பெற்ற சிற்பங்கள் யாவும் நேரில் கண்டு காணத்தக்கவை.

இங்குள்ள சிறிய சிற்பங்களில் ஒன்று பார்வதி தம் இளைய பிள்ளையான முருகனை இடுப்பில் கொண்டு மூத்த பிள்ளையான விநாயகரை நடத்தி அழைத்துக் கொண்டு வர, தட்டை தலையில் தாங்கிய சிவகணத்துடன் தேவி தாய்த்தெய்வமாகத் தோன்றும் காட்சி பார்ப்போர் ஒவ்வொருவரையும் பக்தி பரவசத்தில் ஆழ்த்துவதாகும். இச்சிற்பம் சீரிய முறையில் கீழ்ப்புறச் சுவரின் தூணில் செதுக்கப்பட்டுள்ளது. இது வழுவூர் திருவாரூர் ஆகிய இடங்களில் உள்ள சோழர் காலப் செப்புபடிமங்களுடன் ஒப்பிடத்தக்கது. செட்டி நாட்டு சீரிய கலைத்திறனையும், அவர்கள் போற்றிக் காத்த நாட்டுக்கோட்டை நகரத்தாரின் கலைப் பாணியையும் வெளிப்படுத்துபவை.

**அம்மன் கோபுரம்**

அம்மன் கோபுரம் தெற்கு வாயிலில் அழகுறக் காட்சியளிக்கிறது. அம்மன் கோபுரம் அதிட்டானம் முதல் கூரை வரை வெள்ளைக் கற்களைக் கொண்டு கட்டப்பட்டுள்ளது. கோபுரத்தின் நுழைவாயிலின் இரு பக்கங்களிலும் அதன் இரு நிலைகள் வரை ஏறிச்செல்ல படிக்கட்டுக்கள் அமைக்கப்பட்டுள்ளன. இக்கோபுரத்தின் அடி முதல் சிகரம் வரை முறையான அங்கங்களைப் பெற்று விளங்குகிறது. கோபுரவாயிலின் இரு பக்கங்களை அலங்கரிக்கும் திருநிலைக்கால்கள் ஒரே கல்லால் எளிமையாக செதுக்கப்பட்டுள்ளன. நுழைவாயிலின் பக்கச்சுவரில் கொடிப்பெண்கள் காட்டப்பட்டுள்ளனர்.

இக்கோபுரத்தின் கபோதமும் கொடுங்கையும் கவனத்தோடு உருவாக்கப்பட்டுள்ளன. கபோதத்தின் உட்பகுதி மரத்தைச் செதுக்கி வைத்தது போன்று கல்வேலைப்பாடு சிறப்பாக அமைந்துள்ளது. கூரையின் உட்புறம் கல்லால் ஆன மரச்சாத்துகளுக்கு இடையே நீண்ட கல் கம்பிகள் செருகப்பட்டு, கல்வியிலேயே குமிழ் ஆணிகள் அறையப்பட்டுள்ளன. இது ஏனை நகரத்தார் கட்டடக் கலையமைப்பினை ஒத்து விளங்குகிறது.

இக்கோபுரம் இராஜகோபுரத்தைப் போன்று ஐந்து நிலைகளை உடையது. ஒவ்வொரு நிலைகளிலும் சாலை, கர்ணகூடம், பஞ்சரம் ஆகிய பகுதிகள் மாறி மாறி அமைக்கப்பட்டுள்ளன. இடையிடையே தெய்வ உருவங்களும் கோபுரம் தாங்கிப் பதுமைகளும் சிவகணங்களும் அமைந்து அலங்கரிக்கின்றன.

கோபுர நிலைகளை அலங்கரிக்கும் மைய சாலைகள் கீழே அகன்றும் மேலே செல்லச் செல்ல குறுகியும் அமைந்துள்ளன. இதன் மையப் பகுதி சற்று முன் பிதுங்கிய வண்ணம் காணப்படுகிறது. முதல் நிலையில் தட்சிணாமூர்த்தி உள்ள மைய சாலையின் இரு பக்கங்களிலும் இரு துவாரசக்திகள் காட்டப்பட்டுள்ளன. இவர்கள் தலையில் சடைமுடி தரித்து, கழுத்தில் முத்தாரம் அணிந்து, இடையில் சேலை உடுத்தி சிம்மத்தின் மீது காலை நிறுத்தி நின்ற நிலையில் காட்டப்பட்டுள்ளனர். இவர்களது வலது கையில் சூலத்தண்டும், இடது கையில் கதாயுதமும் கொண்டுள்ளனர். இவர்களது பக்கத்தில் பணிப்பெண்கள் இருவர் உள்ளனர். வலப்புறம் எண்தோள் காளியின் உருவமும் அருகில் பணிப்பெண் ஒருத்தியும் காட்டப்பட்டுள்ளனர். தென்மேற்கு மூலையில் வயது முதிர்ந்து உடல் தளர்ந்த நிலையில் மூதாட்டியின் உருவம் ஒன்று காணப்படுகிறது. இவரது உடலில் ஆடையும் இடுப்பில் பணப் பையும் காணப்படுகின்றன.

அவ்வாறு இடப்புறம் எண்தோள் காளியின் உருவமும், பணிப்பெண்ணின் உருவமும் உள்ளன. தென் கிழக்கு மூலையில் வலது காலைத் தரையில் ஊன்றி இடதுகாலை முன்னால் மடித்து ஆயர் குலத்து இடையனைப் போல் தோன்றும் முதிர்ந்த பெரியோனின் உருவம் காட்டப் பட்டுள்ளது. அவர் தம் வலது கையைத் தாழ்வாயில் வைத்து, இடது கையை இடுப்பில் கொண்டு, தொலைவில் உற்று நோக்கும் நிலையிவ் காட்டப்பட்டுள்ளார். இச்சிற்பங்களின் மேல்பகுதிகளில் கந்தர்வப் பெண்கள் இருவர் கோபுரம் தாங்கிகளாகக் காட்சியளிக்கின்றனர்.

முதல் நிலையில் மேல் திசையில் சாலைக்கும் கர்ண கூடத்திற்கும் இடையே நான்கு கைகளுடன் கூடிய அம்மனின் உருவம் காணப்படுகிறது. அவரது வலப்புறத்தில் மற்றொரு பெண் தெய்வம் மேற்கைகளில் அங்குசம், பாசம் ஆகிய ஆயுதங்களைப் பற்றி, கீழ்க் கைகளால் அபயவரதம் அளிக்கிறது. அதனையடுத்து பணிப்பெண் ஒருத்தி காட்டப்பட்டுள்ளாள். அவ்வாறு முதல் தளத்தின் கீழ்த்திசையில் தலையில் அனல் மகுடம் தரித்த காளியும் பணிப்பெண்ணும் காட்டப்பட்டுள்ளனர்.

அம்மன் கோபுரத்தின் இரண்டாவது தளத்தின் தென்திசையில் மைய சாலையின் இருமருங்கிலும் இரு துவார சக்திகளின் உருவங்கள் மற்றும் இரு பணிப் பெண்கள் காட்டப்பட்டுள்ளனர். பணிப்பெண்கள் மேலை நாட்டுப் பாணியில் முழங்கால் வரை ஆடைகளை அணிந்துள்ளனர். கழுத்தில் ஆரம் தரித்து, தலையை முடியாமல் ஒயிலாக நிற்கின்றனர். இவை நகரத்தார் காலத்துச் சிற்பங்களில் ஐரோப்பிய நாகரிக தாக்கங்களைக் காண்பதற்கு வகை செய்கின்றன.

இரண்டாம் நிலையில் வலப்புறம் எண்தோள் காளியும், வடகோடியில் அஞ்சிலத்து நிற்கும் ஆடவனும் காட்டப்பட்டுள்ளனர். மேல் திசையில் உள்ள சாலையின் நடுவே அம்மனது உருவம் அமர்ந்த கோலத்தில் காட்சியளிக்கிறது. அம்மனது இருமருங்கிலும் இரு பணிப் பெண்கள் தாமரை ஏந்திய நிலையில் காத்து நிற்கின்றனர். இதன் வடபுறத்தில் இளம்பிள்ளையின் உருவமும், இடப்புறம் சங்கு சக்கரம் ஏந்தி நிற்கும் துர்க்கையின் உருவமும் காட்டப்பட்டுள்ளன.

கீழ்த்திசையில் உள்ள சாலையின் நடுவே அருள்பாலிக்கும் அன்னையின் உருவம் பணிப்பெண்களோடு காட்டப்பட்டுள்ளது. இங்குள்ள சாலைக்கும் கர்ணகூடத்திற்கும் இடையே உடுக்கையையும் பாசக் கயிறையும் பிடித்து நிற்கும் அம்மனின் நின்ற கோலத்தைக் காணலாம். இத்தளத்தின் வடதிசையில் துவாரசக்திகள், பணிப்பெண்கள், சிறுபாலகனின் பதுமைகள் ஆகியவை அலங்கரிக்கின்றன. நான்கு திசைகளிலும் கோபுரம் தாங்கிகளின் ஆண் பெண் உருவங்கள் காட்டப் பட்டுள்ளன. இவர்கள் தம் தோளில் கோபுரத்தைத் தாங்குவது போன்று தோளை முட்டுக் கொடுத்து கால்களை மடக்கி கைகளை ஊன்றிய நிலையில் மிக இயற்கையாகக் காட்சியளிக்கின்றனர்.

மூன்றாவது தளத்தின் தென்திசையில் உள்ள சாலையின் இருமருங்கிலும் கதாயுதம் பற்றி நிற்கும் இரு துவார சக்தியின் உருவங்கள், பணிப்பெண்கள் காட்டப்பட்டுள்ளனர் மற்றும் அல்லி மலர் ஏந்திய அன்னையும், தாமரை மலரைப் பற்றிய தேவியும், அஞ்சலித்து நிற்கும் ஆடவர்களும், கோபுரம் தாங்கிகளும் காட்டப்பட்டுள்ளனர். ஆடவரது அருகில் கைக்குழந்தையைத் தம் தொடையில் வைத்துக்கொண்டு வெளிப்புறக் காட்சிகளைக் குழந்தைக்குச் சுட்டிக்காட்டி மகிழும் கோபுரம் தாங்கியின் பெண் உருவம் கண்டுகளிக்கத்தக்கது. அவ்வாறு மறுபுறத்தில் வீரன் ஒருவன் வாளை உருவிய நிலையில் போருக்குச் செல்லும் காட்சியும் அருகிலே அவனது தலைவி கையில் புறாவை வைத்துக்கொண்டு வீரனைப் போருக்கு வழியனுப்பி வைக்கும் காட்சியும் கண்டுகளிக்கத்தக்கவை.

மேல் திசையில் பணிப்பெண்களோடு தோன்றும் தேவியின் அமர்ந்த கோலமும் அருகில் வணங்கி நிற்கும் ஆடவரது உருவமும் காணத்தக்கவை. அவ்வாறு கீழ்த்திசையில் உடுக்கை ஏந்திய அன்னையின் உருவமும், பணிப்பெண்கள் மற்றும் பதுமைகளின் வடிவங்களும் நேரில் காணத்தக்கவை. வடதிசையில் துவாரசக்திகள், மலர் ஏந்தி நிற்கும் மங்கையர்கள், அஞ்சலித்து நிற்கும் ஆடவர்கள், ஆடுமகள் உருவங்கள் உள்ளன. இடையில் ஆடையும் மேல் உடலில் கச்சையும் அணிந்து கொண்டு கழுத்தில் முத்து மாலைகள் அலங்கரிக்க ஆடுகின்ற ஆடுமகளும் அவளது அருகில் மீசையை முறுக்கிக் கொண்டு களிநடனம் புரியும் ஆடவனது உருவமும் காணத்தக்கவை.

இவ்விதம் நான்காவது நிலையிலும், ஐந்தாவது நிலையிலும் அழகிய சுதைச் சிற்பங்கள் அணி செய்யக் காண்கிறோம். ஒவ்வொரு நிலைகளிலும் உள்ள கோபுரம் தாங்கிகளின் சிற்பங்கள் மாறுபட்ட வகையில் வேறுபட்ட வடிவங்களுடன் படைக்கப்பட்டுள்ளன. இளவரசியுடன் தோன்றும் இளவரசனாகவும், போர் வீரனாகவும், வாளுடன் தோன்றும் தளபதியாகவும், மனைவி குழந்தைகளோடு தோன்றும் குடும்பத் தலைவனாகவும், ஆடுமகளுடன் ஆடிக்களிக்கும் ஆடவனாகவும் காட்டப்பட்டுள்ளது குறிப்பிடத்தக்கது. இவர்கள் மேல் உடலில் அரைச் சட்டை, முழுச் சட்டை முதலிய ஆடைகள் அணிந்தும் இடையில் இடுப்புவார் அணிந்தும் கைகளில் கெடிகாரங்கள் கொண்டும் காணப்படுகின்றன. மூகத்தில் தாயத்து, மணிமாலை, காதில் கடுக்கன், நெற்றியில் சந்தனப் பொட்டு, தலையில் உருமால் அணிந்து நவீனமாகப் படைக்கப்பட்டுள்ளனர். இவை இச்சிற்பங்கள் தோற்றுவிக்கப்பட்டுள்ள காலத்திய அன்றாட வாழ்க்கை நிலையினை நன்கு வெளிப்படுத்தும் வகையில் அமைந்துள்ளன.

இக்கோபுரம் வெள்ளைக் கல், செங்கல் மற்றும் சித்துக் கல்லைக் கொண்டும் சுண்ணாம்பு அரைத்த தீர்வையைக் கொண்டும் உறுதியாகக் கட்டப்பட்டுள்ளது. இதில் உள்ள சித்துக் கற்கள் நுட்பமான அமைப்பைக் கொண்டவை. கோபுர நிலைகளை அலங்கரிக்கும் சாலைகள், கூடங்கள், பஞ்சரங்கள் யாவும் மிக நுட்பமாக அமைக்கப்பட்டுள்ளன. இவற்றைச் சுற்றிலும் உள்ள அரைத்தூண்களும் செங்கல்லைக் கொண்டு நுட்பமாகச் செதுக்கப்பட்டுள்ளன. கோபுர நிலைகளை அலங்கரிக்கும் சுதைச் சிற்பங்கள் யாவும் உடைத்த செங்கல், சுண்ணாம்புத் தீர்வை ஆகியவற்றைக் கொண்டு தோற்றுவிக்கப்பட்டுள்ளன. சுதை உருவங்களை அமைக்கும்பொழுது அதன் கை, கால் முதலிய அங்கங்களை அமைக்க அவற்றின் நிலைகளுக்கு ஏற்ப உரிய இடங்களில் கம்பிகளை நீட்டியும் வளைத்தும் அமைத்துள்ளனர். சுதைச் சிற்பங்கள் யாவும் நேர்த்தியாக வண்ணங்கள் பூசப்பட்டு கோபுரத்தினை அலங்கரிக்கின்றன.

கோபுரத்தின் ஐந்தாவது நிலையில் கிரீவப் பகுதி அமைக்கப்பட்டுள்ளது. கிரீவத்தின் நான்கு மூலைகளிலும் சிவகணங்கள் இரு நந்தியுடன் காட்டப்பட்டுள்ளன. சிகரம் சாலை வடிவில்

அமைக்கப்பட்டுள்ளது. சிகரத்தின் இரு பக்கங்களில் மஹாநாசிப் பகுதி வனப்போடு காட்சியளிக்கிறது. மஹாநாசியின் கீழ்ப்புறத்தில் அம்மனது உருவமும், மஹாநாசியைச் சுற்றிலும் கந்தர்வப் பெண்கள் விண்ணில் நின்று கொண்டு பூமாலை சொரியும் காட்சியும் வனப்போடு சித்தரிக்கப்பட்டுள்ளன. சிகரத்தின் மீது மஹா பத்மம், கண்ணாடிச் சட்டம், கட்டுமாலை, பாளிகை, அலுங்குகள் முதலியன வனப்போடு அமைந்து விளங்குகின்றன. கோபுரத்தின் உச்சியில் உலோக கலசங்கள் அலங்கரிக்கின்றன. இக்கோபுரம் இரண்டாவது திருப்பணியின் போது கட்டப்பட்டுள்ளது. இராஜகோபுரத்தைவிட உயரம் குறைந்து ஒடுங்கிய நிலையில் காணப்படுகிறது.

## கோபுர முகப்பு மண்டபம்

அம்மன் கோபுரத்தின் முன்புறம் இம்மண்டபம் அமைந்துள்ளது. இதனை எட்டுத் தூண்கள் தாங்கி நிற்கின்றன. முதல் வரிசையில் உள்ள நான்கு தூண்களில் தென்கிழக்கிலும், தென்மேற்கு மூலையிலுமுள்ள இரு தூண்கள் மட்டும் கர்ணக்கால் வகைச் சார்ந்தவை. ஏனைய ஆறு தூண்களும் அணியொட்டிக் கால் வகையைச் சார்ந்த தூண்களாக அமைந்து காட்சியளிக்கின்றன. தென்கிழக்கு மூலையில் உள்ள கர்ணக்கால் தூணின் கால் பகுதியில் பத்மவரிக்கும் கபோதவரிக்கும் இடையில் சங்கூதும் பூதகணங்கள், அமர்ந்த சிம்மம் ஆகிய உருவங்கள் அணிசெய்கின்றன. இதன் மீதுள்ள சதுரப்படைகளில் மானுக்குத் துளிர் கொடுக்கும் பிட்சாடனர், தாருகாவனத்து முனிப்பெண்டிர், யானைக்குத் துளிர் கொடுக்கும் அண்ணல், சந்திரசேகரமூர்த்தி, சந்திரசேகர அம்மன், அஞ்சலித்து நிற்கும் முனிவர், நந்தீசுவரர், நடமாடும் பெண், தவம் செய்யும் பெரியோன் ஆகிய சிற்பங்களைக் காணலாம்.

இத்தூணின் நடுவே உள்ள படைகளில் யாளியின் தலையும் பறவையின் உடலும் கொண்டு இரு புராணப் பறவைகளின் உருவங்களும், அழகிய அன்னத்தின் உருவமும் செதுக்கப்பட்டுள்ளன. இத்தூணில் இணைந்துள்ள பிள்ளைக்கால்களின் நடுவே முகப்பத்திரம் அலங்கரிக்க அதன் மீது கந்தர்வகணம் ஒன்று பூச்சொரியும் காட்சியைக் காணலாம். தூணின் சதுரப் படையின் யானையும் யானைப் பாகனும் காட்டப்பட்டுள்ளனர். பிள்ளைக் கால்களின் மேலுள்ள மதளைகளின் இடையே நாட்டியமாடும் பெண்ணும், கைத்தாளம் போடும் நட்டுவாங்கமும் காட்டப்பட்டுள்ளன. மதளை களின் பின்புறம் சீறிப் பாயும் சிங்கமும் பழம் தின்னும் குரங்கும் இயற்கையாக செதுக்கப் பட்டுள்ளன.

தென்மேற்கு மூலையில் உள்ள கர்ணக்காலின் சதுரப் படைகளில் முயலகன் மீது நடமாடும் நடராசர், குழல் ஊதும் வேணுகோபலன் ஆகிய சிற்பங்கள் உள்ளன. நடுவே உள்ள படைகளில் விரிந்த தாமரையும், லிங்கத்திற்குப் பால் சொரியும் பசுவும் காட்டப்பட்டுள்ளன. மேல் பகுதியில் இரு விருட்சங்களுக்கு நடுவே தலலிங்கம் காட்டப்பட்டுள்ளது. இத்தூணில் இணைந்துள்ள பிள்ளைக்கால்களில் தவம் செய்யும் பெரியோன், மணிவாசகப் பெருமான், நடனமாடும் நங்கை, தவம் செய்யும் முனிவர், தண்டாயுதபாணி, இடும்பன், அஞ்சலிக்கும் அடியார் ஆகியோரது சிற்பங்கள் உள்ளன. பிள்ளைக்கால்களின் இடையே உள்ள முகபத்திரத்தின் மேல் கைகளில் மாலை ஏந்திய கந்தர்வர்களின் உருவங்கள் காட்டப்பட்டுள்ளன.

இத்தூண்களின் மேலுள்ள மதளைகளின் நடுவே சங்கூதும் பூதகணம், படமெடுத்தாடும் பாம்பு, இறக்கைகளுடன் கூடிய கந்தர்வ மகளிர் ஆகியோரின் சிற்பங்களைக் காணலாம். இம்மதலைகளின் பின்புறம் மதலை முனையை இயற்கையாகக் கொய்யும் கிளி, தலைகீழாகச் சாய்ந்த நிலையில் விண்ணைப் பார்க்கும் யாளி ஆகிய உருவங்கள் வனப்போடு செதுக்கப்பட்டுள்ளன.

கர்ணக்காலின் இடையே உள்ள இரு அணியொட்டிக் கால்களின் படைகளில் லிங்கத்திற்குப் பால் சொரியும் பசு, இலைக்கொத்தைப் பிடித்து நிற்கும் யானை, சின் முத்திரை காட்டி நிற்கும் பெரியோன் ஆகிய உருவங்கள் செதுக்கப்பட்டுள்ளன. அடுதத்துள்ள தூணில் வலுவான கால்களுடன் சீறிப் பாயும் சிங்கம், அக்கமாலை ஏந்திய முனிவன், தழைக்கொம்பை துதிக்கையினால் பிடித்து நிற்கும் யானை ஆகிய உருவங்களைக் காணலாம். கிழக்கிலும் மேற்கிலும் மதிற்சுவரை யொட்டியுள்ள அணியொட்டித் தூண்களில் சஞ்சீவி மலையைத் தூக்கி வரும் அனுமன், தல மரத்தின் கீழுள்ள லிங்கம் ஆகிய சிற்பங்களும் உள்ளன. ஏனைய அணியொட்டித் தூண்களில் புருஷா மிருகம், பூதகணம், ஓலைக் கூடை ஏந்தி வரும் குறத்தி ஆகிய சிற்பங்களைக் காணலாம்.

அம்மன் கோபுர முகப்பு மண்டபத்தினைத் தாங்கி நிற்கும் தூண்கள் யாவும் குன்றக்குடி மலையிலிருந்து கொண்டு வரப்பட்டவை. தனித்தூண்களாகக் கிடந்த இவற்றைத் திருப்பணியின் போது சேகரித்து முகமண்டபம் எழுப்பப்பட்டுள்ளது. அம்மன் கோபுரத்திலுள்ள வெள்ளைக் கற்களைவிட இவை காலத்தால் முற்பட்டவை. இதன் மீது கருப்புப் புள்ளிகள் விழுந்துள்ளதால் களையம்சம் குறைந்து காணப்படுகின்றன. இத்தூண்களைத் தாங்கி நிற்கும் நீண்ட உத்திரங்களும் அதன் மீது விமானத்தில் அடுக்கப்பட்ட நீண்ட பாவுக் கற்களும் புதுக்கோட்டை மாவட்டம் குருவிக் கொண்டான்பட்டி குடமலையில் இருந்து கொண்டு வரப்பட்டவையாக செவி வழிச் செய்தி கூறுகிறது.

நன்றி : **மா. சந்திரமூர்த்தி,** எம்.ஏ.,
இரணியூர்க்கோயில்,
மணிவாசகர் பதிப்பகம் வெளியீடு







# திருமுறை காணும் ஆட்கொண்ட நாதர்

தொகுத்தளித்தவர்
**அ.ராம.அ.லெ.அ.முவீ. முத்துவீரப்ப செட்டியார்**
தேவகோட்டை

பிரமோதூத ஆண்டு ஆனி மாதம் 21ம் தேதி (5.7.90) வியாழனன்று நடைபெற்ற இரணியூர் நகரக் கோயில் மஹா கும்பாபிஷேகத்தை முன்னிட்டு ஆட்கொண்ட நாதனைப் பற்றித் திருமுறையில் உள்ளதைத் தொகுத்து தருகின்றோம்.

**பொல்லாப்பிள்ளையார் - திருநாரையூர்**

என்னை நினைந்தடிமை கொண்டென் இடர்கெடுத்துத்
தன்னை நினையத் தருகின்றான் - புன்னை
விரசு மகிழ் சோலை விந்நாரை யூர்முக்கண்
அரசுமகிழ் அத்திமுகத் தான்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார் அருளிச் செய்தது.

**முதல் திருமுறை - பொது**

மற்றினை இல்லா மலைதிரண் டன்னதிண் தோளுடையீர்க்
கிற்றெமை யாட்கொண்டு கேளாது ஒழிவதுந் தன்மை கொல்லோ
சொற்றுனை வாழ்க்கை துறந்துந் திருவடி யடைந்தோம்
செற்றெமைத் தீவினை தீண்டப்பெறாதிரு நீலகண்டம்.

**திருத்தலைச்சங்காடு**

அலையாரும் புனறுறந்தவ மணர் குண்டர் சாக்கீயர்
தொலையா தங்கலர் தூற்றத் தோற்றங் காட்டியாட் கொண்டீர்
தலையான நால் வேதந்தரித்தார் வாழுந் தலைச் சங்கை
நிலையார்ந்த கோயிலே கோயிலாக நின்றீரே.

**2ம் திருமுறை: திருவெண்ணியூர்**

கனிதனைக் கனிந்தவரைக் கலந்தாட் கொள்ளும்
முனிதனை மூவுலகுக் கொருமூர்த்தியை
நனிதனை நல்லவர்தாந் தொழுமும் வெண்ணியில்
இனிதனை யேத்துவர் ஏதமி லாதாரே.

*திருநாவுக்கரசு சுவாமிகள் அருளிச் செய்தது*

### 4ம் திருமுறை: தனித் திருவிருத்தம்

சிவனெனு நாமந் தனக்கே உடையசெம் மேனியெம்மான்
அவனெனை ஆட்கொண்டளித்திடு மாகில் அவன்தனையான்
பவனெனு நாமம் பிடித்துத் திரந்துபன் னாளழைத்தால்
இவனெனைப் பன்னாள் அழைப்பொழியானென் றெதிர்ப்படுமே.

### 4ம் திருமுறை தில்லை/சிதம்பரம்

ஊனத்தை நீக்கி யுலகறிய என்னை ஆட்கொண்டவன்
தேனொத் தெனக்கினியான் தில்லைச் சிற்றம் பலவனெங்கோன்
வானத் தவருய்ய வன்னஞ்சை உண்ட கண்டத்திலங்கும்
ஏனத் தெயிறுகண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே.

சாட வெடுத்தது தக்கன்றன் வேள்வியிற் சந்திரனை
வீட வெடுத்தது காலனை நாரணன் நான் முகனும்
தேட வெடுத்தது தில்லையுட் சிற்றம் பலத்து நட்டம்
ஆட வெடுத்திட்ட பாதமன்றோ நம்மையாட் கொண்டதே.

### 4ம் திருமுறை: திருக்கண்டியூர் வீரட்டம்

மாய்ந்தன தீவினை மங்கின நோய்கள் மறுகிவிழத்
தேய்ந்தன பாவஞ் செறுக்கில் லாநம்மைச் செற்ற நங்கைக்
காய்ந்தபி ரான்கண்டி யூரெம் பிரானங்கம் ஆறினையும்
ஆய்ந்தபி ரானல்ல னோவடியேனை யாட்கொண்டவனே.

### 4ம் திருமுறை: திருநல்லூர்

நாட்கொண்ட தாமரைப் பூந்தடஞ் சூழ்ந்த நல்லூரகத்தே
கீட் கொண்ட கோவணங் காவென்று சொல்லிக் கிறிபடத்தான்
வாட் கொண்ட நோக்கி மனைவியொடும் அங்கொர் வாணிகனை
ஆட்கொண்ட வார்த்தை உரைக்கு மன்றோவிவ் வகலிடமே.

### 4ம் திருமுறை: திருச்சத்திமுற்றம்

நில்லாக் குரம்பை நிலையாக் கருதியிந் நீணிலத் தொன்
றல்லாக் குழிவீழ்ந் தயர்வுறு வேனைவந் தாண்டு கொண்டாய்
வில்லேர் புருவத் துமையாள் கணவா விடிற் கெடுவேன்
செல்வா திருச்சத்தி முற்றத் துறையுஞ் சிவக் கொழுந்தே.

### 4ம் திருமுறை: திருநாகைக்காரோணம்

பனைபுரைகைம்மத யானை யுரித்த பரஞ்சுடரே
கனைகடல் சூழ் தரு நாகைக்கா ரோணத் தெங்கண்ணுதலே
மனைதுறந்தல்லுணா வல்லமண் குண்டர் மயக்க நீக்கி
எனை நினைந்தாட் கொண்டாய்க் கென்னியான் செயுமிச்சைகளே.

## 4ம் திருமுறை: திருவாரூர்

என்பிருத்தி நரம்புதோல் புகப்பெய்திட் டென்னையோ ருருவம் ஆக்கி
இன்பிருத்தி முன்பிருந்த வினைதீர்த்திட்டென்னுள்ளங் கோயிலாக்கி
அன்பிருத்தி அடியேனைக் கூழாட் கொண்டருள் செய்த ஆரூரர்தம்
முன்பிருக்கும் விதியின்றி முயல்விட்டுக் காக்கைப்பின் போனவாறே.

பெருகுவித்தென் பாவத்தைப் பண்டெலாங் குண்டர்கள் தஞ்சொல்லே கேட்டு
உருகுவித் தென் உள்ளத்தின் உள்ளிருந்த கள்ளத்தைத் தள்ளிப் போக்கி
அருகுவித்துப் பிணிகாட்டி யாட்கொண்டு பிணிதீர்த்த ஆருரர்தம்
அருகிருக்கும் விதியின்றி அறமிருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே.

பூவையாய்த் தலைபறித்துப் பொறியற்ற சமணீசர் சொல்லே கேட்டுக்
காவிசேர் கண்மடவார்க் கண்டோடிக் கதவடைக்கும் கள்வனே தன்
ஆவியைப் போகாமே தவிர்த் தென்னை ஆட்கொண்ட ஆரூரரைப்
பாவியேன் அறியாதே பாழூரிற் பயிக்கம்புக் கெய்த்த வாறே.

## 5ம் திருமுறை: திருக்கடுவாய்க்கரைப் புத்தூர்

குண்டு பட்ட குற்றந்தவிர்த் தென்னையாட்
கொண்டு நற்றிறங்காட்டிய கூத்தனைக்
கண்டனைக் கடுவாய்க் கரைத் தென்புத்தூர்
அண்டனைக் கண்டரு வினையற் றெனே.

பந்தபாச மறுத் தெனையாட் கொண்ட
மைந்தனை மணவாளனை மாமலர்க்
கந்தநீர்க்கடு வாய்க் கரைத் தென் புத்தூர்
எந்தையீசனைக் கண்டினி தாயிற்றே.

## 5ம் திருமுறை: திருஅண்ணாமலை

தேடிச் சென்று திருந்தடி ஏத்துமின்
நாடி வந்தவர் நம்மையும் ஆட்கொள்வர்
ஆடிப் பாடி யண்ணாமலை கைதொழ
ஓடிப் போநம துள்ள வினைகளே.

## 6ம் திருமுறை: திருக்குடந்தைக்கீழ்க் கோட்டம்

ஏவியிடர்க் கடல் இடைம்பட் டிளைக்கின் றேனை
யிப்பிறவி அறுத்தேற வாங்கி ஆங்கே
கூவியம ருலகனைத்தும் உருவிப் போகக்
குறியிலறு குணத்தாண்டு கொண்டார் போலும்
தாவிமுதற் காவேரிநல் யமுனை கங்கை
சரசுவதி பொற்றாமரைப் புட்கரணி தெண்ணீர்க்
கோவியொடு குமரி வரு தீர்த்தஞ் சூழ்ந்த
குடந்தைக் கீழ்க்ங கோட்டத்தெங் கூத்தனாரே.

### 6ம் திருமுறை: திருவீழிமிழலை

தண்மையொடு வெம்மை தானாயினான் காண்
சக்கரம் புட்பாகற் கருள் செய்தான் காண்
கண்ணு மொரு மூன்றுடையகா பாலிகாண்
காமனுடல் வேவித்த கண்ணினான் காண்
எண்ணில் சமண்டீர்த் தென்னையாட் கொண்டான்கா
ணிருவர்க் கெரியாயருளினான் காண்
விண்ணவர்கள் போற்ற விருக்கின்றான் காண்
விண்ணிழி தண்வீ ழிமிழலையானே.

### 6ம் திருமுறை: தனித் திருத்தாண்டகம்

முடிகொண்டார் முளையிளவெண்டிங் களோடு மூசுமிள நாகமுடனாகக் கொண்டார்
அடி கொண்டார் சிலம்பலம் புகழலுமார்ப்ப வடங்காத முயலகனையடிக் கீழ்க்கொண்டார்
வடி கொண்டார்ந்திலங்கு மழுவலங்கைக் கொண்டார் மாலையிடப்பாகத்தே மருவக் கொண்டார்
துடி கொண்டார் கங்காளந் தோன்மேற் கொண்டார் சூலை தீர்த்தடியேனை யாட் கொண்டாரே.

சுந்தரமூர்த்தி நாயனார் அருளிச் செய்தது

### 7ம் திருமுறை தில்லை - சிதம்பரம்

மடித்தாடும் அடிமைக்கண் அன்றியே மனனே நீ வாழு நாளும்
தடுத்தாட்டித் தருமனார் தமர்செக்கில் இடும்போது தடுத்தாட் கொள்வான்
கடுத்தாடு கரதலத்தில் தமருகமும் எரியகலுங் கரிய பாம்பும்
பிடித்தாடிப் புலியூர்ச்சிற் றம்பலத்தெம் பெருமானைப் பெற்றாமன்றே.

பேராது காமத்திற் சென்றாற் போலன்றியே பிரியாதுள்கிச்
சீரார்ந்தவன் பராய்ச் சென்று முன்னடி வீழுந்திருவினாரை
ஓராது தருமனார் தமர் செக்கிலிடும் போது தடுத்தாட் கொள்வான்
பேராளர் புலியூர்ச் சிற்றம் பலத் தெம்பெருமானைப் பெற்றாமன்றே.

நரியார் தங்கள்ளத் தாற் பக்கான பரிசொழிந்து
பிரியாதவன் பராய்ச் சென்று முன்னடி வீழுஞ் சிந்தையாரைத்
தரியாது தருமனார் தமர் செக்கிலிடும் போது தடுத்தாட் கொள்வான்
பெரியோர்கள் புலியூர்ச் சிற்றம்பலத் தெம்பெருமானைப் பெற்றாமன்றே.

கருமானினுரி யாடைச் செஞ்சடை மேல் வெண்மதியக் கண்ணியானை
உருமன்ன கூற்றத்தை யுருண்டோடவு தைத்து கந்துவுலவாவின் பந்
தருவானைத் தருமனார் தமர் செக்கிலிடும் போது தடுத்தாட் கொள்வான்
பெருமானார் புலியூர்ச் சிற்றம்பலத்தெம் பெருமானைப் பெற்றாமன்றே.

பாரூரு மரவல் குலுமை நங்கையவள் பங்கன் பைங்க ணேற்றன்
ஊரூரன்றரு மனார் தமர் செக்கிலிடும்போது தடுத்தாட் கொள்வான்
ஆருரன்றம் பிரானாரூரன் மீகொங்கிலணி காஞ்சிவாய்ப்
பேரூரர் பெருமானைப் புலியூர்ச் சிற்றம் பலத்தே பெற்றாமன்றே.

### 7ம் திருமுறை: திருக்குருகாவூர் - வெள்ளடை

ஆவியைப் போகா மேதவிர்த் தென்னையாட் கொண்டாய்
வாவியிற் கயல் பாயக் குளத்திடை மடைதோறுங்
காவியுங் குவளையுங் கமலஞ் செங்கழு நீரும்
மேவிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

வெப்பொடு பிணியெல்லாந் தவிர்த் தெனையாட் கொண்டாய்
ஒப்புடை யொளி நீல மோங்கிய மலர்ப் பொய்கை
அப்படியழகா யவணி நடைமட வன்னம்
மெய்ப்படு குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

வரும்பழி வாராமே தவிர்த்தென்னை யாட் கொண்டாய்
சுரும்புடை மலர்க்கொன்றைச் சுண்ண வெண்ணீற்றானே
அரும்புடை மலர்ப் பொய்கை யல்லியு மல்லிகையும்
விரும்பிய குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

போந்தனை தரியாமே நமன்றமர் புகுந்தென்னை
நோந்தனை செய்தாலு நுன்னலதறி யேனான்
சாந்தனை வருமேலுந் தவிர்த் தென்னையாட் கொண்ட
வேந்தனே குருகாவூர் வெள்ளடை நீயன்றே.

### திருவாரூர்

ஒட்டியாட் கொண்டு போயொளித் திட்டவுச்சிப் போதனை நச்சர வார்த்த
பட்டியைப் பகலையிருடன்னைப் பாவிப்பார் மனத்தூறு மத்தேனைக்
கட்டியைக் கரும்பின்றெளி தன்னைக் காதலாற் கடற்சூர் தடிந்திட்ட
செட்டியப்பனைப் பட்டனைச் செல்வ வாரூரானை மறக்கலுமாமே.

### 7ம் திருமுறை: திருநாவலூர்

தன்மையினாலடி யேனைத்தாமாட் கொண்ட நாட்சபைமுன்
வன்மைகள் பேசிட வன்றொண்டனென் பதோர் வாழ்வு தந்தார்
புன்மைகள் பேசவும் பொன்னைத்தந் தென்னைப்போ கம்புணர்த்த
நன்மையினார்க்கிட மாவதுநந்திரு நாவலூரே

*மாணிக்கவாசகர் சுவாமிகள் அருளிச் செய்தது*

### 8ம் திருமுறை: திருவாசகம்

பேசில்தாம் ஈசனே எந்தாய் எந்தை பெருமானே என்(று) என்றே பேசிப்பேசிப்
பூசில்தாம் திருநீறே நிறையப்பூசிப் போற்றியெம் பெருமானேயென்று பின்றா
நேசத்தால் பிறப் பிறப்பைக் கடந்தார் தம்மை ஆண்டானே அவா வெள்ளக் கள்வனேனை
மாசற்ற மணிக்குன்றே எந்தாய் அந்தோ என்னை நீ ஆட் கொண்டவண்ணந்தானே.

தனியனேன் பெரும் பிறவிப் பௌவத்(து) எவ்வத் தடந்திரையால் எற்றுண்டு பற்(று) ஒன்றின்றிக்
கனியின் நேர் துவர்வாயார் என்னும் காலால் கலக்குண்டு காமவான் சுறவின் வாய்ப்பட்(டு)
இனியென்னே உய்யுமா றென்றென் றெண்ணி அஞ்செழுத்தின் புணை பிடித்துக் கிடக்கின்றேனை
முனைவனே முதலந்த மில்லா மல்லல் கரைகாட்டி ஆட் கொண்டாய் மூர்க்க னேற்கே.

கேட்டாரும் அறியாதான் கேடொன் றில்லான் கிளையிலான் கேளாதே எல்லாம் கேட்டான்
நாட்டார்கள் விழித்திருப்ப ஞாலத்துள்ளே நாயினுக்குத் தவிகிட்டு நாயினேற்கே

காட்டாதன வெல்லாம் காட்டிப் பின்னும் கேளாதன வெல்லாம் கேட்பித் தென்னை
மீட்டேயும் பிறவாமல் காத்தாட் கொண்டான் எம்பெருமான் செய்திட்ட விச்சை தானே.

மேலை வாவை ரும்அறி யாததோர்
கோல மேயெனை ஆட் கொண்ட கூத்தனே
ஞால மேவிசும் பேஇவை வந்துபோம்
காலமே உனை என்று சொல் காண்பதே.

தீர்ந்த அன்பாய அன்பர்க்கு அவரினும் அன்பபோற்றி
பேர்த்துமென் பொய்ம்மை யாட்கொண்டருளிடும் பெருமை போற்றி
வார்ந்த நஞ் சயின்று வானோர்க்கு அமுதம்ஈ வள்ளல் போற்றி
ஆர்ந்தநின் பாதம் நாயேற்கு அருளிட வேண்டும் போற்றி.

கடையவ னேனைக் கருணையினால் கலந்தாண்டு கொண்ட
விடையவ னேவிட் டிடுதி கண்டாய் விறல் வேங்கையின் தோல்
உடையவனே மன்னும் உத்தரகோசமங் கைக்கரசே
சடையவனே தளர்ந்தேன் எம்பிரான் என்னைத் தாங்கிக் கொள்ளே.

செங்கண் நெடுமாலும் சென்றிடந்தும் காண்பரிய
பொங்கு மலர்ப்பாதம் பூதலத்தே போந்தருளி
எங்கள் பிறப்பறுத்திட்டு எந்தரமும் ஆட்கொண்டு
தெங்கு திரள் சோலைத் தென்னன் பெருந்துறையான்
அங்கணன் அந்தணனாய் அறைகூவி வீடருளும்
அங்கருணை வார்கழலே பாடுதங்காண் அம்மானாய்.

இந்திரனும் மாலயனும் ஏனோரும் வானோரும்
அந்தரமே நிற்கச் சிவன் அவனி வந்தருளி
எந்தரமும் ஆட்கொண்டு தோள் கொண்ட நீற்றனாய்ச்
சிந்தனையை வந்துருக்கும் சீரார் பெருந்துறையான்
பந்தம் பரியப் பரிமேற் கொண்டான் தந்த
அந்தமிலா ஆனந்தம் பாடுதுங்காண் அம்மானாய்.

விண்ணாளும் தேவர்க்கு மேலாய வேதியனை
மண்ணாளும் மன்னவர்க்கு மாண்பாகி நின்றானைத்
தண்ணார் தமிழளிக்கும் தண்பாண்டி நாட்டானைப்
பெண்ணாளும் பாகனைப் பேணு பெருந்துறையில்
கண்ணார் கழல்காட்டி நாயேனை ஆட்கொண்ட
அண்ணாமலையானைப் பாடுதுங்காண் அம்மானாய்.

ஓயாதே உள்குவார் உள்ளிருக்கும் உள்ளானைச்
சேயானைச் சேவகனைத் தென்னன் பெருந்துறையின்
மேயானை வேதியனை மாதிருக்கும் பாதியனை
நாயான நந்தம்மை ஆட்கொண்ட நாயகனைத்
தாயானைத் தத்துவனைத் தானே உலகேழும்
ஆயானை ஆள்வானைப் பாடுதுங்கான் அம்மானாய்.

கண்ணப்பன் ஒப்பதோர் அன்பின்மை கண்டபின்
என்னப்பன் என்னொப்பில் என்னையும் ஆட் கொண்டருளி

வண்ணப் பணித்தென்னை வாவென்ற வான்கருணைச்
சுண்ணப் பொன் நீற்றற்கே சென்றுதாய் கோத்தும்பீ.

நோயுற்று மூத்துநான் நுந்துகன்றாய் இங்கிருந்து
நாயுற்ற செல்வம் நயந்தறியா வண்ணமெல்லாம்
தாயுற்று வந்தென்னை ஆண்டு கொண்ட தன் கருணைத்
தேயுற்ற செல்வற்கே சென்றூதாய் கோத்தும்பீ.

கருவாய் உலகினுக் கப்புறமாய் இப்புறத்தே
மருவார் மலர்க்குழல் மாதினோடும் வந்தருளி
அருவாய் மறைபயில் அந்தணனாய் ஆண்டு கொண்ட
திருவான தேவர்க்கே சென்றதூதாய் கோத்தம்பீ.

மாதாடு பாகத்தன் உத்தர கோசமங்கைத்
தாதாடு கொன்றைச் சடையான் அடியாருள்
கோதாட்டி நாயேனை ஆட்கொண்டென் தொல்பிறவித்
தீதோடா வண்ணம் திகழப் பிறப்பறுப்பான்
காதோடு குண்டலங்கள் பாடிக் கசிந்தன் பால்
போதாடு பூண் முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

உன்னற் கரியதிரு உத்தர கோசமங்கை
மன்னிப் பொலிந்திருந்த மாமறையோன் தன்புகழே
பன்னிப் பணிந்திறைஞ்சப் பாவங்கள் பற்றறுப்பான்
அன்னத்தின் மேலேறி ஆடும் அணி மயில்போல்
என்னத்தன் என்னையும் ஆட்கொண்டான் எழில்பாடிப்
பொன்னொத்த பூண்முலையீர் பொன்னூசல் ஆடாமோ.

கொந்தண வும்பொழிற் சோலைக் கூங்குயிலேயிது கேள்நீ
அந்தண னாகிவந் திங்கே அழகிய சேவடி காட்டி
எந்தம ராம் இவனென்றிங் கென்னையும் ஆட்கொண்டருளும்
செந்தழல் போல்திரு மேனித் தேவர் பிரான் வரக் கூவாய்.

பிட்டு நேர்பட மண்சு மந்த பெருந்து றைப்பெரும் பித்தனே
சட்ட நேர்பட வந்திலாத சழக்கனேன் உனைச் சார்ந்திலேன்
சிட்டனேசிவ லோக னேசிறு நாயினுங் கடை யாயவெம்
கட்டனேனையும் ஆட்கொள் வான் வந்து காட்டி னாய் கழுக்குன்றிலே

வானநாடரும் அறியொணாதநீ மறையில் ஈறும்முன் தொடரொணாதநீ
ஏனை நாடரும் தெரியொணாத நீ என்னையின்னிதாய் ஆண்டு கொண்டவா
ஊனை நாடகம் ஆடு வித்தவா உருகி நான் உனைப் பருக வைத்தவா
ஞான நாடகம் ஆடு வித்தவா நைய வையகத்துடைய விச்சையே.

பொய்யாய செல்வத்தே புக்கழுந்தி நாள் தோறும்
மெய்யாக் கருதிக் கிடந்தேனை ஆட் கொண்ட
ஐயா என் ஆருயிரே அம்பலவா என்றவன் றன்
செய்யார் மலரடிக்கே சென்றுதாய் கோத்தும்பீ.

திருமாலும் பன்றியாய்ச் சென்றுணராத் திருவடியை
உருநாம் அறியவோர் அந்தணனாய் ஆண்டு கொண்டான்
ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமில்லாற் காயிரம்
திருநாமம் பாடிநாம் தெள்ளேணம் கொட்டாமோ.

திகழ்த் திகழும் அடியும் முடியும் காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்தும் காண மாட்டா அம்மான் இம்மா நிலம் முழுதும்
நிகழப் பணிகொண்டென்னை ஆட்கொண்(டு) ஆவா என்ற நீர்மை எல்லாம்
புகழப் பெறுவதென்று சொல்லோஎன் பொல்லா மணியைப் புணர்ந்தே

## 9ம் திருமுறை: திருவிசைப்பா - திருப்பல்லாண்டு

எம்பந்த வல்வினைநோய் தீர்த்திட் டெமையாளும்
சம்பந்தன் காழியர்கோன் றன்னையும் ஆட் கொண்டருளி
அம்புந்து கண்ணாளுந்தானும் அணிதில்லைச்
செம்பொன்செய் அம்பலமே சேர்ந்திருக்கை யாயிற்றே.

எந்தைஎந் தாய்சுற்றம் முற்றும் எமக்கமு
தாமெம் பிரான்என் றென்று
சிந்தை செய்யும் சிவன் சீரடியார்
அடிநாய் செப்புரை
அந்தமில் ஆனந்தச் சேந்தன் எனைப்புகுந்
தாண்டுகொண் டாருயிர்மேற்
பந்தம் பிரியப் பரிந்தவ னேஎன்று
பல்லாண்டு கூறுதுமே.

## 10ம் திருமுறை: திருமூலநாயனார் அருளிய திருமந்திரம்

கூடிநின் றானேடு காலத்துத் தேவர்கள்
வீடநின் றான்விகிர் தாவென்னும் நாமத்தைத்
தேடநின் றான்திக ழுஞ்சுடர் மூன்றொளி
ஆடநின் றானென்னை ஆட்கொண்ட வாறே.

*''அருண்மொழித்தேரவர் எனும் சேக்கிழார் சுவாமிகள் அருளிச் செய்தது''*

## 12ம் திருமுறை : பெரியபுராணம்

அந்தணர்கூற ''இன்னும் ஆள்ஓலை இவனே காண்பான்
தந்தை தன் தந்தை தான்வே றெழுதுகைச் சாத்துண் டாகில்
இந்தஆ வனத்தி னோடும் எழுத்துநீர் ஒப்பு நோக்கி
வந்தது மொழிமின்'' என்றான் வலியஆட் கொள்ளும் வள்ளல்.

என்றெழும் ஓசை கேளா ஈன்றஆன் கனைப்புக்கேட்ட
கன்று போல் கதறி நம்பி கரசர ணாதி அங்கம்
துன்றிய புளகம் ஆகத் தொழுகை தலைமேல் ஆக
''மன்றுளீர்! செயலோ வந்து வலியஆட் கொண்ட'' தென்றார்.

''அன்று வெண்ணெய் நல்லூரில் அரியும் அயனும் தொடர்வரிய
வென்றி மழவெள் விடை உயர்த்தார் வேத முதல்வ ராய்வந்து
நின்று சபைமுன் வழக்குரைத்து நேரே தொடர்ந்தாட் கொண்டவர்தாம்
இன்றிங் கெய்தப் பெற்றோம்''என் றெயில் சூழ் காஞ்சி நகர்வாழ்வார்.

அன்றிரவே ஆதிபுரி ஒற்றிகொண்டார் ஆட்கொண்ட
பொன்திகழ்பூண் வன்தொண்டர் புரிந்தவினை முடித்தருள
நின்றபுகழ்த் திரு ஒற்றி யூர்நிலவு தொண்டர்க்கு
மன்றல்வினை செய்வதற்கு மனங்கொள்ள உணர்த்துவார்.

*திருச்சிற்றம்பலம்*



# தவப்பய னாலே கண்ட இடம்

கவிஞர் **சிவல்புரி சிங்காரம்** (கண்ணதாச தாசன்)
தினத்தந்தி ஜோதிடர்,
செட்டிநாடு கிரிவலக்குழுத் தலைவர், கீழச்சிவல்பட்டி

*(இரணியூர் அருள்மிகு ஆட்கொண்ட நாதர்-சிவபுரம் தேவியைப் பற்றி எழுதிய கீழ்கண்ட பாடலை 5.7.90 அன்று கும்பாபிஷேக விழாவில் இளைய இசைமணி டாக்டர் சீர்காழி சிவசிதம்பரம் அவர்கள் மேடையில் பாடினார்கள்)*



சிவபுரம் தேவியை வணங்கிய மாந்தர்க்குச்
சிறப்புகள் எல்லாம் வந்தடையும்! - என்றும்
கவலைகள் போக்கும் ஆட்கொண்ட நாதரைக்
கைப்பிடித் தவளால் நலம் சேரும்!

இரணியூர் அவள் வாழுமிடம்! - நல்ல
ஈசனின் துணையாய் ஆனயிடம்!
தரணியிலே அருள் கொடுக்குமிடம்! - நாம்
தவப்பய னாலே கண்டயிடம்!

மாலைகள் இல்லாக் கன்னியர்கள் - அந்த
மரகத வல்லியைத் தினம் துதித்தால்
வாழும் வழியினைக் காட்டிடுவாள்! - நல்ல
வாழ்க்கைத் துணைவனைச் சேர்த்திடுவாள்! (சிவபுரம்)

வேலைகள் இல்லாக் காளையரும் - அந்த
வேல்விழி பாதம் பணிந்து விட்டால்
ஞாலம் புகழும் வழியமைப்பாள்! - அவள்
நன்மைகள் ஆயிரம் நமக்களிப்பாள்!

வெற்றிகள் குவிய வேண்டுமெனில் - நீங்கள்
விரைவினில் அவளைப் பாருங்கள்!
கொற்றவன் கூட உனைமதிப்பான்! - அந்தக்
கோதையின் முன்கரம் சேருங்கள்!

செல்வங்கள் குவிய வேண்டுமெனில் - அந்த
சிவபுரம் தேவியை நாடுங்கள்!
பல்லாண் டுலகில் வாழ்ந்திடவே - அந்தப்
பாவையின் புகழைப் பாடுங்கள்! (சிவபுரம்)

சுபம்



# இரணிக் கோயிலின் தனிச் சிறப்புகள்

டாக்டர் **தேனப்பன்**
முன்னாள் தமிழ் விரிவுரையாளர்,
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி,
தேவகோட்டை

**முன்னுரை:**

ஒன்பது நகரக் கோயில்களுள் மிகச் சிறப்பான சிற்பங்கள் அமையப் பெற்ற கோயில்கள் மூன்றாகும். அவையாவன: இரணிக்கோயில், இலுப்பைக்குடிக்கோயில், வயிரவன் கோயில்.

இரணிக்கோயிலில் உள்ள சிற்பங்கள் தற்கால நகரத்தார் வளர்த்த சிற்பப் பணிக்கு மிக உயர்ந்த எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

இக்கோயிலில் காணப்படும் தனிச் சிறப்புகளைக் காண்போம்.

**கோயிலின் தோற்றம்:**

நாக நாட்டில் வாழ்ந்த நகரத்தார்கள் காஞ்சிபுரம். காவிரிப்பூம்பட்டினம் ஆகிய ஊர்களை விடுத்துப் பாண்டிய நாட்டில் உள்ள இளையாற்றங்குடியில் தங்கி வசித்து வந்தார்கள். அவர்களில் இரு வழியாருக்கு கி.பி. 712ஆம் ஆண்டு மாற்றூர் கோயிலையும், வயிரவன்பட்டிக் கோயிலையும் பாண்டிய மன்னன் வழங்கினான் எனப் பூங்கொன்றை வேலங்குடிக் கல்வெட்டு கூறுகிறது. அதே கல்வெட்டு கி.பி. 714ஆம் ஆண்டில் இரணியூர், பிள்ளையார்பட்டி, நேமம், இலுப்பைக்குடி ஆகிய நான்கு கோயில்களை நகரத்தார்களுக்குப் பாண்டிய மன்னன் அளித்ததாகவும் கூறுகிறது. அவ்வாறு இரணியூரைக் காருண்ய பாண்டியன் அளித்தான் என்றும் அவ்வூருக்குச் சொர்ணபுரம் என்ற சிறப்புப் பெயர் உண்டென்றும் அக்கல்வெட்டு கூறுகிறது.

பிள்ளையார்பட்டிக் கல்வெட்டின் மூலமாக இரணியூரிலும், பிள்ளையார்பட்டியிலும் திருவேட்பூருடையார் பிரிவைச் சேர்ந்தவர்கள் கி.பி. 1278ஆம் ஆண்டில் குடியேறினர் என்பதை எனது டாக்டர் பட்ட ஆய்வேட்டில் நான் நிறுவியுள்ளேன். இதனால் பதின்மூன்றாம் நூற்றாண்டில்தான் இரணியூரில் நகரத்தார்கள் குடியேறிக் கோயில் நிருவாகப் பொறுப்புகளையும் ஏற்றுக் கொண்டுள்ளனர் எனத் தெளிவாகிறது.

**தனிச்சிறப்புகள்:**

இரணிக் கோயிலில் காணப்படும் தனிச் சிறப்புகள் ஆறாகும். அவையாவன:

1. கருவறை அமைப்பு
2. தூண் சிற்பங்கள்
3. கோட்டச் சிற்பங்கள்

4. காலத்திற்கேற்ற புதிய சிற்பங்கள்
5. நிலவறை, கற்சாளரம், கற்குழாய் அமைத்தல்
6. ஐம்பொன் சிற்பங்கள்.

**கருவறை அமைப்பு:**

கருவறையை கருங்கல்லினால் அமைக்கும் பழக்கம் பழமையானதே. இங்கு பாலிஷ் செய்யப்பட்ட சலவைக் கற்களால் கருவறை வெளிச்சுவரினை அமைத்துள்ளனர். இச்சலவைக் கற்களினால் அமைந்த தேவகோட்டங்கள் எண்ணெய் அபிடேகங்களால் அழுக்குறாதிருக்க நர்த்தன விநாயகர், தட்சிணாமூர்த்தி, அடிமுடிகாட்டாநாதர், பிரம்மா, துர்க்கை ஆகியோர்களது கற்சிற்பங்களுக்குப் பதிலாக ஐம்பொன் சிற்பங்களையே நிறுவியுள்ளனர்.

**தூண்சிற்பங்கள்:**

அழகு மிக்க தூண் சிற்பங்கள் நிறைந்த கோயில் என இக்கோயிலைப் பாராட்டலாம். இதனை ஒரு தெய்வீகச் சுற்றுலா மையமாக ஆக்குகின்ற அளவிற்கு அற்புதமான சிற்பங்களைப் பெற்றுள்ளது.

இங்கு வழிபாட்டில் உள்ள கற்சிற்பங்களின் மொத்த எண்ணிக்கை 127. தூண் சிற்பங்கள் 71. இவற்றுள் மிக நுட்பமாகச் செதுக்கப்பெற்ற மிகச் சிறந்த சிற்பங்களாகக் கால சம்காரமூர்த்தி சிற்பம், முப்புரம் எரித்தவர் சிற்பம், உமையொருபாகன் சிற்பம், இரணிய சம்காரச் சிற்பம் ஆகியன அமைந்துள்ளன. காலசம்காரமூர்த்தி சிற்பத்தில் எமன் வீசும் பாசக்கயிற்றில் உள்ள பிரிகளை இன்றும் நாம் எண்ணிப் பார்க்கலாம். முப்புரம் எரிக்க வந்த மூர்த்தியின் கால் நரம்புகளைத் தொட்டு அவரது 'பிரஷ்ஷரைக்' கூடக் கணக்கிடலாம். உமையொரு பாகன் சிற்பத்தை நாட்கணக்கில் பார்த்துக் கொண்டேயிருக்கலாம். அவ்வளவு அழகு மிக்க சிற்பம் அது!

**கோட்டச் சிற்பங்கள்:**

வேறு எந்தக் கோயிலிலும் காண்பதற்கு அரிதான எட்டுதிக்குகளுக்குரிய கடவுள்களின் சிற்பங்கள் இராசகோபுரத் தளத்திலுள்ள கோட்டங்களில் காணப்படுகின்றன. வாஸ்து சாஸ்திரத்தில் சொல்லப்பட்டுள்ள சிற்ப இலக்கணப்படி இந்திரன், அக்கினி, எமன், நிருதி, வருணன், வாயு, குபேரன், ஈசானன் ஆகியோரது அரிய சிற்பங்கள் அழகாக அமைந்துள்ளன.

**காலத்திற்கேற்ற புதிய சிற்பங்கள்:**

சிற்ப நூல்களில் காணப்படாத சில சிற்பங்களும் நகரக்கோயில்களில் காணப்படுகின்றன. அவற்றுள் மிக இன்றியமையாது குறிப்பிடத்தக்கவை. பாரதமாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களாகும்.

இரணியூர் கோயில் சுதந்திரப் போராட்ட காலமான 1944இல் கற்றளியாகக் கட்டப் பெற்றது. எனவே, சுதந்திர தாகமுடைய நகரத்தார்கள் பள்ளியறையின் வெளியே உள்ள தூண்களின் இணைப்புக் கல்லில் பாரத மாதா, தேசக்கொடி, இராட்டை, காந்தி சிற்பங்களை வடித்துள்ளனர்.

அடிமை இருளில் தூங்கிக் கொண்டிருக்கும் நாடு, விடுதலை பெற்று விழிப்புற வேண்டும் என்ற கருத்தில் பள்ளியறையின் வெளியே இச்சிற்பங்களை அமைத்தனர் போலும்!

**நிலவறை, கற்சாளரம், கற்குழாய் அமைத்தல்:**

பிற கோயில்களில் காணப்படாத நிலவறை (Undergroud Room) இக்கோயிலில் அமைந்துள்ளது. ஓரடி இடைவெளிவிட்டு இரண்டு கற்சுவர்களால் இந்நிலவறை கட்டப்பட்டுள்ளது. இடையே உள்ள ஓரடி இடைவெளியில் நீர் நிரப்பப் பெற்றதும் இந்நிலவறை குளுகுளுப்பாக அமையும். விலையுயர்ந்த பொருட்களைப் பாதுகாக்க இந்நிலவறை அமைப்பு உதவுகின்றது. மேலும் கருங்கல்லினைக் குடைந்து செய்யப் பெற்ற கற்சாளரமும் கற்குழாய்களும் இக்கோயிலில் மட்டுமே காணத்தக்கன.

**ஐம்பொன் சிற்பங்கள்**

மற்ற கோயில்களில் காண முடியாத சில ஐம்பொன் சிற்பங்களும் இங்கு காணப்படுகின்றன.

மிக இன்றியமையாத ஒன்பது ஐம்பொன் சிற்பங்கள் மட்டுமே பிற கோயில்களில் உள்ளன. இங்கு மட்டும் 27 ஐம்பொன் சிற்பங்கள் உள்ளன.

இங்குள்ள பிட்சாடனர் சிற்பம், முத்துக்கந்தர், வீரபாகு, பசுபதிலிங்கம், பதுமலிங்கம் ஆகிய ஐம்பொன் சிற்பங்கள் தனி அழகு மிக்கன. பிட்சாடனரின் ஜடாபாரத் தலைக்கோலம், அவர் கபாலம் ஏந்திப் பிச்சை கேட்கும் தோற்றம், அருகேயுள்ள மானுக்குப் புல்லைக் கொடுக்கும் காட்சி ஆகியன பசியை மறக்கச் செய்யும் அழகு மிக்கன. பிட்சாடனருக்குப் பக்கத்தில் அன்னக் கூடையினைத் தலையில் சுமந்தபடி ஒரு பூதம் நின்று கொண்டிருக்கிறது. அந்த அன்னக் கூடை திறந்து மூடும் அமைப்பில் அழகாக அமைந்துள்ளது கண்டு ரசித்து மகிழத்தக்கது.

**முடிவுரை:**

இரணியூர் கோயிலின் முன் பகுதியான அஷ்டலெட்சுமி மண்டபம் ஒன்றை மட்டும் பார்த்தாலே போதும். நகரத்தார் வளர்த்த சிற்பக் கலைக்கு அதுவே மிகப் பெரிய அழகான சான்றாக அமையும்.

இவ்வாறு பல்வேறு தனிச் சிறப்புகளைப் பெற்ற இக்கோயிலைத் தெய்வீகச் சுற்றுலா மையமாக மாற்றி இக்கோயிலின் பெயரையும் புகழையும் பெருக்குவது இக்கோயில் நகரத்தார்களின் பெரும் பணியாகும்.





# இரணியூர் அருள்மிகு ஆட்கொண்ட நாதர் பதிகம்

இயற்றியவர் கவிஞர் **சிவல்புரி சிங்காரம்**
(கண்ணதாச தாசன்)
கீழச்சிவல்பட்டி

ஆட்கொண்ட நாதரெனப் பேர்பெற்ற நீயாவும்
ஆட்கொள்ள வேண்டும் ஐயா!
அகிலத்தில் உனையெண்ணும் பக்தர்களின் தலையெழுத்தை
அழிக்கவும் வேண்டும் ஐயா!
பூக்கொண்டு அர்ச்சித்துப் பூங்கவிதை பாடுபவன்
புகழ்காண வேண்டும் ஐயா!
பொன்னோடும் பொருளோடும் புதுவாழ்வு நான்கண்டு
புவியாள வேண்டும் ஐயா!
தீக்கொண்ட நெற்றிக்கண் திறந்த நீ, இப்பொழுது
திருவருள் தருக ஐயா!
தேவியவள் சிவபுரத் தாளோடு என்னில்லம்
தேடிவந் தருள்க ஐயா!
பாக்கொண்டு உனையெண்ணும் பாவலனின் மனக்குமுறல்
பார்த்தும்நீ நிற்க லாமா?
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (1)

ஆபத்து வரும்போது அரவணைத் திருக்கவுன்
அழகான கரங்கள் உண்டு!
அஞ்சிடும் பகைவந்த போதிலும் அதைவெல்ல
ஆயுதம் கையில் உண்டு!
தீபத்தை ஏற்றியுன் முகத்தினைத் தெரிசிக்கத்
தீங்குகள் அகல்வ துண்டு!
தெய்வமே என்றுன்னை அழைத்ததும் பறந்துவரச்
சீர்நந்தி கையி லுண்டு!
கோபத்தை விட்டுநீ அறுபத்து மூவர்களின்
குடும்பத்தில் கலந்த துண்டு!
கும்பிட்ட பக்தர்க்குச் செல்வத்தைக் கொடுக்கநீ
கோவிலில் வாழ்வ துண்டு!
பாவத்தைத் தீர்க்கின்ற ஆட்கொண்ட நாதராய்
பாரினில் அவத ரித்தே
பக்தர்க்கு அருள் காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (2)

எதுசொன்ன போதிலும் அதைகேட்டு ரட்சிக்க
இருசெவிகள் உனக்கு உண்டு!
எனதுகவி கேட்டும்நீ இரங்கா திருந்திடில்
ஏதுநான் செய்வ தின்று?
கதியென்று வந்துனைக் கைகூப்பித் தொழும்போது
காப்பாற்ற மார்க்க முண்டு!
கனிவைத்து அர்ச்சித்த பணியாலே என்வாழ்வில்
கவலையும் மறைந்த துண்டு!
இதுநல்ல கலிகாலம் ஆனதால் அவதாரம்
எடுக்கநீ வருவ துண்டோ?
இல்லையேல் மூடர்கள் உனைநம்ப மாட்டார்கள்
என்னநான் சொல்வ தின்று?
பதிகேட்ட மங்கைக்குப் புதுவாழ்வு தருமுன்னைப்
பாடாதார் யாரு முண்டோ?
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (3)

முட்டையை இதுவரையில் பாடும்நான் அதுயிட்ட
பெட்டையைப் பாடு கின்றேன்!
முருகனைக் கந்தனை முக்காலம் எண்ணும்நான்
மூலத்தை எண்ணு கின்றேன்!
கட்டளை எதுசொன்ன போதிலும் அதையேற்றுக்
காப்பாற்ற வேண்டு கின்றேன்
காதலால் இருபெண்ணை முடிமீதும் மடிமீதும்
கவர்ந்துவைத் துள்ள தேவா!
வட்டாரம் அத்தனையும் என்புகழ் பாடுகிற
வல்லமையை அருளு வாயே!
வருங்காலம் செல்வங்கள் வரும்காலம் ஆகவே
வரங்களும் நல்கு வாயே!
பட்டாபி ஷேகங்கள் பாலாபி ஷேகங்கள்
பார்க்கும்ஆட் கொண்ட நாதா!
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (4)

காக்கின்ற தெய்வமாம் திருமாலும் அவதாரம்
காண்பதற் காக வந்து
கவலைகளை அளித்ததோர் இரணியனை சம்ஹாரம்
கண்டதோர் ஊரு மாக்கி,
யார்க்குமே, அடங்காத கோபத்தைக் கொண்டிங்கு
எழில்நீல மேக மாகி
எழுந்தருளி யிருந்தோர் பெருமானின் சினம் தணித்து
ஈசன்ஆட் கொண்ட தாலே
பேர்பெற்ற இரணியூர் நரசிம்ம அவதாரப்
பெருந்தலம் ஆகி நிற்க,

பிழையிலா சிவவிஷ்ணு இருவரும் ஒன்றாகிப்
பிறர்துயர் தீர்க்க வந்தார்!
பாரினில் ஆட்கொண்ட நாதராய் வந்தவுனைப்
பணிகின்றேன் குறைகள் தீர்ப்பாய்!
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (5)

கற்பனை வளம்தந்த காவலா உனைப்பாடிக்
கற்பூரம் ஏற்றி வைத்தேன்!
கருத்தான உன்புகழை விருத்தத்தில் பாடிநான்
காதாரக் கேட்டு மகிழ்ந்தேன்!
சொற்பநாள் வாழ்ந்தாலும் சுகத்தோடு வாழ என்
துயிரினைப் போக்கு என்றேன்!
தூங்காத மனதிற்குள் ஏங்காமல் நான் வாழத்
தூயவுன் கால் பிடித்தேன்!
அற்புதச் செயல்கள்பல செய்தாயாம் சேக்கிழார்
அளித்ததோர் கவியில் கேட்டேன்!
அதிலேதும் ஒன்றினை என் வாழ்வில் நீ செய்ய
அன்றாடம் ஏங்கு கின்றேன்!
பற்பலரும் உனைத்தொழுது பணக்கவலை தீர்ந்ததெனப்
பகன்றமொழி உண்மை யிலையோ?
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (6)

பதிகங்கள் பலசொல்லி உனைத்தொழுத காரணம்
பரமனே சொல்லு கின்றேன்!
பாதிநாள் போனதினி மீதிநா ளேனும்நான்
பட்டதுயர் தீரு மென்றேன்!
அதிகமெனச் சொல்லாமல் நான்கேட்ட வரம் மூன்றும்
ஆதிசிவன் தருக என்பேன்!
அதிலொன்று என் ஆயுள்! அடுத்தது பொன்பொருள்!
அவற்றினைக் கூட்டு என்பேன்!
புதிதல்ல வரம்மூன்று; புகழெனை வந்தடையப்
புலவனாய் மாற்று என்பேன்!
பூகம்ப வாழ்க்கையினி மாறட்டும்! நோய்நொடியைப்
போக்கி நீ அருள்க என்றேன்!
பதிக்கின்ற வைரம்போல் துதிப்பவனைக் காக்குமுனைப்
பாடாதார் யாரு முண்டோ?
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (7)

புல்லாகிப் பூடாகிப் புழுவாகி யிருந்தாலோ
புலம்பியே தீர வேண்டும்!
பொன்னாக அணிகின்ற மனிதனாய்ப் பிறந்தநான்
புதுயுகம் காண வேண்டும்

கல்லாகி நிற்கின்ற தெய்வம்நீ இல்லையெனக்
காட்டிட விரைந்து வருக!
கண்ணெதிரில் நின்றுகவி பாடுமென் குறைகளைக்
கனிவுடன் போக்கி அருள்க!
முள்ளாக மலராக மோதிடும் வாழ்க்கையில்
முற்றும் நான் உன்னை நம்பி
முறையீடு செய்கிறேன் சிவபுரம் தேவியின்
மோகத்தைத் தீர்த்த நேசா!
பல்லக்கு பரிவாரம் பார்த்திடும் ராஜாங்கப்
பவனியை எனக்கு அருள்க!
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர்வாழும்
பரம்பொருளே காக்க வருக! (8)

மலைபோன்ற செல்வத்தைக் குவித்துவைத் திருந்துநான்
மற்றவர்க்கு உதவ வேண்டும்!
மழலையின் குணத்தோடு முதுமையிலும் இளமையாய்
மகிழ்வோடு வாழ வேண்டும்!
கலைதவழும் மேடையெலாம் பூமாலை அணிந்துநான்
கௌரவம் ஏற்க வேண்டும்!
கவிபாடும் எனதுகுரல் கேட்டவுடன் தெய்வமெலாம்
காட்சிதந் தருள வேண்டும்!
நிலையான புகழ்தந்து உற்றாரும் மற்றாரும்
நேசிக்கும் உறவு வேண்டும்!
நீ எனது துணையாகி, நான் செல்லும் பாதைக்கு
நேர்வழிகள் காட்ட வேண்டும்!
பலநாளாய் மனதிற்குள் இருக்கின்ற ஆசையெலாம்
படிப்படியாய் நடக்க வேண்டும்!
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர் வாழும்
பரம் பொருளே காக்க வருக! (9)

எவருக்கு எதுவேண்டும் என்பதை அறிந்த நீ
ஏறிட்டுப் பார்க்க வேண்டும்!
இருகரம் கூப்பியுன் சந்நிதியில் நிற்கிறேன்
எதுகேட்டும் கொடுக்க வேண்டும்!
சிவல்புரியில் வாழ்கின்ற சிங்காரம் தந்ததோர்
செந்தமிழ்க் கவிதை யாலே
சீர்கொண்ட பதிகங்கள் கேட்டுநீ வழிகாட்டு!
சிவபுரம் தேவி நேசா!
கவலைக்கு மருந்தாகும் கடவுளே உனை நம்பிக்
காரியம் தொடங்கு கின்றேன்!
கைநிறையப் பொருள் தந்து காப்பாற்ற வேண்டியது
காசினியில் உன் பொறுப்பு!
மகன்கேட்டும் பெற்றோர்கள் மறுப்பதுவும் நியாயமா?
மனமிரங்கி வந்து அருள்க!

பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர் வாழும்
பரம் பொருளே காக்க வருக! (10)

மாலைகள் இல்லாத மங்கையர்கள் உனையெண்ணின்
மணவாளன் கூட்டி வைப்பாய்!
மழலைகள் இல்லார்க்கும் மைந்தனைக் கொடுத்தே
மகராசன் ஆகி நிற்பாய்!
வேலைகள் கிடைக்காத காளையரும் வணங்கினால்
வேலைவரச் செய்து வைப்பாய்!
விளையாடும் ஏழரைச் சனியதும் வாழ்வினில்
விலகிடும் வழிய மைப்பாய்!
கோழையும் வீரனாய் மாறவழி வகுத்திடக்
கோவிலில் வீற்றி ருந்தாய்!
கொண்டதோர் தொழிலினில் லாபங்கள் குவித்திட
கும்பிட்டேன் ஆதி மூலா!
பாலமிடும் வாழ்க்கையில் வருகின்ற எதிர்ப்புகளை
பக்தியால் போக்கும் ஈசா!
பக்தர்க்கு அருள்காட்ட இரணியூர் நகர் வாழும்
பரம் பொருளே காக்க வருக! (11)

சுபம்





# நகரத்தார்களது ஒன்பது கோயில்களும், பிரிவுகளும்

**1. இளையாற்றங்குடி கோயில்** (கலியுகம் 3808)

சுவாமி பெயர் : கைலாசநாதர் அம்மை பெயர்: நித்தியகல்யாணி
பிரிவுகள்: கல்வாச நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில்.

1. ஒக்கூருடையார்
2. அரும்பாற்கிளையரான பட்டண சாமியார்
3. பெருமருதுடையார்
4. கழனிவாசலுடையார்
5. கிங்கிணிக்கூருடையார்
6. பேரசெந்துருடையார்
7. சிறுசேத்துடையார்

**2. மாற்றூர் கோயில்** (கலியுகம் 3813)

சுவாமி பெயர்: ஐந்நூற்றீசர் அம்மை பெயர்: பெரியநாயகி
கேரள சிங்கள வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் மாற்றூரான வீரபாண்டியபுரமென்னும் மாற்றூர் கோயில்.

1. உறையூருடையார்
2. அரும்பாக்கூருடையார்
3. மணலூருடையார்
4. மண்ணூருடையார்
5. கண்ணூரடையார்
6. கருப்பூருடையார்
7. குளத்தூருடையார்

**3. வைரவன் கோயில்** (கலியுகம் 3813)

சுவாமி பெயர் : வளரொளிநாதர் அம்மை பெயர்: வடிவுடையம்மை
கேரள சிங்கள வள நாடாகிய ஏழகப் பெருந்திருவான வீரபாண்டியபுரத்தில்

1. சிறுகுளத்துடையார் - உட்பிரிவு
2. மருதேந்திரபுரமுடையார்

**4. இரணியூர் கோயில்** (கலியுகம் 3815)

சுவாமி பெயர்: ஆட்கொண்டநாதர் அம்மை பெயர்: சிவபுரந்தேவி
கல்வாச நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயணபுரத்தில் இரணியூர் திருவேட்பூருடையார்.

**5. பிள்ளையார்பட்டிக் கோயில் (கலியுகம் 3815)**

விநாயகர் பெயர்: **கற்பக விநாயகர்**
சுவாமி பெயர் : **திருவீசர்** அம்மை பெயர்: **சிவகாமவல்லி**
சுவாமி பெயர் : **மருதீசர்** அம்மை பெயர் : **வாடமலர்மங்கை**
கல்வாச நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராயணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்.

**6. நேமம் கோயில் (கலியுகம் 3815)**

சுவாமி பெயர்: செயங்கொண்ட சோழீசர்
அம்மை பெயர் : சௌந்திரநாயகி
கேரள சிங்கள வள நாட்டில் நேமமாகிய குலசேகரபுரத்தில் தேனாறு பாயும் இளநலமுடையார்.

**7. இலுப்பைக்குடிக் கோயில் (கலியுகம் 3815)**

சுவாமி பெயர்: தான்தோன்றியீசர் அம்மை பெயர்: சௌந்திரநாயகி
கேரள சிங்க வள நாடாகிய பிரம்பூர் நாட்டில் இலுப்பைக்குடியான புகழிடங்கொடுத்த பட்டணத்தில் சூடாமணிபுரம் உடையார்.

**8. சூரைக்குடிக் கோயில் (கலியுகம் 3819)**

சுவாமி பெயர்: தேசிகநாதர் அம்மை பெயர்: ஆவுடை நாயகி
கேரள சிங்க வள நாட்டில் சூரைக்குடியான தேசிகநாராயண புரத்தில் புகழ் வேண்டி பாக்கமுடையார்.

**9. வேலங்குடி கோயில் (கலியுகம் 3819)**

சுவாமி பெயர்: கண்டிசுவரர் அம்மை பெயர்: காமாட்சியம்மை
கேரள சிங்க வள நாடாகிய பாலையூர் நாட்டில் வேலங்குடியான தேசிக நாராயணபுரத்தில் கழனி நல்லூருடையார்.





# திருவேட்பூருடையார்கள்

**நா. வள்ளி**, எம்.ஏ., பி.எட்., டி.ஈ.ஏ.,
முதுநிலை விரிவுரையாளர்,
இராமசாமி தமிழ்க் கல்லூரி,
காரைக்குடி

நகரத்தார் பெண்கள் குருபீடமாகிய துலாவூரில் பல ஓலைச் சுவடிகள் உள்ளன. அவற்றுள் ஒன்று, 'நகர வரன்முறை' என்று தலைப்பிட்ட ஓலைச்சுவடியாகும். அதில் நகரத்தார் வரலாறும் அவர்களது சாதிமுறை நியாயங்களும் எழுதப்பட்டு உள்ளன.

நகரத்தார்கள் தங்களுக்குள் கூடி பல சாதிமுறை நியாயங்களை வகுத்திருக்கிறார்கள். அதில் 'இரணிக் கோவிலாரும் பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் சகோதரர்களின் வமிசத்தாராதலால் தம்முள் கலியாணம் செய்து கொள்ளக் கூடாது. மற்றைய கோவில்களில் செய்து கொள்ளலாம்' என்ற வரிகள் காணப்படுகின்றன. இந்த வழக்கம் இன்றளவும் நடைமுறையில் இருந்து வருகின்றது.

இவர்கள் இருவரும் சகோதரர்கள் என்றால் இவர்கள் எப்போது எதிலிருந்து இரு கோவிலாராகப் பிரிந்தார்கள் என்று ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம்.

நகரத்தார்கள் காவிரிப்பூம்பட்டினத்திலிருந்து பாண்டி நாட்டுக்கு வந்த போது இளையாற்றங்குடி என்ற ஒரே பிரிவினராகத்தான் இருந்திருக்கிறார்கள். பிறகு 7 பிரிவினராகக் கோயில் அடிப்படையில் பிரிந்திருக்கிறார்கள். (இவ்வாறு பிரிந்தது கி.பி. 12ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு எனலாம்) அந்த ஏழு பிரிவுகளாவன:

1. இளையாற்றங்குடி
2. மாத்தூர்
3. நேமம்
4. இலுப்பைக்குடி
5. வேலங்குடி
6. சூரைக்குடி
7. வயிரவன் கோயில்

நகரத்தார் வரலாறு பற்றி அறிய உதவுகின்ற கண்ணுடையம்மன் பள்ளு, ஏழு நகரத்தார் பேரில் பள்ளு நாடகம், ஏழு நகரத்தார் பேரில் குளுவ நாடகம், பாடுவார் முத்தப்பர் பாடல்கள், நகரத்தார் அறப்பட்டயங்கள், இரணியூரில் தற்போது கிடைத்துள்ள செப்பேடுகள் (தமிழக அரசு தொல்பொருள் ஆய்வுத் துறையில் அதிகாரியாகப் பணியாற்றுகின்ற மா. சந்திரமூர்த்தி அவர்கள் கண்டுபிடித்தது) ஆகிய அனைத்தும் நகரத்தாரைக் குறிப்பிடுகின்றபோது 'ஏழு நகரத்தார்' என்றே குறிப்பிடுகின்றன.

இந்த 7 கோவில் பிரிவினரோடு, இரணிக்கோவில், பிள்ளையார்பட்டிக் கோவில் என்ற இரண்டு பிரிவுகள் சேர்ந்து ஒன்பது பிரிவுகள் தற்போது உள்ளன. இரணியூர் கோவிலாரும் பிள்ளையார்பட்டிக் கோவிலாரும் எதிலிருந்து பிரிந்தார்கள் என்பதை அறிய இரணியூரில் உள்ள ஒரு கல்வெட்டு உதவுகின்றது.

இரணியூர் ஆட்கொண்டநாத சுவாமி கோவிலில் சுமார் 10 கல்வெட்டுக்கள் இந்திய தொல்பொருள் ஆய்வுத் துறையினரால் படி எடுக்கப்பட்டுள்ளன. தற்போது அவைகளைக் காண முடியாது. நகரத்தார் திருப்பணிகளின் போது அவை அகற்றப்பட்டுவிட்டன. ஆட்கொண்டநாத சுவாமி கோவிலின் வடபுறச் சுவரில் ஒரு கல்வெட்டு இருந்திருக்கிறது. (A.R. No. 3/1926) இளையாத்தங்குடியைச் சேர்ந்த திருவேட்பூருடையார்கள் இரணியூரில் ஒரு குடிதண்ணீர் ஊருணியை தங்கள் பிரிவின் பெயரால் அதாவது 'திருவேட்பூருடையான்' என்ற பெயரால் வெட்டிக் கொடுத்திருக்கிறார்கள் என்பதையும் அது மட்டுமல்லாமல் இரணியூரில் வடபால் உகந்த பத்ரகாளியம்மன் கோவிலில் திருப்பணி செய்திருக்கிறார்கள் என்பதையும் அக்கல்வெட்டு தெரிவிக்கின்றது. தற்போது இரணியூருக்கு வடக்கே உள்ள இரணிக்காளி கோயிலும், அதற்கு எதிரே உள்ள 'அம்மன் சேங்கை' என்ற ஊருணியுமே கல்வெட்டு குறிப்பிடுகின்ற வடபாலுகந்த பத்ரகாளியம்மன் கோவிலும் திருவேட்பூருடையான் ஊருணியுமாகும்.

''ஸ்வஸ்தி ஸ்ரீ சகாப்தம் 1423 மேல் செல்லா நின்ற இரவுதகிரி வருஷம் தை மாதம் 2ஆம் தேதி கல்வாயில் நாட்டு இளையாத்தங்குடியான குலசேகரபுரத்து திருவேட்பூருடையார்களுக்கு இன்னாட்டு இரணி ஊராக அமைந்த ஊரவரோம் எங்களூற் வடக்கு வாசலில் நல்ல தண்ணீர் ஊறணி திருவேட்பூருடையானும் இதன் தெற்கு வடபாலுகந்த பத்திரகாளி அம்மை கோயிலும் முல் வேதகமும் முன்னாள் திருவேட்பூருடையார்கள் தன்மமாகையால்...'' என்று திருவேட்பூருடையார்கள் செய்த தருமத்தைப் பற்றித் தெரிவிக்கின்றது கல்வெட்டு.

திருமெய்யம் தாலுகா, இராங்கியத்தில் பூமிசுவரர் கோவிலில் சுவாமி கோவிலின் தென்புறம் சுவரிலுள்ள சாசனம் கி.பி. 1520ஐச் சேர்ந்தது. இக்கல்வெட்டில், 'கல்வாசல் நாட்டு இளையாத்தங்குடியான குலசேகரபுரத்து காளைய காவல்ப் பெருந்தெருவில் திருவேட்பூருடையான் இன்பவனப் பெருமாள்' என்பவன் குறிக்கப்படுகின்றான்.

திருமெய்யம் தாலுகா, கோனாபட்டில் கற்பகவிநாயகர் கோயிலில் நடப்பட்டிருக்கும் ஒரு கல்லிலுள்ள சாசனம் ''இளையாத்தக்குடியான குலசேகரபுரத்துத் திருவேட்பூருடையான் சேவகப் பெருமாள் புத்திரன் அழகப்பச் செட்டியார் என்பவர் தன்னுடைய பெயரால் 'அழகப்பெருமாள் ஊருணி' என்ற பெயரிட்டு ஒரு ஊருணியை உண்டாக்கி திருக்கோவிலும் கட்டுவித்து, கற்பக விநாயகரை மண்டபத்தில் எழுந்தருளிவித்த செய்தியைக் கூறுகிறது. இக்கல்வெட்டின் காலம் சுமார் கி.பி 1600.

திருமெய்யம் தாலுகா, மறவா மதுரையில் அகளங்கீசுவரர் கோவிலில் உள்ள கி.பி. 1524ஐச் சேர்ந்த கல்வெட்டு இளையாத்தங்குடியான குலசேகரபுரத்து திருவேட்பூருடையான் நல்ல பெருமாள்' என்பவரைப் பற்றி குறிப்பிடுகிறது.

பழனித் தலத்தில் நகரத்தார் செய்த தருமங்களை விரித்துக் கூறுகின்ற நகரத்தார் அறப் பட்டயங்களும், 'இருபத்திரண்டு கோத்திரமாகிய ஏழு நகரத்தார்' என்று குறிப்பிட்டு இருபத் திரண்டு கோத்திரப் பிரிவுகளுள் திருவேட்பூருடையார் என்ற பிரிவையும் சுட்டுகிறது.

நாம் மேலே பார்த்த கல்வெட்டுக்கள் அனைத்தும் இளையாத்தங்குடியில் திருவேட்பூருடையார் என்ற பிரிவினர் 16ஆம் நூற்றாண்டு வரை இருந்திருக்கின்றனர் என்பதை உறுதிப்படுத்துகின்றன. ஆயின் தற்போது இளையாத்தங்குடியில்,

1. ஒக்கூருடையார்
2. அரும்பாற்கிளையாரான பட்டணசாமியார்
3. பெருமருதூருயைடார்
4. கழனிவாசல்குடியார்
5. கிங்கிணிக்கூருடையார்
6. பேரசெந்தூருடையார்
7. சிறுசேத்தூருடையார்

என்ற ஏழு பிரிவினரே உள்ளனர். திருவேட்பூருடையார் என்ற பிரிவினர் இல்லை. அவர்கள் என்ன ஆனார்கள்? தற்போது 7 கோவிலாருடன் இரணிக் கோயில், பிள்ளையார்பட்டி என்ற இரண்டு பிரிவினர் சேர்ந்து 9 பிரிவினர் உள்ளனரோ இவர்கள் யார்?

இந்த வினாக்களுக்கு நாம் திருமணத்தின்போது எழுதுகின்ற இசைகுடிமானம் விடையளிக்கிறது.

இசைகுடிமானத்தில் இளையாத்தங்குடியினர், தங்களைப் பற்றிக் குறிப்பிடுகையில், 'கல்வாசல் நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில்' என்று தொடங்குவார்கள்.

இரணிக் கோயிலார், 'கல்வாசல் நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான இராசநாராயணபுரத்தில் இரணியூர் திருவேட்பூருடையார்' என்று குறிப் பிடுவார்கள்.

பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தார், 'கல்வாசல் நாட்டில் இளையாற்றங்குடியான குலசேகரபுரத்தில் இரணியூர் மருதங்குடியான ராசநாராணபுரத்தில் பிள்ளையார்பட்டியான திருவேட்பூருடையார்' என்று குறிப்பிடுவர்.

இளையாற்றங்குடியை இரணியூரார், பிள்ளையார்பட்டியார் இருவருமே குறிப்பிடுகிறார்கள். மேலும் இருவரும் திருவேட்பூருடையார் என்றே குறிக்கப்படுகின்றனர். இரண்டு வாசகங்களிலும் மருதங்குடியான இராசநாராயணபுரம் என்ற ஊர்ப்பெயர் காணப்படுகிறது. மருதங்குடியான இராசநாராயணபுரம் என்பது பிள்ளையார்பட்டியைக் குறிக்கும். (பிள்ளையார்பட்டியில் உள்ள மூன்று கல்வெட்டுக்கள் மூலம் கானநாட்டு காரிகுடி ஐந்நூற்றுவப் பெருந்தெருவில் உள்ள நகரத்தார்கள் கி.பி. 12ஆம் நூற்றாண்டில் பிள்ளையார்பட்டியைச் சுற்றியுள்ள மருதங்குடி வயல்களைய மருதங்குடி ஊராரிடம் விலைக்கு வாங்கி அங்கு 'இராச நாராயணபுரம்' என்ற பெயருடன் ஒரு நகரம் அமைத்து அதில் குடியேறி வாழ்ந்து வர அப்போது பாண்டி மண்டலத்தை ஆண்ட அரசனிடம் முழு உரிமையும் பெற்றிருக்கிறார்கள் என்று அறிகிறோம்.)

இரணியூரார், மருதங்குடியான இராசநாராயணபுரம்' என்று பிள்ளையார்பட்டியையும், பிள்ளையார்பட்டிக் கோவிலார் இரணியூரையும் குறிப்பிட்டு இறுதியில் இருவரும் திருவேட்பூரார் என்றே முடிக்கின்றனர். ''திருவளர் இரணி திருவேட்பூரார்''

''கற்பகவிநாயகரைப் பணி தேசிகர்
இளசைத் திருவேட்பூரார்''

என்று ஏழு நகரத்தார் பேரில் பாடப்பட்ட குளுவ நாடகம் இருவரையும் திருவேட்பூரார் என்றே குறிப்பிடும்.

மேலே சொன்ன செய்திகள் அனைத்தையும் கொண்டு பார்க்கும்போது, இளையாற்றங்குடியில் திருவேட்பூருடையார் என்ற ஒரு பிரிவினர் இருந்திருக்கின்றனர் என்றும், பின்னர் இவர்களே இரணிக்கோவில் நகரத்தாராகவும், பிள்ளையார்பட்டிக் கோவில் நகரத்தாராகவும் பிரிந்தனர் என்றும், தாங்கள் இருவரும் சகோதரர்கள் என்பதை இசைகுடிமானத்தில் எழுதுகிற திருவேட்பூரார் என்ற வழக்கின் மூலம் தெரிவித்துக் கொள்ளுகின்றனர் என்றும் அறிகிறோம்.

இளையாற்றங்குடி திருவேட்பூருடையாரைக் குறிப்பிடுகின்ற இராங்கியம், மறவா மதுரை, இரணியூர் போன்ற இடங்களில் உள்ள கல்வெட்டுக்கள் அனைத்தும் 15ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சேர்ந்தவை. எனவே, அதுவரை இரணிக் கோவிலாரும், பிள்ளையார்பட்டியாரும் தனித்தனிக் கோவிலாராகப் பிரிந்திருக்க முடியாது. 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த நகரத்தார் அறப்பட்டயங்கள் இரணிக்கோவிலாரையும் பிள்ளையார் கோவிலாரையும் (இந்த வழக்கே நூலில் காணப்படுகிறது) குறிப்பிடுகின்றன. ஆகையால் இளையாற்றங்குடி திருவேட்பூருடையார் இரணிக்கோவிலாராகவும், பிள்ளையார்பட்டிக் கோவிலாராகவும் பிரிந்தது 16ஆம் நூற்றாண்டிலிருந்து தான் எனக் கொள்ளலாம்.







# வாழ்வாங்கு வாழ்ந்த குலமே!



அமரர் கவியரசர் **கண்ணதாசன்**

சிந்துவெளிப் புகழ்காத்து
சீர்காத்து திறம்காத்து
தென்னாடு வந்த குலமே

திருவுடைய சோழனவன்
செம்மாண் புகார் நகரில்
திருக்கோவில் கொண்ட குலமே

வந்தவழி மறவாது
வாய்மை நெறி தவறாது
வாழ்வாங்கு வாழ்ந்த குலமே

வாணிபமும் மதநெறியும்
வளர்ந்தோங்கி நாள்தோறும்
வளமாக நின்றகுலமே

எந்தமிழ் நாடெங்கும்
இறைபணியே பெரிதென்று
எந்நாளும் செய்த குலமே

என்னுடைய குலமென்பேன்
எல்லாமும் நீயறிவாய்
ஏற்றுக்கொள் தமிழர் நிலமே

காவிரியின் பெருமாட்டி
கவின்மதுரை நகர்தன்னைக்
கயல்சூழ வைத்த கதையும்

கண்ணகிஎன் றால் இந்த
மண்ணெல்லாம் அடிபணிய
கற்போடு வாழ்ந்த நிலையும்

நாவசையும் போதெல்லாம்
நாடசையும் படிநின்ற
நல்வளையா பதியின் கதையும்

நாடியவர்ப் பணியாது
மணிமே கலை என்ற
நன் மங்கை வாழ்ந்த கதையும்

காவியங்கள் ஐந்தினிலும்
மூன்றிலே தலைதூக்கிக்
காட்டுவதும் எங்கள் குலமே

கடுகளவுதான் சொன்னேன்
மலையளவு புகழுண்டு
காண்பாய்நீ தமிழர் நிலமே

கடலோடி மலைநாடும்
பிறநாடும் சென்றார்கள்
கப்பல் வராத போதே

காற்றினிலே பாய்போட்டு
கடவுளையே துணைவைத்து
கலங்களெலாம் சென்றபோதே

நடமாடும் சிவமாக
திருநீறும் சந்தனமும்
நதிபோலப் பூசும் உடலே

'நமசிவாயம்' என்று
நாள்தோறும் சொல்லுமவர்
நயமான சிவந்த இதமே

தடம்பார்த்து நடைபோடும்
தனிப்பண்பு மாறாத
தகைமிக்க தெங்கள் குலமே

தந்தகரம் அவராகப்
பெற்றவளும் நீதானே
சாட்சிசொல் தமிழர் நிலமே

ஆறாயிரம் பேர்கள்
கற்கின்ற கழகத்தை
அண்ணாமலை நாட்டினான்

அவனோடு போட்டியிட
அத்தனையும் தான்தந்து
அழகப்பன் முடிசூட்டி னான்

ஓராயிரம் தடவை
செட்டிமகன் நானென்று
உலகெங்கும் மார்தட்டினான்

உளநூலும் விஞ்ஞான
மருத்துவமும் கற்றவர்கள்
உண்டென்று பேர் காட்டினான்

சேராத செல்வத்தைச்
சேர்த்தாலும் நல்லவழி
செலவாகும் எங்கள் குலமே

செந்திருவை சரஸ்வதியை
கேட்டேனும் உண்மைநிலை
தெரிந்துகொள் தமிழர்நிலமே

சாதிவெறி கொண்டேன்போல்
கவிதையிதை எழுதினேன்
தவறல்ல; உண்மை சொன்னேன்

தர்மத்தைப் பாடுவது
சாதிவெறி யாகாது
தமிழுக்கே நன்மை என்பேன்

ஓதியொரு மொழி சொன்ன
ஒக்கூர்மா சாத்தியுமென்
உன்னதப் பாட்டி யாவாள்

உயர்ந்த சீத் தலைச்சாத்தன்
ஒருவகையில் வணிகனென்
உத்தமப் பாட்டனாவான்

ஆதிமுதல் தமிழிலே
அவர்வந்த வழியிலே
அடியேனைப் பெற்ற குலமே

அளவிலே சிறிதேனும்
செயலிலே பெரிதாக
அறிவாய்நீ தமிழர் நிலமே!





# இரணியூர்க் கல்வெட்டுகள்



'தமிழ்ச்செம்மல்' – 'கோயில் கலைமாமணி'
டாக்டர் **வ. தேனப்பன்** (98424 34961)

**முன்னுரை**

இளையாத்தங்குடிக் கோயிலின் ஒரு பிரிவினரான திருவேட்பூருடையார் வகுப்பைச் சேர்ந்தவர்கள் 13ஆம் நூற்றாண்டில் பிள்ளையார்பட்டிக் கோயிலையும் இரணியூர்க் கோயிலையும் தோற்றுவித்துள்ளனர்.

ஏழு கோயில் நகரத்தார்கள் என்ற பெயர், பிள்ளையார்பட்டி, இரணியூர்க் கோயில்கள் தோன்றியதால், ஒன்பது நகரக் கோயில் நகரத்தார்கள் என்ற பெயராக வளர்ந்துள்ளது.

இரணியூர்க் கோயிலில் உள்ள கல்வெட்டுக்களை இந்தியத் தொல்பொருள் ஆய்வுத் துறையினர் குழு, 1926ஆம் ஆண்டு படி எடுத்துள்ளனர். அவ்வாறு அவர்கள் பதிவு செய்த கல்வெட்டுகளின் எண்ணிக்கை 13 ஆகும். நான் எனது பி.எச்.டி. டாக்டர் பட்ட ஆய்விற்காக நுணுகி ஆராய்ந்தபோது ஒரு கல்வெட்டைக் கண்டுபிடித்தேன். ஆக மொத்தம் 14 கல்வெட்டுக்கள் இரணியூரின் பழம் பெருமை வரலாற்றைக் கூறுகின்றன.

**கல்வெட்டுகளின் காலம்:**

இக்கல்வெட்டுகள் கி.பி. 1231, 1268, 1282, 1289, 1293, 1294, 1299, 1300, 1501 ஆகிய ஆண்டுகளில் வெட்டப்பட்டுள்ளன.

**கல்வெட்டுகள் கூறும், ஊர் பெயர்ச் செய்திகள்:**

இரணியூர்க் கோயிலின் வரலாற்றுப் பெயர், இராச நாராயணபுரம் ஆகும். இது கல்வாச நாட்டில் உள்ளது. கேரள சிங்க வளநாட்டின் ஒரு உட்பிரிவே கல்வாச நாடாகும்.

கல்லுவயல் என்னும் சிற்றூர் இளையாத்தங்குடியின் தெற்குத் திசையில் அமைந்துள்ளது. கல்லு வயலே முற்காலத்தில் கல்வாயில் நாடு என்றும் கல்வாசல் நாடு என்றும் அழைக்கப் பெற்றிருக்கலாம் என்பர். ஆராய்ச்சி அறிஞர் டாக்டர் தே. சொக்கலிங்கம் அவர்கள்.

கேரள சிங்க வளநாடு என்னும் பெயரும் ஆராய்ச்சிக்கு உரியது. கேரள மன்னனான சேர மன்னர்கள் கண்டு பயப்படும் சிங்கம் போன்ற வீரம் படைத்தவர்கள் பாண்டிய மன்னர்கள் என்பதையே, இப்பெயர் குறிப்பால் உணர்த்துகிறது.

**கோயில் பற்றிய செய்திகள்:**

இரணியூர்க் கோயில், 'கல்வாயில் ஆண்ட நாயனார் கோயில்' எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

இங்குள்ள இறைவன் பெயர் ஆட்கொண்ட ஈஸ்வரமுடைய நாயனார் என்று கல்வெட்டுகள் குறிப்பிடுகின்றன. இவ்வூரின் வடக்கு பத்திர காளியம்மன் கோயில் இருப்பதை ஒரு கல்வெட்டு சுட்டிக் காட்டுகிறது. இங்கு அற்புதக் கூத்தன் ஊருணியும், நல்ல தண்ணீர் ஊருணியும் இருந்ததை இரு கல்வெட்டுக்கள் குறிப்பிடுகின்றன.

இவ்வூர்க் கோயிலில் ஆண்ட பிள்ளையார் என்னும் பெயரில், பிள்ளையாருக்கான ஒரு சிறு கோயில் கட்டப் பெற்று நிலந்தங்கள் ஒதுக்கப்பட்டிருந்தன என்றும் ஒரு கல்வெட்டு கூறுகிறது.

முதலியார் மலைமாந்தேவர் என்பவரைத் தலைமையாகக் கொண்டு, ஒரு சைவ மடம் இரணியூரில் இருந்துள்ளது. அதில் தட்சிணாமூர்த்தி சிவன் என்பவர் சிவமந்திரங்களைப் போதிக்கும் பணியில் ஈடுபட்டிருந்ததை ஒரு கல்வெட்டு தெரிவிக்கின்றது.

**முடிவுரை:**

இளையாத்தங்குடிக் கோயிலில் எட்டாவது பிரிவைச் சேர்ந்தவர்கள் திருவேட்புடையார் என்னும் தனி வகுப்பினர் ஆகும். இவர்கள் திருமாலின் மேல் அதிக ஈடுபாடும் பற்றுதலும் வேட்கையும் கொண்டு பெருமாளை வழிபடத் தொடங்கியதாலேயே இவர்களுக்கு திரு+வேட்கை உடையார் என்ற பெயர் ஏற்பட்டுள்ளது.

வேட்கை என்றால் தாகம் என்றும் ஒரு பொருள் உண்டு. பெருமாள் மீது அதிக தாகம் (பக்தி) கொண்டமையினால் இவர்கள் வாழ்ந்த பகுதி அரச நாராயணபுரம் என முன்பு அழைக்கப்பட்டது. அது பிற்காலத்தில் ராச நாராயணபுரம் உடைய எனப் பிற்காலத்தில் பெயர் பெற்றது. திருமால் மீது கொண்ட வேட்கையே இரணியூரில் நீலமேகப் பெருமாள் கோயிலை உருவாக்க வழியமைத்தது.

இரணியூர்க் கல்வெட்டுகள் மூலம் அக்கால வரிவிதிப்பு முறைகளும் தெரிய வருகின்றன. கோயிலுக்கு நிலத்தைத் தானமாகக் கொடுப்பவர்களுக்குச் சலுகையாக அச்சு வரி, பொன்வரி, அந்தராயம், வெட்டிப்பாட்டம், பஞ்சு பீலி, சந்திவிக்கிரமபேறு, தறியிறை, தட்டார்பாட்டம் போன்ற வரிகளை நீக்கி அரசாணை பிறப்பித்துள்ளனர்.

மிகச் சிறந்த சிற்பக் கலையும் கோயில் கட்டிடக் கலையும் இரணியூரின் பெருமையை என்றென்றும் புகழ்ந்து கூறும்.

ஆட்கொண்ட நாதர் கோயிலின் ஒவ்வொரு சிறப்பும் நம்மை வெகுவாக ஆட்கொள்ளும் சிவபுர இன்பத்தினை நல்கும்.

''தமிழ்ச் செம்மல்'' ''கோயில் கலைமாமணி''
டாக்டர் **வ. தேனப்பன்**
M.A., Ph.D., P.G.D.H.E., C.T., C.I.A., D.D.G.,
முன்னாள் தமிழ்ப் பேராசிரியர்
ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரி
தேவகோட்டை
இருப்பு: ''தெய்வம் அற்புத உலகம்'' பிள்ளையார்பட்டி-630 207
செல்: 98401 34961



# நகரத்தார் வழித்தோன்றல் நாயன்மார்கள் ஐவர்



## 1. காரைக்காலம்மையார்

திருத்தொண்டர் புராணத்தில் விரித்துரைக்கப்படும் 63 நாயன்மார் வரலாற்றில் நகரத்தார் இனத்தைச் சார்ந்த பெண் அடியார் காரைக்காலம்மையார். காரைக்கால் வணிகர் குலத் தலைவன் தனதத்தன் என்பாரது திருமகளார் புனிதவதி. இளமையில் விளையாட்டுப் பருவந்தொட்டே சிவபெருமானிடத்தும் சிவனடியாரிடத்தும் மிகுந்த அன்பு கொண்டிருந்தார் புனிதவதியார்.

உலகத்து அழகெல்லாம் ஒன்று திரண்டது போன்ற வனப்புடைய வடிவத்தோடு மங்கைப்பருவம் எய்தினார் புனிதவதி. நாகப்பட்டினத்தைச் சேர்ந்த வணிகர் குலத் தலைவர் நீதிபதி என்பாரின் மகன் பரமதத்தனுக்கும் புனிதவதிக்கும் காரைக்காலில் கலியாணம் நடைபெற்றது. நகரத்தார் வழக்கில் திருமணம் கலியாணம் என்ற சொல்லாலேயே அழைக்கப் படும். அம்மையின் திருமணத்தைக் கலியாணம் என்ற சொல்லாலேயே

தளிர் அடிமென் நகைமயிலைத்
தாது அவிழ்த்தார் காளைக்கு
களிமகிழ் சுற்றம் போற்றக்
கலியாணம் செய்தார்கள்

என்று சேக்கிழார் பாடுகிறார். ஒரே மகள் ஆகையினால் தனதத்தன் விரும்பிய வண்ணம் புனிதவதியும் பரமதத்தனும் காரைக்காலிலேயே வாழ்ந்தனர். தனி வளமனையில் மகிழ்வோடு வாழ்ந்து வந்தார் புனிதவதி. ஒருநாள் பரமதத்தன் கடைக்கு வந்தவர்கள் தந்த இரு மாங்கனிகளை வீட்டுக்குக் கொடுத்தனுப்பினான். அவ்வேளையில் வழிநடையால் களைப்புற்று வயது முதிர்ந்த சிவடினயார் ஒருவர் அம்மையாரின் திருமனையை அடைந்து பசி மிகுதி தோன்றக் களைப்புடன் நின்றார். அடியார் பசியை உடனே தீர்ப்பது கடன் எனப் புனிதவதியார் திருவமுதுடன் ஒரு மாங்கனியை உடன் வைத்து அடியவர்க்கு அன்னம் பாலித்தார். அடியவர் உண்டு வேட்கை தீர்த்து வாழ்த்தி சென்றார். மதியம் உணவு உண்ணும்போது கணவனுக்கு மற்றொரு மாங்கனியை வைத்தார். அதன் சுவை அயின்ற பரமதத்தன் இன்னொரு மாங்கனி இருக்குமே எடுத்து வா

என்றான். அம்மையார் கனி கொண்டு வருவார் போல் வீட்டினுள் சென்று மெய்மறந்து உற்றவிடத்து உதவும் பெருமானே என்று ஆண்டவனை நினைத்தார். இறைவன் திருவருளால் ஒரு மாங்கனி அம்மையார் கையில் வந்து நின்றது. அதைக் கொண்டு வந்து கணவனுக்கு இட்டார். அதை உண்ட அவன் தான் இதுவரை உண்ணாத சுவையுடையதாய் இம்மாங்கனி இருப்பதை உணர்ந்து வியப்புற்று என்னே இதன் சுவை மூவுலகிலும் பெறற்கரியது. நீ எங்கே பெற்றாய் என்று கேட்டான். திருவருள் உதவிய திறத்தை வெளியிடலாகுமோ என அம்மையார் ஒரு கணம் தயங்கினார். கணவனிடம் உண்மையை மறைத்தல் தவறன்றோ என மறுபுறம் எண்ணினார். தெளிந்து உண்மையைக் கூறினார். இறைவன் திருவருள் இது வாயின் இன்னொரு பழம் கொண்டுவா பார்ப்போம் என்றான் கணவன். அம்மையார் ஆண்டவனைச் சிந்தித்து இன்னுமொரு பழம் தந்தருளவில்லையெனில் என் உரை பொய்யாகும் என்று வேண்டி நின்றார். சிவனருளால் அவர் கையில் மாங்கனி ஒன்று வந்து நின்றது. அதைக் கொண்டு வந்து கணவரிடம் கொடுத்தார். அவன் வியப்புற்று அதை வாங்கினான். அவன் கையிலிருந்து அது உடனே மறைந்தது. கணவன் திகைப்புற்றான் தெய்வத்தன்மை உடையவர் என அம்மையாரைக் கண்டு அஞ்சினான்.

வணிகத்தின் பொருட்டுச் செல்வன்போல வேறு புலம் சென்றவன் திரும்பி வரவே இல்லை. பாண்டிய நாடு சென்று அங்கேயே தங்கி வணிகம் செய்து வேறு ஒரு பெண்ணையும் திருமணம் செய்து கொண்டு பரமதத்தன் வாழ்வதாகக் காரைக்காலுக்கு வந்தோர் கூறினார். அதை உறுதி செய்து கொண்ட அம்மையாரின் பெற்றோர் கணவரிடத்து மனைவியைக் கொண்டு சேர்ப்பது நம் கடமை என அம்மையாரை அழைத்துக்கொண்டு பாண்டி நாடு சென்றனர். இவர்கள் வருகையை அறிந்த பரமதத்தன் ஊர் எல்லையில் சந்திக்க வந்தான். ஓர் இளம் பெண்ணும் ஒரு குழந்தையும் அவன் கூட வந்தனர். அவன் நேரே வந்து புனிதவதியார் காலில் விழுந்து வணங்கினான் குழந்தையை அவர் முன்பு வணங்கச் செய்தான்.

இக்குழந்தைக்கு உமது பெயரே இட்டுள்ளேன். உமது அருளால் வாழ்கின்றேன் என்றான். புனிதவதியார் அச்சமுற்று ஒதுங்கி நின்றாள். உறவினர் நாணமுற்று பரமதத்தா கணவன் இவ்வாறு வணங்கலாமா? என்றனர். உடனே பரமதத்தன் இவர் சாதாரணப் பெண் அல்லர்; தெய்வம். அது கருதியே நான் இவரைப் பணிந்தேன். நீங்களும் பணிந்து வணங்குங்கள் என்றான். உறவினர் இது என்ன மாயம் என்று திகைத்தனர். அம்மையார் சிவபெருமானை வணங்கி ஈங்கிவன் குறித்த கொள்கை இதுவானால் இவனுக்காகத் தாங்கிய ஊன்பொதி தசைவடிவம் இனி வேண்டாம். அடியேனுக்குப் பேய் வடிவம் தந்தருள வேண்டும் எனக்கேட்டார். ஆண்டவன் திருவருளால் அவ்வாறே நிகழ்ந்தது. எலும்பு உடலானார். மண்ணும் விண்ணும் வணங்கும் பேய் வடிவம் பெற்றார். பேய் வடிவத்துடன் தலைகீழாக நடந்து சென்று கைலாய மலையில் ஏறிச் சிவனருட் காட்சி காணச் சென்றார். இவர் வருவது கண்ட உமையம்மை இறைவனிடம் இவர் யாரென வினவ வரும் இவள் நம்மைப் பேணும் அம்மை காண் என்றார். முதலும் முடிவும் இலாத, பிறப்பு இறப்பு இலாத தாய் தந்தை இலாத சிவபெருமானே இவரைத் தாய் என்று கொண்டு போற்றினன் எனில் அம்மையாரின் பக்தித் திறத்தை அளவிட இயலுமோ?

என்ன வரம் வேண்டும் என இறைவன் கேட்டபோது பிறவாமை வேண்டும் மீண்டும் பிறப்பு உண்டேல் உனை என்றும் மறவாமை வேண்டும். இறைவனே நீ நடம் புரியும்போது உன்னடியின் கீழிருந்து கண்டுகளிக்கும் பேறு வேண்டும் எனக் கேட்டார். திருவாலங்காட்டில் நாம் நடம் புரியும் போது நீ என்றும், நம் பக்கமிருந்து கண்டுகளிப்பாயாக என்று சிவபெருமான் வரமருளினான். காரைக்காலம்மையார் இறைவன் கொட்டி எனும் நடமிடும்போது கண்டுகளித்து இறையருளை

வியந்து திருவாலங்காட்டுத் திருவந்தாதி, மூத்த திருப்பதிகம், திருவிரட்டை மணிமாலை ஆகிய பாடல் நூல்களை இயற்றியருளினார். திருமுறை பாடியோரில் காலத்தால் மூத்தவர் காரைக்காலம்மையார். அறுபத்து மூன்று நாயன்மாரில் அமர்ந்திருக்கும் திருக்கோலம் அம்மையார் மட்டுமே பெற்றிருப்பது தனிச் சிறப்பாகும்.

## 2. மூர்த்தி நாயனார்

மும்மையாலுல் காண்ட மூர்த்திக்கு மடியேன்'' - திருத்தொண்டத்தொகை


மூர்த்தி நாயனார்

மூர்த்தி நாயனார் பாண்டி நாட்டிலே உள்ள மதுரை மாநகரில் வணிக குலத்திலே அவதரித்தார். அவர் சிவபெருமான் திருவடிகளையே மெய்யடியாக பற்றினவர். அத்திருவடிகளே தமக்குத் துணையும், தாம் அடையும் பொருளும் எனக் கொண்ட கொள்கையினாராய் வாழ்ந்தவர். அவர் திருவாலவாயில் உறையும் சொக்கலிங்கப் பெருமான் திருமேனிக்குத் தினமும் மெய்ப்பூச்சுக்குச் சந்தனக்காப்பு அரைத்துக் கொடுக்கும் திருப்பணியை வழுவாமற் செய்து வந்தார்.

அந்நாளில் வடுகக் கருநாடக அரசன் ஒருவன் நீதிவகையாலன்றிப் படை வலிமையினாலே வலிந்து மண் கவரும் ஆசையால் பெரும் படை கொண்டு வந்தான். பாண்டியனோடு போர் செய்து பாண்டி நாட்டின் அரசாட்சியைக் கவர்ந்து கொண்டான். அவன் நன்நெறியாகிய திருநீற்றுச்சார்புடைய சிவநெறியில் செல்லாது தீ நெறியாகிய சமணர் திறத்தில் ஆழ்ந்து சிவனடியார்களையும் அவர்களது அடிமைத்திறம் செல்லவொட்டாது தீங்கு செய்வாயினான். அவ்வாறு சமணத்திற்கு உட்படுத்த எண்ணி, மூர்த்தியாரையும் பல கொடுமைகள் செய்தான். அவர் அவற்றால் ஒன்றும் தடைப்படாது தமது நியதியான திருப்பணியைச் செய்து வருவாராயினார். தத்தம் பெருமைக்கு அளவாகிய சார்பினின்றொழுகும் எமது பெருமக்களை யாவர் தடுக்கவல்லர்? அதுகண்டு பொறாத அக்கொடியோன் அவருக்குக் சந்தனக் கட்டை கிடைக்காதவாறு செய்தான். அவர் சிந்தை நொந்து 'இக்கொடும் பாதகன் மாய்ந்திட திருநீற்று நன்னெறியைப் பெறுவதென்றோ? என எண்ணினர். அன்று பகல் முழுவதும் சந்தனக்கட்டை தேடியும் பெறாது வருந்தி மனம்தளர்ந்து இறைவரது திருக்கோயிலுக்கு வந்தார். இன்று இறைவரது மெய்ப்பூச்சுக்குச் சந்தனம் முட்டுப்படினும் அதனைத் தேய்க்கும் இந்தக் கையினுக்கு முட்டில்லை என்று துணிந்து, சந்தனப்பாறையில் தமது முழங்கையைத் தேய்த்தனர். எலும்பு திறந்து மூளை சொரிந்தது. ''ஐயனே! அன்பின் துணிவினால் இச்செயல் செய்யாதே! உன்னை வருத்திய தீயோன் ஆண்ட நாடு முற்றும் நீயே ஆண்டு, முன்பு வந்த துன்பமெல்லாம் போக்கி உலகத்தை காத்து உன் திருப்பணி செய்து நம் உலகு சேர்வாயாக!'' என்று இறைவரது அசரீரியாக திருவாக்கு எழுந்தது. அதனை வண்ணமும் நிரம்பின சிவகணங்கமழும் ஒளிபெற்ற திருமேனியுடன் மூர்த்தியார் விளங்கினார்.

அன்று இரவே அடியாரை அழித்த அந்தக் கொடிய மன்னன் இறந்து எரிவாய் நரகில் வீழ்ந்தான். அவன் மனைவியாரும் சுற்றத்தாரும் ஏங்கினர் அமைச்சர் கூடி அவனுக்குரிய முறைப்படி ஈமக்கடன்களைக் காலையே செய்து முடித்தனர். அவனுக்கு மக்களில்லை. கூழும் குடியும் பிற எல்லா வளனும் உடையதாயினும் அரசரனது காவலில்லாவிடின் நாடு நல்வாழ்வில் வாழமுடியாதென்று அமைச்சர் கவலையுற்றார். யானையைக் கண்கட்டிவிட்டால் அதனால் ஏந்தி வரப்பட்டவரை அரசராகக் கொள்ளத் தக்கதென்று துணிந்து அவ்வண்ணமே செய்தனர்.

அன்றிரவில் நிகழ்ந்தவற்றை கண்ட மூர்த்தியார் ''எம்பெருமான் அருள் அதுவாகில் உலகாளும் செயல் பூண்பேன் என்று கொண்டு உள்ளத்தளர்ச்சி நீங்கித் திருவாலவாய்த் திருக்கோயிலின் முன்வந்து நின்றனர். யானை அங்கு சென்று மூர்த்தியாரை தாழ்ந்து எடுத்து பிடரிமேற் தரித்துக் கொண்டது. அது கண்ட நகர மாந்தர்கள் வாழ்த்தி மங்கல வாத்தியங்கள் முழங்கினர். மூர்தியாரை யானையிலிருந்து இறக்கி முடிசூட்டு மண்டபத்திற்குக் கொண்டு சென்று முடிசூட்டுவதற்குரிய சடங்குகள் செய்யலாயினார். ''சமண் போய்ச் சைவம் ஓங்குமாகில் நான் அரசாட்சியினை ஏற்றுப் புவி ஆள்வேன்; முடி சூட்டுவதற்குரிய சடங்குக்கு திருநீறே அபிடேகமாகவும் உருத்திராக்க மணியே அணிகலனாகவும், சடைமுடியே முடியாகவும் இருக்கக் கடவன'' என மூர்த்தியார் அருளினார். அதுகேட்ட அமைச்சரும் உண்மை நூலறிவோரும் நன்று என்று பணிந்து, அவ்வாறே உரிய சடங்குகள் எல்லாம் செய்தனர். மூர்த்தியாரும் மங்கல ஓசைகளும் மறை முழக்கம் வாழ்த்தொலியும் மல்க நாட்டின் அரசராக முடி சூடினார்.

முடிசூட்டு மண்டபத்தினின்றும் மூர்த்தியார் முதலில் திருவாலவாய்த் திருக்கோயிலுக்குச் சென்று தாழ்ந்து வணங்கினர். பின் அங்கு நின்றும் யானை மீதேறி நகர வீதியில் பவனி வந்து அரண்மனை வாயிலை அடைந்தனர். யானையினின்றும் இறங்கிச் சென்று அரச மண்டபத்தில் சிங்காசனத்தில் அரச கொலு வீற்றிருந்தனர். அவரது குறிப்பின்படி அமைச்சர்கள் ஒழுகினர். சமண் கட்டு நீங்கித் திருநீறு உருத்திராக்கமணி, சடாமுடி என்ற மும்மையினால் உலகண்டனர் மூர்த்தியார். பொன்னாசை சிறிதும் படாது முழுத் துறவொழுக்கம் பூண்ட மூர்த்தியார் ஐம்புலப் பகையாகிய உட்பகையையும், சமணர், வேற்றரசர் முதலிய புறப்பகையையும் நீக்கி உலகத்தை நெடுங்காலம் அருளாட்சி புரிந்த பின்னர் திருவடி நீழலில் உறையும் பெருவாழ்வு பெற்றார்.

## 2. கலிக்கம்ப நாயனார்



''கைதடிந்த வரிசிலையான் கலிக்கம்பன்
(கலியன் கழற்சத்தி வரிஞ்சையர்கோன்)
அடியார்க்கும் அடியேன்'' - திருத்தொண்டத் தொகை.

நடுநாட்டில் வளங்கள் சிறந்த பழம்பதி திருப்பெண்ணாகடம் என்பது. அவ்வூரில் வணிகர் குலத்தில் அவதரித்தவர் கலிக்கம்ப நாயனார். அவர் சிவனடிப்பற்றாகிய அன்புடனே வளர்ந்து அப்பதியில் தூங்கனை மாடத் திருக்கோயில் எழுந்தருளிய சிவக்கொழுந்து நாதருடைய திருத்தொண்டிலேயே பற்றாகப் பற்றிப் பணிசெய்து வந்தனர். அவர் வேறு ஒரு பற்றுமில்லாதவர். சிவன் அடியார்களுக்கு விதிப்படி இனிய திருவமுதினை ஊட்டி வேண்டுவனவற்றை இன்பம் பொருந்த அளித்து வந்தார்.

ஒருநாள் முன்போலத் திருவமுது உண்ண வந்த அடியார்களின் திருவடிகளை மனைவியார் நீர் வார்க்கத் தாம் விளக்கிக் ரொண்டிருந்தார். அப்பொழுது முன்னர் தம் ஏவலாளராய் இருந்து ஏவலை வெறுத்து சென்ற ஒருவர், சிவனடியாரது திருவேடத்துடன் வந்தார். அவரது திருவடியினை விளக்குவதற்கு நாயனார் அவரது அடியினைப் பிடித்தார். அப்போது மனைவியார், ''இவர் முன்பு ஏவல் செய்யாது அகன்றவர் போலும்'' என்று தயங்கியதால் நீர்வார்க்க முட்டுப்பாடு நிகழ்ந்தது. நாயனார் மனைவியாரைப் பார்த்தார்; அவரது கருத்தை அறிந்தார்; நீர்க்கரகத்தை (தண்ணிச் செம்பு) வாங்கிக்கொண்டு அம்மனைவியாரது கையை வாளினால்

வெட்டினார்; அடியார் திருவடியைத் தாமே விளக்கி அமுதூட்டுவதற்கு வேண்டிய ஏனைய செயல்களை எல்லாம் தாமே செய்து சலனமில்லாத சிந்தையுடன் அவர்களுக்குத் திருவமுதூட்டினார். இவ்வாறு பல நாள் சிவதொண்டாற்றித் திருவடிநீழலை அடைந்தார்.

## 4. அமர்நீதி நாயனார்




அமர்நீதி நாயனார் சைவ சமயத்தவர்களால் பெரிதும் மதிக்கப்படும் அறுபத்து மூன்று நாயன்மார்களில் ஒருவர் ஆவார். அமர்நீதியார் சோழநாட்டிலே பழையாறை என்னும் பழமையான (தொன்மையான) பகுதியிலே பிறந்தார். 7ஆம் நூற்றாண்டுக்கும் முற்பட்ட காலத்தவர். கோவணக் கள்வராக வந்த சிவபெருமானின் முன்பு துலைத்தட்டில் (தராசில்) தன் மனைவி, மகனுடன் ஏறித் தன்னையே அவருக்கு அர்ப்பணித்து, அத்தட்டே விமானமாகச் செல்ல, சிவபதம் பெற்ற பெருமைக்குரியவர் இவர்.

வணிகத்தால் பெரும் பொருள் தேடிச் செல்வந்தராய் விளங்கிய இவர் சிவனடியார்க்குப் பணிசெய்வதையே தனது நாளாந்த தொண்டாகக் கொண்டிருந்தார். சிவனடியார்க்கு திருவமுது (உணவு), ஆடை, கீழ்கோவணம் அளித்தல் ஆகிய திருத்தொண்டுகளைச் செய்து வந்தார். சிவனடியார்களுக்குத் திருவமுது கொடுப்பதற்காகத் திருநல்லூரில் மடம் கட்டினார். திருவிழாக் காலங்களில் தம் சுற்றத்தவரோடு தங்கியிருந்து அடியார்களுக்கு திருவமுது, உடை, கோவணம் என்பன அளித்து மகிழ்ந்தார்.

அன்பர் பணி செய்யும் அமர்நீதியாருக்குச் சிவபெருமான் அருள்புரியத் திருவுளங்கொண்டார். அவர் ஒரு நாள் அந்தணர் குலத்து பிரம்மச்சாரியாக கோலங்கொண்டார். கையில் இருகோவணம் முடிந்த ஒரு தண்டுடன் கோவண ஆடையுடன் திருநல்லூரில் உள்ள அமர்நீதியார் மடத்தை அடைந்தார். அவரைக் கண்டு அமர்நீதியார் மிக முகமலர்ச்சியோடு வரவேற்று உபசரித்தார். அமர்நீதியார் அவரை உணவுண்ண அழைத்தார். பிரம்மச்சாரியார் அவ்வேண்டுகோளிற்கிசைந்து காவிரியில் நீராடச் சென்றார். செல்லும் பொழுது மழை வரினும் வரும் எனக் கூறித் தமது தண்டில் கட்டி இருந்த கோவணம் ஒன்றை அவிழ்த்து அமர்நீதியாரிடம் கொடுத்து அதனைப் பக்குவமாக வைத்திருக்கும்படி கூறினார். அமர்நீதியார் அதனைத் தனியாக ஓர் இடத்தில் சேமித்து வைத்தார்.

சிவனடியார் கோவணத்தை மறையும்படி செய்து மழையில் நனைந்தவராய் வந்தார். வைத்த கோவணத்தை கொண்டு வருமாறு கூறினார். கோவணம் கொண்டுவரச் சென்ற தொண்டர் வைத்த இடத்தில் காணாது திகைத்தார். பிற இடங்களில் தேடிப்பார்த்தும் கிடைக்கவில்லை. பின்னர் பிறிதொரு கோவணத்தை எடுத்துக்கொண்டு பிரமச்சாரியிடம் வந்தார். அடிகளே! தாங்கள் தந்த கோவணத்தை வைத்த இடத்தில் காணவில்லை. அது மறைந்ததோ பெரும் மாயமாக உள்ளது. இது வேறு ஒரு நல்ல கோவணம்; இது ஆடையிற் கிழிக்கப்பட்டதல்ல. கோவணமாகவே நெய்யப்பட்டது. நனைந்த கோவணத்தை களைந்து (அகற்றி) இதனை அணிந்து அடியேனது குற்றத்தைப் பொறுத்து அருளுங்கள் என வேண்டினார்.

இதனைக் கேட்ட சிவனடியார் சீறிச் சினந்தார். அமர்நீதியாரே! நாம் உம்மிடம் தந்த கோவணத்திற்கு ஒத்தது தண்டில் உள்ள இந்தக் கோவணம். இந்தக் கோவணத்திற்கு எடையான

6

கோவணத்தைக் கொடுப்பீராக என்று கூறினார். அதனை ஏற்றுக்கொண்ட அமர்நீதியார், தராசின் ஒரு தட்டில் அடியார் தந்த கோவணத்தை வைத்து, அதற்கு ஈடாகத் தம்மில் உள்ள நெய்த கோவணத்தை மற்றொரு தட்டில் வைத்தபொழுது அது நிறை போதாமையால் மேலெழுந்தது. அது கண்ட அமர்நீதியார், தாம் அடியார்களுக்குக் கொடுத்தற் பொருட்டு வைத்திருந்த கோவணங்கள் அனைத்தையும் ஒவ்வொன்றாக இட்டார். அப்பொழுதும் அன்பரது தட்டு மேற்பட அடியாரது கோவணத்தட்டு நிறையால் கீழே தாழ்ந்தது. அந்நிலையில் அமர்நீதியார், தம்மிட்ம உள்ள பொன், வெள்ளி, நவமணித் திரள் முதலிய அரும்பொருள்களையும், பின்பு தம் மனைவி, புதல்வன் ஆகியோரையும் தட்டில் அமர்த்தினார். அப்பொழுது கூட தட்டு நேர் நிற்கவில்லை. நாயனார் 'நாங்கள் இழைத்த அன்பில் இறை திருநீற்று மெய்யடிமை பிழைத்திலோம் என்றால் இத்தரசின் தட்ட சமமாக நிற்பதாகும்' என்று திருவைந்தெழுத்து ஓதித் தாமும் அதன் மேல் ஏறி அமர்ந்தார். அந்நிலையில் அத்தாராசுத் தட்டுக்கள் இரண்டும் சமமாய் நேர் நின்றன.

அடியாராக வந்த இறைவர், திருநல்லூரிற் பொருந்திய அம்மையப்பராகிய திருக்கோலத்தை அமர்நீதியாருக்குக் காட்டியருளினார். அமர்நீதியாரும் மனைவியாரும் மைந்தரும் சிவலோக வாழ்வினைப் பெற்று இன்புற்றார்கள்.

அல்லிமென் முல்லையந்தார் அமர்நீதிக்கடியேன் - திருத்தொண்டத்தொகை

## 5. இயற்பகை நாயனார்




இயற்பகையார் 63 நாயன்மார்களுள் ஒருவர் ஆவார். இவரை ''இல்லையே எனாத இயற்பகைக்கு அடியேன்'' என்று திருத்தொண்டத் தொகை வர்ணிக்கிறது. இவர் சோழநாட்டிலே காவேரிசங்கமம் என்னும் புனித தீர்த்தத்தினால் புகழ்பெற்ற காவிரிப்பூம்பட்டினத்திலே பிறந்தார். வணிக குலத்தினரான அவர் தம் வணிகத் திறத்தால் பெரும் செல்வராக விளங்கினார். இல்லறத்தின் பெரும்பேறு இறையடியார் தம் குறைமுடிப்பதென்பது அவர் கொள்கை. ஆதலால் சிவனடியார் யாரெனினும் அவர் வேண்டுவதை இல்லையெனாது கொடுக்கும் இயல்பினராய் வாழ்ந்து வந்தார். அவ்வாறு வாழ்ந்து வரும் நாளில் அவர் பெருமையை உலகோர்க்கு உணர்த்தச் சிவபெருமான் திருவுளம் பற்றினார்.

சிவபெருமான் தூய திருநீறு பொன்மேனியில் அணிந்து, தூர்த்த வேடமுடைய வேதியர் கோலத்தினராய், இயற்பகையாரது வீட்டினை அடைந்தார். நாயனார் அவ்வடியாரை உளம் நிறைந்த அன்புடன் எதிர்கொண்டு, முனிவர் இங்கு எழுந்தருளியது என் பெருந்தவப் பயனென்று வழிபட்டு வரவேற்றார். வேதியர் அன்பரை நோக்கி சிவனடியார்கள் வேண்டியனவற்றை எல்லாம் ஒன்றும் மறுக்காது உம்மிடத்திலே ஒரு பொருளை விரும்பி இங்கு வந்தேன், அதனை நீர் தருவதற்கு இணங்குவீராயின் வெளியிட்டுச் சொல்வேன் எனக் கூறினார். அது கேட்ட இயற்பகையார், என்னிடமிருக்கும் எப்பொருளாயினும் அது எம்பெருமானாகிய சிவனடியாரது உடைமை. இதிற் சிறிதும் சந்தேகமில்லை. நீர் விரும்பியதனை அருளிச் செய்வீராக என்றார். அதுகேட்ட வேதியர், 'உன் மனைவியை விரும்பி வந்தேன் எனச் சொன்னார்'.

நாயனார் முன்னைவிட மகிழ்ச்சியடைந்து 'எம்பிரான் என்னிடம் உள்ள பொருளையே வேண்டியது எனது புண்ணியப் பயனாகும்' எனக் கூறி, விரைந்து வீட்டினுள் புகுந்து கற்பிற்சிறந்த

மனைவியாரை நோக்கி, 'பெண்ணே! இன்று உன்னை இம்மெய்த்தவர்க்கு நான் கொடுத்து விட்டேன்' என்றார். அதுகேட்ட மனைவியார், மனங்கலங்கிப் பின் தெளிந்து தன் கணவரை நோக்கி ''என் உயிர்த் தலைவரே! என் கணவராகிய நீர் எமக்குப் பணித்தருளிய கட்டளை இதுவாயின் நீர் கூறியதொன்றை நான் செய்வதன்றி எனக்கு வேறுரிமை உளதோ? என்று சொல்லிப் தன் பெருங்கணவராகிய இயற்பகையை வணங்கினார். இயற்பகையாரும் இறைவனடியார்க்கெனத் தம்மால் அளிக்கப் பெற்றமை கருதி அவ்வம்மையாரை வணங்கினார். திருவிலும் பெரியாளாகிய அவ்வம்மையார், அங்கு எழுந்தருளிய மறைமுனிவர் சேவடிகளைப் பணிந்து திகைத்து நின்றார்.

மறை முனிவர் விரும்பிய வண்ணம், மனைவியாரைக் கொடுத்து மகிழும் மாதவராகிய இயற்பகையார், அம்மையவரை நோக்கி, இன்னும் யான் செய்தற்குரிய பணி யாது? என இறைஞ்சி நின்றார். வேதியராகிய வந்த இறைவன், 'இந்நங்கையை யான் தனியே அழைத்துச் செல்லுவதற்கு உனது அன்புடைய சுற்றத்தாரையும், இவ்வூரையும் கடத்தற்கு நீ எனக்குத் துணையாக வருதல் வேண்டும்' என்றார். அதுகேட்ட இயற்பகையார் யானே முன்னறிந்து செய்தற்குரிய இப்பணியை விரைந்து செய்யாது எம்பெருமானாகிய இவர் வெளியிட்டுச் சொல்லுமளவிற்கு காலம் தாழ்த்து நின்றது பிழையாகும் என்று எண்ணி, வேறிடத்துக்குச் சென்று போர்க்கோலம் பூண்டு வாளும் கேடமும் தாங்கி வந்தார். வேதியரை வணங்கி மாதினையும் அவரையும் முன்னே போகச் செய்து அவர்க்குத் துணையாக பின்னே தொடர்ந்து சென்றார்.

இச்செய்தியை அறிந்த மனைவியாராது சுற்றத்தாரும், வள்ளலாரது சுற்றத்தாரும் இயற்பகைப் பித்தனானால் அவன் மனைவியை மற்றொருவன் கொண்டுப் போவதா?'' என வெகுண்டனர்.'' தமக்கு நேர்ந்த பழியைப் போக்குவதற்கு போர்க்கருவிகளைத் தாங்கியவராய் வந்து மறையவரை வளைத்துக் கொண்டனர். 'தூர்தனே போகாதே நற்குலத்திற் பிறந்த இப்பெண்ணை இங்கேயே விட்டுவிட்டு எமது பழிபோக இவ்விடத்தை விட்டுப்போ' எனக் கூறினார். மறைமுனிவர் அதுகண்டு அஞ்சியவரைப் போன்று மாதினைப் பார்த்தார். மாதரும் 'இறைவனே அஞ்ச வேண்டாம்; இயற்பகை வெல்லும்' என்றார். வீரக்கழல் அணிந்த இயற்பகையார், அடியேனேன் அவரையெல்லாம் வென்று வீழ்த்துவேன் என வேதியருக்கு தேறுதல் கூறி, போருக்கு வந்த தம் சுற்றத்தாரை நோக்கி, 'ஒருவரும் எதிர் நில்லாமே ஓடிப்பிழையும். அன்றேல் என் வாட்படைக்கு இலக்காகித் துணிபட்டுத் துடிப்பீர்' என்று அறிவுறுத்தினார். அதுகேட்ட சுற்றத்தவர், 'ஏடா நீ என்ன காரியத்தைச் செய்துவிட்டு இவ்வாறு பேசுகிறாய்'. உன் செயலால் இந்நாடு அடையும் பழியையும், இது குறித்து நம் பகைவரானவர் கொள்ளும் இகழ்ச்சிச் சிரிப்பினையும் எண்ணி நாணாது உன் மனைவியை வேதியனுக்கு கொடுத்து வீரம் பேசுவதோ! நாங்கள் போரிட்டு ஒருசேர இறந்தொழிவதன்றி உன் மனைவியை மற்றையவனுக்குக் கொடுக்க ஒருபொழுதும் சம்மதிக்கோம்' என்று வெகுண்டு எதிர்த்தனர். அது கண்ட இயற்பகையார் 'உங்கள் உயிரை விண்ணுலகுக்கு ஏற்றி இந்த நற்றவரை தடையின்றிப் போகவிடுவேன்' என்று கூறி, உறவினரை எதிர்த்துப் போரிடுவதற்கு முந்தினார். உறவினர்கள் மறையவரை தாக்குவதற்கு முற்பட்டனர். அதுகண்டு வெகுண்ட இயற்பகையார், சுற்றத்தார் மேல் பாய்ந்து இடசாரி வலசாரியாக மாறிமாறிச் சுற்றி வந்து அவர்களுடைய கால்களையும், தலைகளையும் துணித்து வீழ்த்தினார். பலராய் வந்தவர் மீதும் தனியாய் அகப்பட்டவர் மீதும் வேகமாய்ப் பாய்ந்து வெட்டி வீழ்த்தினார். பயந்து ஓடியவர் போக எதிர்த்தவரெல்லாம் ஒழிந்தே போயினர். எதிர்ப்பவர் ஒருவருமின்றி உலாவித் திரிந்த இயற்பகையார், வேதியரை நோக்கி, 'அடிகள் நீர் அஞ்சாவண்ணம் இக்காட்டினைக் கடக்கும் வரை உடன் வருகின்றேன்' என்று கூறித் துணை சென்றார். திருச்சாய்க்காட்டை சேர்ந்த பொழுதில், மறை

முனிவர் 'நீர் வீட்டிற்குத் திரும்பிச் செல்லலாம்.' என்று கூறினார். இயற்பகையாரும் அவரை வணங்கி ஊருக்குத் திரும்பினார்.

மனைவியாரை உவகையுடன் அளித்து திரும்பியும் பாராது செல்லும் நாயனாரது அன்பின் திறத்தை எண்ணி இறைவன் மகிழ்ந்தார். மெய்ம்மையுள்ளமுடைய நாயனாரை மீளவும் அழைக்கத் தொடங்கி ''இயற்பகை முனிவாஓலம்' ஈண்டு நீ வருவாய் ஓலம்; அயர்பிலாதானே ஓலம்; செயற்கருஞ்செய்கை செய்த தீரனே ஓலம் ஓலம்'' என அழைத்தருளினார். அழைத்த பேரோசையினைக் கேட்ட இயற்பகையார், 'அடியேன் வந்தேன்; வந்தேன்; தீங்கு செய்தார் உளராயின் அவர்கள் என் கைவாளுக்கு இலக்காகின்றார்'. என்று கூறி விரைந்து வந்தார். மாதொருபாகனாகிய இறைவனும் தனது தொன்மைக் கோலத்தைக் கொள்ளுவதற்கு அவ்விடத்தைவிட்டு மறைந்தருளினார். சென்ற இயற்பகையார் முனிவரைக் காணாது அவருடன் சென்ற மாதினைக் கண்டார். வான்வெளியிலே இறைவன் மாதொருபாகராக எருதின்மேல் தோன்றியருளும் தெய்வக் கோலத்தைக் கண்டார். நிலத்திலே பலமுறை தொழுதார்; எல்லையில்லாத இன்ப வெள்ளம் அருளிய இறைவன் உளங்கசிந்து போற்றி வாழ்த்தினார். அப்பொழுது அம்மையப்பராகிய இறைவர் 'பழுதிலாததாய் உன் அன்பின் திறங்கண்டு மகிழ்ந்தோம். உன் மனைவியுடன் நம்மில் வருக' எனத் திருவருள் புரிந்து மறைந்தருளினார். உலகியற்கை மீறிச் செயற்கருஞ் செய்கை செய்த திருத்தொண்டராகிய இயற்பகையாரும், தெய்வக் கற்பினையுடைய அவர் தம் மனைவியரும் ஞானமாமுனிவர் போற்ற நலமிகு சிவலோகத்தில் இறைவனைக் கும்பிட்டு உடனுறையும் பெருவாழ்வு பெற்றனர். அவர் தம் சுற்றத்தாராய் அவருடன் போர் செய்து உயிர் துறந்தவர்களும் வானுலகமடைந்து இன்புற்றனர்.








தொகுப்பு :
**பிரேமா நாராயணன்**

இட்டத்தட்ட *100* ஆண்டுகளுக்கு முன், *19-1-1927*, அட்சய ஆண்டு தை மாதம், பர்மாவில் இரங்கூனில் நடைபெற்ற தனவணிக வாலிபர் முதலாவது மகாநாட்டில் வெளியிடப்பட்ட நூலின் மின்னணு பிரதியினை அண்மையில் வாசிக்க நேர்ந்தது. அதன் முகவுரையில், அம் மகாநாட்டுக்குத் தலைமை வகித்த, காந்தி நகர் திரு பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியார் என்பவர் அக்கால வாலிபர்களுக்கு வழங்கியிருக்கும் சில அற(றி)வுரைகளை வாசித்தபோது *96* ஆண்டுகள் கடந்தும், இன்றைய நம் இளைய சமுதாயத்துக்கு அவற்றில் பெரும்பாலான விஷயங்கள் பொருத்தமாக இருப்பது போலத் தோன்றியது. படிக்கப் படிக்க எனக்குள் பெருகிய வியப்பு வார்த்தைகளில் விவரிக்க முடியாதது. நான் வாசித்து வியந்த அந்தச் சங்கதிகளை இங்கே உங்களுடன் பகிர்ந்து கொள்கிறேன். அந்தக் காலத் தமிழ் சொல்லாட்சியை மாற்றாமல், அதன் இனிமை கருதி அப்படியே கொடுக்கப்பட்டிருக்கிறது.

**தோற்றுவாய்**

அன்புள்ள சகோதரர்களே.. இளைஞர் முன்னேற்றத்தில் எனக்கு விசேஷ பிரியம் உண்டு. அப் பேரெண்ணமே என்னை இங்கே கொணர்ந்திருக்கிறது. நமது நாட்டின் வருங்காலத்து மக்கள் இளைஞர்களேயாதலால், அன்னார் முன்னேற்றமே நாட்டின் முன்னேற்றமாகும். எந்த நாடும் இளைஞர்களாலேதான் முன்னேற்றமடைந்திருக்கிறது என்பது கண்கூடு. பிற்காலத்தில் பல துறைகளிலும் பொறுப்புள்ள பெரியோர்களாக வரவேண்டியவர்களும் இவ்வாலிபரிடையே தான் இருக்கின்றனர். எனவே இளைஞர்களாகிய நீங்கள் உங்கள் முன்னேற்றத்தின் பொருட்டுச் சில நல்விஷயங்களை யோசிக்க இங்கு கூடியிருப்பது விசேஷ நன்மையேயாகும்.

**நல்லிளைஞர்**

பொதுவாக நல்லிளைஞர்கள் எவ்வாறு இருக்க வேண்டும் என்பது பற்றி முதற்கண் சில விஷயங்கள்கூற விரும்புகிறேன். ஒவ்வொருவரும் உளவலிமையும் உடலுறுதியும் பெற்று விளங்குதல் வேண்டும். நல்லறிவும் நல்லொழுக்கமும் உடையோராயிருத்தல் வேண்டும். பரோபகார சிந்தையும் பொறுமையும் அடக்கமும் இன்றியமையாதனவாகும். தன்மதிப்பு, தன்னம்பிக்கை, தன்னறிவு, தைர்யம் ஆகியவைகளை மேற்கொள்ளும் இளைஞர்களே காரியசித்தி பெறக்கூடியவர்களாவார்கள்.

## தற்கால இளைஞர் நிலை

நமது நாட்டு இளைஞர்களின் தற்கால நிலையை நோக்கும்பொழுது உள்ளம் திருப்தியடையக் கூடியதாகவில்லை. இளம்பருவத்திலே உடல் தளர்ந்து சோர்வுற்று, ஊக்கங்குன்றி அநேகர் வாலிபக் கிழவர்களாக இலங்குகின்றனர். உற்சாகமின்றி வாடிக்கிடக்கும் முகங்களையே நாம் பல்லோரிடம் காண்கின்றோம். கம்பீரமாக நடப்பதற்கும் வலிமையற்றார் பலருளர்.

ஒரு தொழிலுமின்றி வீட்டிலேயே சோம்பிக்கிடக்கும் வாலிபரும் உளர். நெஞ்சில் உரமும் நேர்மைத் திறமுமின்றிப் பெரும் பயங்கொள்ளிகளாக வாழ்வோர் இளைஞராவரோ? நமது இளைஞர்கள் நல்எண்ணங்கள் உடையோர் பலரைப் பார்த்தல் அரிதாகவே யிருக்கின்றது. இனி, ஒழுக்கங் கெட்டுத் தீய வழிகளில் சென்று உழலும் வாலிபர்களை நினைக்கும்பொழுது நெஞ்சம் துடிக்கின்றது. இவ்வாறாக இளைஞர் வாழ்வு பலவிதமாய்ச் சிதைவுற்றிருக்கின்றது. இவைகளைப்பற்றி அதிகமாகக் கூறிக்கொண்டு செல்ல நான் இப்பொழுது விரும்பவில்லை. எவ்வெவ் வழிகளில் சீர்திருத்தம் பெற்று இளைஞர்கள் முன்னேற்றம் அடைதல்வேண்டும் என்பதைப்பற்றி இனி நோக்குவோம்.

## அறிவு வளர்ச்சி

உலகில் சிறப்பாக வாழ்வதற்கு உயர்தரப் படிப்பு மிக இன்றியமையாததாகும். தற்கால உலகத்திற்கு பொது அறிவும் பலவகையான தேர்ச்சிகளும் தேவையாக இருக்கின்றன. தம் பிள்ளைகள் தமிழும் ஆங்கிலமும் நன்றாகக் கற்கவேண்டும் என்று பெற்றோர்கள் படிக்க வைக்கின்றனர். வணிகர்களாகிய நமக்கு இந்நாளில் ஆங்கில பாஷா ஞானமும் மிக அத்யாவசியமேயாகும். நமது நாட்டில் எல்லா இடங்களிலும் நல்ல பள்ளிக்கூடங்களை ஏற்படுத்த வேண்டுவதையும் அவைகளுக்குப் பிள்ளைகளை யனுப்பவேண்டுவதையும் நாம் சிரத்தையுடன் கவனிக்கவேண்டும். இந் நாட்டில் இருக்கும் சிறுவர்களுக்கு இங்கே நமக்கு ஏற்ற முறையில் பள்ளிக்கூடங்கள் அமைத்துப் பயிலும்படி செய்தல் வேண்டும்.

## உடல் வளம்

உலகில் நல்வாழ்வு வாழவேண்டுவதற்கு உடல் அவசியம் வளமுற்றிருத்தல் வேண்டும். உள வலிமைக்கு உடல் வளம் இன்றியமையாத சாதனமாகும். சரீரம் தளர்வுற்று நோய் வாய்ப்படுமானால் மனவலிமை குன்றிவிடும். மனோ வியாகூலம் ஏற்படுமானால் உடல் சோர்வுற்று ஒரு செயலும் செய்யமுடியாத நிலையில் வந்துவிடும். ஆனால் உடலை வளம்பெறச் செய்து, திடமான முறையில் வைத்திருப்போமானால் மனோ உற்சாகமாயிருப்பதற்கும் உதவியாயிருக்கும். தினம் மூன்று நான்கு முறை ஆகாரங்களை உட்கொண்டு ஒரு வேலையுஞ் செய்யாது உட்கார்ந்துகொண்டிருந்தால், உடல்வளத்தின் பெருமை எங்ஙனம் விளங்கும்! சிறுபோது முதலே ஒரு வேலையுஞ் செய்யாது உட்கார்ந்துகொண்டிருப்பது கௌரவமென எண்ணப்படுவது பெரியதொரு வியப்பேயாகும். இவ்வாறு செய்தல் நமக்கு நாமே கேடு செய்துகொள்ளுவதேயாகும். கால்நடையாக நடந்து செல்லுவது பெரும் கேவலம் என்று கருதப்படுகிறது. உடல் நலன் கருதி இவை போன்றவைகளைச் செய்தலில் இழுக்கு ஒன்றுமில்லை. ஆகாரங்களை மிகுதியாகவும் ஆராய்ந்தறிந்து பாராமலும் உட்கொண்டுவிடுவதால் பல தீமைகள் ஏற்படுகின்றன. சுகாதார முறைகளைச் சரிவர அநுசரியாததினாலேயே பலர் பல நோய்களுக்கு

ஆளாகின்றனர். உடம்பிலுள்ள அசுத்தங்கள் நீங்குவதற்கும், இரத்த ஓட்டம் சரியாயிருப்பதற்கும் ஒவ்வொரு நாளும் அவசியம் தேகப்பயிற்சி செய்ய வேண்டும். உழைப்பில்லாத உடல் சீக்கிரம் கெட்டுவிடும். தேகப்பயிற்சி செய்வோருடைய உடலே அழகும் ஒளியும் உறுதியும் சுறுசுறுப்பும் உள்ளதாயிலங்கும். இதை அநேகர் உணருகின்றார்களில்லை. காலையில் எழுந்திருந்து சிறிது தூரம் நடத்தல் வேண்டும். உடல் வளம் பெற்று வலிமையோடு இருந்தால், ஒன்றிற்கும் அஞ்சாது கம்பீரமாக உலகில் வீர வாழ்வு வாழலாம். தேகாப்பியாசம் செய்யுங் காலத்து மன ஒருமைப்பாட்டையும் நாம் பழகிக்கொள்ளுதல் வேண்டும்.

### இன்ப வாழ்வு

உலகில் நீண்டநாள் இன்ப வாழ்வு வாழவேண்டுமென்பதே எல்லோருடைய விருப்பமுமாகும். ஆனால், எதைச் செய்தால் இன்ப நிலை பெறலாம் என்பதைத்தான் நன்கு ஆராய்ந்து கடைப்பிடித்தல் வேண்டும். இளைஞர்கள் தமது இளமைப் பருவத்தைப் படிப்பிலும், உடல் வளர்த்தலிலும் பயன்படுத்துதல் வேண்டும். கெட்ட வழிகளில் மனத்தைச் செலுத்திப் பலஹீனப்படுத்திக்கொள்ளக்கூடாது. குறைந்த பக்ஷம் இருபது ஆண்டுகள் வரையிலாவது பிரமசரிய விரதம் காத்தல் வேண்டும். நீண்ட ஆயுளையும் நோயற்ற வாழ்வையும், ஆண் தன்மையையும், மன உறுதியையும் தரவல்லது பிரமசரியமே. இளைஞர்கள் ஒரு அளவு கல்வி கற்ற பின்னர், தத்தமக்குச் சரியான பெண்ணை மணந்துகொள்ளுதல் வேண்டும். மணமகனும் மணமகளும் பரஸ்பரம் பிரியத்தையும் குணத்தையும் அறிந்து விவாகம் செய்துகொள்ளுவது குடும்ப வாழ்க்கையை இன்பப்படுத்துவதாகும். பெற்றோரே மணமக்களைத் தேடும் பொறுப்பை மேற்கொண்டாலும் இருவர் விருப்பத்தையும் அறியாமல் பணத்திற்கும் பிறவற்றிற்கும் ஆசைப்பட்டுப் பொருத்தமற்றவர்களைச் சேர்த்து வைத்தலில் வாழ்நாள் முழுதும் துன்பமாய் முடிதலை நோக்குதல் வேண்டும். ஆராயாமல் செய்துவிட்டு விதி வினை என்று நோவதும் பழியை இறைவன் பால் சுமத்துவதும் முறையன்று.

### காதல் வாழ்வு

ஒருமனப்பட்ட நாயகனும் நாயகியும் சேர்ந்து வாழ்வதே காதல் வாழ்வாகும். காதல் வாழ்வு வாழ்பவர்க்கு என்றும் இன்பமே பெருகும். நாயகனும் நாயகியும் சமமதிப்பு உடையவர்களாக வாழ்தல் வேண்டும். ஒருவரை யொருவர் தாழ்வாக நினைத்தல் கூடாது. பெண்மக்கள் தாழ்ந்தவர் என்று கருதுவது சிறிதும் சரியன்று. பெண்மக்கள் கல்வியறிவில்லாதிருப்பினும், அவர்களுக்கு விஷயங்களை எடுத்து விளக்கிக்காட்டி, இனிமையாகப் போதித்து நன்னிலைப்படுத்த முற்பட வேண்டும். பெண்மக்களை அடிமைகளைப்போல் நடத்தவேண்டும் என நாம் நினைக்குமளவும் நமக்கு இன்பவாழ்வுகிட்டாது. அவர்களும் உரிமைவாழ்வு வாழத் தகுதியுடை யவர்கள் என்ற எண்ணம் நம்மிடை வேரூன்ற வேண்டும்.

பெண்கள் உதவியின்றி இல்வாழ்வில் ஒருகாரியமும் செய்ய வியலாதாதலால், பெண்களை மேன்மைப்படுத்துவது நமது வாழ்வை மேன்மைப்படுத்துவதேயாகும். அந்நியநாடு போந்து பல வேறு சாதியார்களின் காதல் வாழ்வைக்கண்டும், நம்மவர் அவ் ஒன்றிய வாழ்வைப் பெற மனங்கொள்ளாராயின் என்னென்றியம்புவது?

## உடனுறைதல்

நாயகனும் நாயகியும் எப்போதும் உடனுறைந்து வாழ்வதே காதல்வாழ்விற்கு இலக்ஷணமாகும். ஒருவரையொருவர் பல ஆண்டுகள் பிரிந்து மனவருத்தத்துடன் வேற்று நாடுகளில் வாழ்வது மிக வருத்தமான விஷயமாகும். மனைவியை விடுத்துத் தனித்து வாழ்தல் என்பது என்றும் சரியல்ல. பிரிவால் இருதிறத்தாரும் பெரிதும் துன்புறுதல் கண்கூடு. பிரிவால் நல்லவர் சிலர்பாலும் ஒழுக்கக்கேடு நேர்வதை நாம் அறிகின்றோம். இருவரும் உடனுறைவாராயின் பிரிவால் நிகழும் தீயொழுக்கம் சிறிதும் இடம்பெறாது. காதல் மிகுந்த இன்ப வாழ்வு வாழ்வோர்க்கே நல்ல குழந்தைகள் பிறக்கும்.

## தொழில்

பல வியாபாரத் துறைகளிலும் நாம் வெற்றிபெற வேண்டும். தனித்தனி மனிதரும் எத்தனையோ லக்ஷத்திற்குத் தொழில் செய்யும் ஆற்றலுள்ளவர்கள் நம்மவரிற் பல்லோர் இருக்கின்றார்கள். ஏராளமான பணத்தைவைத்துக்கொண்டு, எவ்வகையில் கொடுத்துவைப்பது என்று யோசித்துக்கொண்டிருப்பவர் பலர். விடாமுயற்சியும் சிரத்தையும் இருக்குமானால், எத்தொழிலையும் நாம் எளிதாகச்செய்து லாபம் பெறுதல்கூடும். நாம் தொழில் செய்யும் இடங்களில் குறித்தநேரத்தில் தொழில்செய்துவிட்டு, ஓய்வுநேரம் ஓரளவு எடுத்துக்கொள்வது உடலுக்கும் உளத்திற்கும் அமைதிதருவதாகும். இரவு ஒருமணிவரை உறங்காது வேலைசெய்வது சிரமந்தருவதேயாகும்.

## ஒற்றுமை

எந்த விஷயத்திற்கும் நாம் ஒற்றுமையாக வாழ வேண்டும். ஒற்றுமையாயிருத்தல் வேண்டும் என்ற எண்ணம் எல்லோர் மனத்திலும் இருந்தாலும் செயலில் வரும்பொழுது எவ்விதமாகவோ மாறுபட்டுக் காரியஞ்செய்ய முந்திவிடுகிறோம். ஒற்றுமையைப் பற்றிப் பேசுவதனால் பயினில்லை. தத்தம் பொறுப்பை நினைத்துக் காரியங்களில் கண்ணாக இருந்து, வீண் விவாதங்கள் பேசாமல் நடக்க முயலுதல் வேண்டும். ஒருவர்க்கொருவர் அபிப்பிராயபேதம் இருப்பினும் மாறுபடுவோர்க்கு மதிப்புக்கொடுத்து விஷயங்களை விளக்கிக்காட்டி ஐக்கியமாய் நடக்க முயலவேண்டுமேயன்றி, பேதம் பாராட்டுதல் கூடாது. வேறு விஷயங்களில் உண்டான மனக்கசப்பைப் பிறிதொரு விஷயத்தில் புகுத்திக் கட்சிப்பிரிவினையாக்கிக் காரியத்தைக் கெடுத்துவிடுவது சிறிதும் விரும்பத்தக்க செயலன்று. தனக்கு விரோதியாயிருப்பினும் அன்னார் சொல்லும் விஷயம் நன்மைபயப்பதாயிருக்குமானால், ஆதரித்து உதவியும் செய்யத் தயங்கவே கூடாது. இவ்வகை ஐக்கிய உணர்ச்சி கொண்டே முன்னேறிப் பெருமை பெறுகிறார்கள். இதை மனத்தில் ஆழமாகப் பதிய வைத்து, அசையாத திடநிலை கொண்டு காரியம் நிகழ்த்துவோமாக!

## ஜாதி நிலை

நமது சமூகம் பலவகையாலும் சிறப்புப் பொருந்தியதாகும். வரையாது கொடுக்கும் வள்ளன்மையோர் பலர் நம்மவரில் இருக்கின்றனர். நல்ல காரியங்கள் பலவற்றை நம்மவர்கள் செய்கின்றனர். ஆனால் நமது சமூக வாழ்வைச் செம்மை செய்து கொள்ளாதிருப்பது பெருங்குறையே யாகும். சாதீயப் பொதுவாழ்வில் பிறருக்கு ஏற்படும் கஷ்ட நஷ்டங்களை

ஒவ்வொருவரும் தம்முடையதாகப் பாவித்துச் சீர்திருத்தத்தை நாடுவதே சிறப்பாகும். நமது இளைஞர்கள் கலியாணஞ் செய்துகொள்ளுதற்குப் படும் பாட்டைச் சொல்லமுடியுமோ? இவ்வுலகில் ஒவ்வொருவரும் பெறவேண்டிய இல்வாழ்வு இவ்வளவு சிரமசாத்தியமாவிருக்குமானால் நமது சமூகம் எப்படித் தழைத்தோங்கும்? விசேஷ காலங்களில் நடக்கும் வீண் செலவு வரவர அபரிமிதமாய் ட்டது. ஸ்ரீதனம், சீர் முறை, பின் முறை ஆகியவைகளும் வளர்ந்துகொண்டே செல்லுகின்றன. இவ்வகைக் கஷ்டங்களெல்லாம் ஒழிய நாம் சிரத்தை எடுத்துக்கொள்ள வேண்டாமா? இவைகளெல்லாம் யாருக்கோவென்று இருக்காமல், நிலையுணர்ந்து சீர்திருத்தத்தை நாடுதலே சிறப்புடையதாகும். வழக்கம் வழக்கம் என்று சொல்லி கஷ்டத்தையே ஏற்காமல், நலம் பயக்கும் என்று தோன்றுகிற விஷயத்தில் அஞ்சாது, தீவிரமாய் முனைந்து நிற்றலே தகுந்த வழியாகும்.

### பெரியோர்ப் பேணல்

அறிவு, ஆற்றல், குணம் ஆகியவற்றால் சிறந்து விளங்குவோரே பெரியோராவர். இளைஞர்கள் பெரியோரது தன்மைகளையுணர்ந்து தாங்களும் உயர்வு பெற முயலுதல் வேண்டும். நம்மால் பெரியோராக முடியுமா என்ற ஐயம் யாருக்கும் வேண்டுவதில்லை. உயர்நிலையடைவதும், தாழ்ந்து சிறுமைப்படுத்தலும் தத்தம் செயலைப்பொறுத்ததேயாகும். பெரிய நிலையை யடைந்திருப்பவர்களனைவரும் திடீரென்று மேன்மையுற்றவர்கள் அல்லர். தம் வாழ்க்கையை நல்லமுறையில் திருத்தியமைத்துப் படிப்படியாக முன்னேறினவர்களேயாவர். காந்தியடிகள் ஒப்புயர்வற்ற பெரியோராய் உலகம் போற்ற இந்நாளில் விளங்குவதன் தத்துவத்தை அறிந்துகொள்ளுதல் வேண்டும். அவர் தற்சரிதம் அவர் எவ்வாறு தன்னைத் திருத்திக்கொண்டார் என்பதை நன்கு விளக்குகிறது. உண்மையைக் கடைப்பிடித்து ஒழுக்க நெறி நின்று, தைரியமாக உயர்ந்த லக்ஷ்யங்களுடன் வாழ்க்கையை நடத்தினால் எவரும் மேன்மையுற்றுவிடலாம் என்று தம் அநுபவ முறையை நன்கு எடுத்துக்கூறுகிறார். இத்தகைய புனித மூர்த்தியின் சொல்வழி செயல் நிகழ்த்துவோமானால், நாம் மேன்மையடையலாம். உலகத்தில் அரைகுறையான சபலத்தனமான வாழ்வு வாழ்தல் கூடாது. மன நிறைவுடன் திருப்திகரமான பூரணவாழ்வே அமையும்படி பழகுதல் வேண்டும்.

### தொண்டு

இளைஞர்கள் அன்பர் பணி செய்தலில் பெரிதும் ஆவலுள்ளவர்களாயிருத்தல் வேண்டும். உயிர்கள் பால் பெரிதும் இரக்கமுடையவர்களா யிலங்குதல் வேண்டும். தொண்டு செய்வதால் ஏற்படும் இன்பம் மிக உயரியதாகும். தேச முன்னேற்றத்தின்பொருட்டு ஆவன செய்தல் ஒவ்வொருவரின் கடமை என்பதை நன்கு உணருதல் வேண்டும். நாம் தேச வேலையில் தலையிடாது ஒதுங்குவது சிறப்புடையதாகமாட்டாது. தேச வேலை பார்ப்பது நம் வேலையல்ல வென்று கருதுவது சரியல்ல. அரசியல் விஷயம் எல்லோருக்கும் பொதுவென்பது யோசிப்பார்க்கு விளங்கும். அதிலும் நம்மவர்கள் ராஜீய விஷயத்தில் சம்பந்தம் வைத்துக் கொள்ளவேண்டியது இன்றியமையாததாகும். ஏனெனில் வியாபார முறையிலும் வேறு பல துறைகளிலும் நாம் கலந்து நிற்கின்றபடியால், அரசியல் தொடர்பை வைத்துக்கொள்ளவேண்டுவது அவசியமாகிறது. தேச மக்களுக்கு நன்மை பயக்கத்தக்க விஷயங்களில் நாம் கலந்துகொள்ளுதல் வேண்டும். எத்தனையோ ஏழை கள் வயிற்றுக்குச் சோறில்லாது தவிப்பது மிகப் பரிதாபகாமானது. இவர்கட்கெல்லாம் எவ்வகையாலும் உதவி செய்ய வேண்டுவது அவசியமல்லவா?

**சகோதரத்துவம்**

நமது நாட்டு மக்களனைவரையும் உயர்வு தாழ்வு கருதி விலக்காமல், அவர்களோடு சகோதரத்துவம் பாராட்டி, நாம் ஐக்கியமாக வாழவேண்டும். பிறப்பிலே உயர்வு தாழ்வு இல்லை என்ற பேரெண்ணத்தை ஆழமாக மனத்தில் வைத்தல் வேண்டும். செய்தொழில் வேற்றுமையால் மனிதனுக்குச் சிறப்பேயன்றிப் பிறப்பால் மட்டும் கௌரவம் உண்டாகாது. தாழ்ந்த செயல் செய்யும் ஒருவன், உயர்ந்த குலம் என்று சொல்லிக்கொண்டாலும் அவன் இழுக்குடையவனே யாவன். சாதிப் பூசலால் நம் நாட்டில் விளைந்து வரும் கேடுகள் பலவாகும். சமரசப் போக்குள்ள நம்மவர் எல்லா மக்களையும் அன்புடன் போற்றவேண்டுவது அவசியமாகும். இளைஞர்கள் சமயப் பூசலில் ஒருகாலும் தலையிடுதலாகாது. பொதுப்பான்மையான உள்ளத்தோடு அன்பு நெறியைப் பின்பற்றுதல் வேண்டும். சமயம் என்பதன் பொருளையுணராத பல்லோர் சமயச் சண்டைகளைக் கிளப்பி நாட்டை அடிமைக் குழிக்குள் அழுத்துகிறார்கள். எத்தனையோ நூறுவிதமான சண்டைகள் நாடோறும் தோன்றிக் கொண்டேயிருக்கின்றன. இவைகள் அறியாமையின் விளைவும் குறுகிய நோக்கமுமன்றிச் சமய சம்பந்தமான எதுவும் அன்று.

**இறுவாய்**

இதுகாறும் பல முக்கியமான விஷயங்களை ஒருவாறு எனது விருப்பத்தினால் உங்கள்பால் உரைத்தேன். இவைகளெல்லாம் நீங்கள்முன்னர் அறிந்தனவேயாயினும் மீண்டும் ஞாபகப்படுத்தும் பொருட்டே விரிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. எனவே, புத்துணர்வுகொண்டு எழுந்து நற்காரியங்களைச் செய்தலில் முனைந்து நிற்றல் வேண்டும். என்றும் நல்லவர்களாகவே இலங்குதல் வேண்டும். எவ்வளவு கௌரவம் வாய்ந்தவர்களாக இருப்பினும் அறிவுடையுலகம் ஒப்பும் வண்ணம் திருந்தி நடப்பதே சிறப்புடையதாகும். நாம் செய்யும் காரியங்களை ஒரு சிலர் எதிர்ப்பினும் அவர்களிடம் பொறுமைகாட்டி, நாம் நடக்கும் நல்ல மாதிரியில் அவர்களையும் திருத்திவிட வேண்டுவதற்கு முயலவேண்டும். பொதுஜன நலத்தின் பொருட்டுச் செய்யப்பெறும் திருத்தங்களில் ஈடுபடுவோர், எவ்வளவு கஷ்டங்களும் பகைமையும் நேரிட்டாலும் தமக்கு இழுக்குவந்ததாகப் பாராட்டுதல் கூடாது. பலருக்கும் சம்பந்தமுள்ள திருத்தங்களில் பணிசெய்வோர் பொறுமையிழந்து பகைமை பாராட்டுதல் அனாவசியமே. நமது உயர்ந்த எண்ணங்கள் இன்று முடியாவிட்டாலும் மற்றொரு நாள் பலிதமாவது நிச்சயம். இந்த திடதைரியமே நமக்கு அதிகம் வேண்டும். பணிசெய்யும்பொழுது தோல்வியையும் பயனையும் கருதுதல்கூடாது. வீரம்பொருந்திய ஒருவனுக்குத் தோல்வியேற்படும்பொழுது மற்றும் ஒரு அடி முன்னே நடப்பான். அஞ்சாமையைக் கடைப்பிடித்த தீரர்கள் எப்பொழுதும் காரியசித்தி பெறுவார்கள் என்பது திண்ணம். எடுத்த காரியங்களுக்கெல்லாம் அஞ்சுவது அனாவசியம். அஞ்சத்தக்க இழிதொழில்களைக்கண்டே நாம் அஞ்சவேண்டுமன்றி, மனிதன் செய்யக்கூடிய உயர்காரியத்திற்கு நாம் சிறிதும் பயங்கொள்ள வேண்டுவதில்லை. நீங்கள் திடசங்கற்பம் கொண்டால் உலகில் செய்யமுடியாத காரியம் ஒன்றுமேயில்லை. உங்கள்பாலுள்ள உயர்ந்த எண்ணங்கள் எல்லாம் இனிவிரைவில் பலன் தரப்போகிறதென்பது இம்மகாநாடு கூட்டப்பட்டிருப்பதிலிருந்தே நன்கு புலனாகிறது. எடுத்தகாரியம் யாவினும் வெற்றிபெற்று நலன்பல தோன்றுவதாக!





# நகரத்தார் சரித்திரம் (கவிதை)

●

காசி ஸ்ரீ அரு. சோமசுந்தரம்

'காசிஸ்ரீ' அரு. சோமசுந்தரன் புதுவயலில் பிறந்து, தேவகோட்டைக்கு சுவீகாரம் சென்றவர். புதுவயல், கண்டனூர் பள்ளிகளில் பயின்று, அழகப்பா கல்லூரியில் பட்டம் பெற்றவர். 'பொன்முடிப்பதிகம்' 'செட்டிநாடு தனிப்பயிற்சிக் கல்லூரி' இவற்றின் வழியும் நல்ல சொற்பொழிவுகள் வாயிலாகவும் உலகளாவிய புகழ்பெற்றுள்ளவர்; காசிக்கு இராமேச்சுரத்திலிருந்து 2000 மைல் நடந்தே யாத்திரை செய்து 'காசிஸ்ரீ' பட்டம் பெற்றுள்ளார். இலக்கியம், கட்டுரை, நாடகம், கவிதை, சரித்திரம், பயண இலக்கியம், மருத்துவம் என்று பல துறையிலுமாக 81 நூல்கள் எழுதியுள்ளவர். ஆங்கிலத்திலும் கவிதைகள் எழுதியிருக்கிறார். பிறந்த நாட்டிற்கும் இனத்திற்கும் பெருமை சேர்த்து வரும் பாண்பாளர்.



காவிரித்தாய் முன்பு கலந்தொரு பூமியிலே
பூவிரித்து, நல்ல புகழ்விரித்து, வாழ்ந்தவர் நாம்
சோழன் தான் அன்று தோழனென வாழாமல்
காலமெலாம் பகைத்த காரணத்தால் புறப்பட்டோம்
பட்டிணத்தை விட்டுப்பின் பாண்டியனைச் சரணடைந்தோம்
பட்டினத்தை நாமோ பற்றற்று மறக்கவில்லை
'பட்டினத்தில் வாழ்ந்தோர் பல இலட்சம் ஆனாலும்
''பட்டினத்தார்'' என்ற பாராட்டோ ஒருவர்க்கே!
பூவிரியும் காடு; புனல்விரியும் மாயூரம்;
காவிரியும் ஆழி; கலம்விரியும் பட்டினத்தில்
பாவிரியும் பக்திப்படை விரியும்; இறைவணங்கின்
சா(வு)இரியும்; தீமைச் சனி இரியும் பூம்புகார்;
ஓராயிரம் பொன்னை ஒருபாட்டுக் கவித்த தலம்
பாராண்ட சோழப் பார்த்திபர்கள் வாழ்ந்ததலம்;
''கரிகால'' னோடு ''கண்ணகி''யும் அன்று
பயிரான பூமி பக்திக்குப் பழம் பூமி;
கடல்கடந்த குதிரை காவிரி பூம்பட்டிணத்தில்
இடங்களெலாம் பரவி இருந்ததுவும் அக்காலம்
வண்டியெலாம் மிளகு; வடமலையின் தங்கமணி;
மண்டியதும் மேற்கு மலையின் அகிலாரம்;
தென்கடலின் முத்து; கீழ்கடலின் செம்பவளம்

தன்னிகரில் கங்கைத் தனியுடைமைப் பொருள்களுடன்
பொன்னியதன் செல்வம், புகழிலங்கை உண்பொருளும்
அன்னியமாம் பர்மா ஆக்கியதோர் பொருள்களெலாம்
நீரோடும் இந்த நிலத்தோடு மண்டியதால்
நீரோடும் பூமி சிறிதளவும் நெரிந்ததுவாம்;
மன்னன் மிக வாழ்ந்த மணமிக்க இந்நிலத்தில்
''மன்னர் பின்னோர்'' எனும் மாண்புமிகு நகரத்தார்
வாழ்ந்து பலகாலம் வாணிபங்கள் செய்தனரே;
ஆழ்ந்து பலதர்மம் அயராது காத்தனரே;
நாகநாட் டில்வழ்ந்த நகரத்தார் தமையெல்லாம்
தாகமுடன் இந்தத் தரணியிலே வரவேற்றுச்
சோழப் பெருவேந்தர் சுந்தரப்பூம் புகார் நகரில்
வாழ ஒருமூன்று வீதியினை வகுத்தளித்து,
மாட மாளிகையும் மாண்புடைய ஆலயமும்
கூட கோபுரமும் கோயில்போல் வீடுகளும்
சிங்கக் கொடிகலசம் முடிபுனையும் சீர்வரிசை
வங்கக் கடல்கடந்து வாணிபஞ்செய் நல்லுரிமை
அத்தனையும் ஈந்தே ஆதரித்த காரணத்தால்
எத்துனைநூ றாண்டாய் இங்கிருந்தார் நகரத்தார்!
தூர்த்தனொரு சோழன் நகரப்பெண்ணைச் சிறையெடுத்தான்
ஆர்த்தெழுந்த பெண்டிர் ஆடவர்கள் தீக்குளித்தார்
சின்னஞ்சிறார் மட்டும் சிலநூறு வாழ்ந்தவர்கள்
பின்னவர்க்கு வேளாளர் குடியினிலே பெண்ணெடுத்தார்
மீண்டும் தழைத்தோங்கி மேலான குடியாகி
ஆண்டாண்டுக் காலம் அருஞ்செல்வத் துடன்வாழ்ந்தார்
கோடானு கோடி கொழித்ததனால் நகரத்தார்
வாடாத சோழ மண்டலத்தின் வலக்கரமே
சோற்றால் மடையணடைந்த சோணாட்டில் தங்கமெனும்
ஆற்றை அணைகட்டித் தேக்கியவர் நகரத்தார்
வாடாத சோழ மண்டலத்தின் வலக்கரமே
சோற்றால் மடையடைந்த சோணாட்டில் தங்கமெனும்
ஆற்றை அணைகட்டித் தேக்கியவர் நகரத்தார்
ஐந்து நாயன்மார் அமர்நீதி, இயற்பகையார்,
நைந்த கரைகால் நல்லம்மை கவிக்கம்பர்
மூர்த்தி நாயன்மார் முளைத்ததுவும் இக்குலமே!
சாத்தன் இளங்கோவும் சாற்றுபுகழ் இக்குலமே!
வள்ளுவனைக் காத்து வண்டமி முக்குரமிட்ட
வள்ளலெனும் ஏலேல சிங்கனும்தான் இக்குலமே
பட்டினத்தா ரோடு, பாடுவார் முத்தப்பர்
அட்டியின்றித் தந்தார் ஆயிரமாம் பாமலர்கள்

தாலாட்டுப் பாடித் தமிழ் வளர்த்த ஆச்சியரில்
பாராட்டும் ஒக்கூர் மாசாத்தி இக்குடியே!
ஆழி கடந்தார்; அருங்கலங்கள் நூறேறி
ஊழி பெயர்ந்தும் உளம்பெயரா நகரத்தார்
நாடு பலகடந்து நவரத் தினமீட்டி
வீடு கொணர்ந்து விரிபுகழைப் பெற்றார்கள்
பெண்டு மறந்து, பிள்ளைகளைத் தான்மறந்து
உண்டி மறந்தே உறக்கமுடன் சுகமறந்து
காலங் காலமாகிக் கடலோடு வாழ்ந்ததனால்
பாலும் பழச்சாறும் ஓடியது பட்டினத்தில்
வெள்ளியுடன் தங்கம் விளையாடும் பாத்திரங்கள்;
பிள்ளையெலாம் தாயம் உருட்டுவதும் இரத்தினங்கள்
கண்வளரப் பாட்டு காரியையார் தாலாட்டு
பின்அழுகைப் பாட்டு; பெண்டிரெலாம் இவ்வினத்தில்
இம்மியிலே சேர்த்த செல்வமெலாம் சடங்குகளாம்
அம்மியிலே வைத்தே அரைப்பதுவும் இவ்வினமே
நல்ல நகரத்தார் நற்பெருமை கேட்டதனால்
வல்ல பாண்டியனார் வரவழைத்தார் இக்குலத்தை
சோழப் பேரரசன் சொல்லியதால் நகரத்தார்
வாழப் பாண்டியனார் வளமண்ணில் கால்வைத்தார்
ஏழாம் நூற்றாண்டில் இணையில் சௌந்தரபாண்டி
மேலாம் திருமன்னர் மிகவேண்டி அழைத்ததனால்
எண்ணா யிரம்புள்ளி எழுந்தருள, அனைவர்க்கும்
கண்ணான பாண்டிக் காவலனோ பல உரிமை
செப்புப் பட்டயத்தில் சேர்த்தெழுதித் தந்திட்டான்
ஒப்பில் நகரத்தார் ஓர்ந்திரியூர் குடியேறி
வாழத் தொடங்கியது வளர்காரைக் குடியதுவே
வேலங் குடியோடு இளையாற்றங் குடிமாத்தூர்
பிள்ளையார் பட்டி பெருஞ்சீர்வை ரவன்கோவில்
சொல்லும் புகழார்ந்த சூரக் குடியுடனே
இரணியூர்க் கோயில் இலுப்பைக் குடிக்கோயில்
திறமுடையார் கண்டு தேர்ந்தார்ஒன் பதுகோயில்
விரிகடலோ கிழக்கு வெள்ளாற்றங் கரைவடக்கு
பிரான்மலையோ மேற்கு பெருவைகை தான்தெற்கு
நான் எல்லை கொண்ட நன்னிலத்தில் நகரத்தார்
சால்புடனே வாழ்ந்த சரித்திரத்தைச் சொல்கின்றேன்
தொண்டாற்றி அன்று தொண்ணூற்றா றூர்களிலே
பண்டுள்ள நாடுநகர் பரிந்தேத்த வாழ்ந்தார்கள்
வேட்டைக்கு வந்த பாண்டியனோர் சிறுமியினைப்
பாட்டையிலே கண்டதும் பசிவரவே எடுத்தேக

எல்லோரும் சென்றே இகல்வேந்தன் முன்னின்று
''கல்லாத சிறுமிதனைக் காத்துவிடு'' என்றார்கள்
''உங்கள் பெண்ணென்றே உணராமல் தூக்கி வந்தேன்
தங்களிடம் தந்தால் தலைகொய்வீர் என்கின்றார்
என்பிழையை நீங்கள் எல்லோரும் பொறுத்திவனை
மன்பதையால் வாழ வழிசெய்வீர்; கொன்றீரேல்
ஒருதலைக்கோர் எட்டுத் தலைகொய்வேன்; அபராதம்
உறுதிஎண் ணாயிரம்பொன் உங்களிடம் வாங்கிடுவேன்''
என்றுரைத்த மன்னன் கட்டளைக்(கு) இணங்கியவர்
மன்றினிலே பெற்ற மகளோடு வந்தார்கள்
கற்பென்னும் திண்மை கைக்கொண்ட கொள்கையினால்
பொற்புடைய பெண்ணைப் பொழுதுக்குள் கொன்றார்கள்
ஏழு கோயிலென இருந்தவர்கள் ஒவ்வொன்றாய்
ஏழு தலைதந்தார்! இன்னொன்றை யார் தருவார்
என்றெண்ணிச் சான்றோர் ஏங்குகையில் ஒக்கூரார்
மன்றினிலே சொன்னார் ''மறுதலையும் நாம் தருவோம்''
என்றுரைத்த வீரர் என்பதனால் இன்றுவரை
மன்றிலெலாம் முதலாம் மரியாதை ஒக்கூர்க்கே
எட்டுப்பெருவீரர் இணையில்லாப் பாண்டியர்முன்
வெட்டுப் படவந்தார் பண்டியனோ மிகவருந்தி
''வந்த பழிபோதும் வல்லவர்கள்! செல்க!'' எனச்
சிந்தை வருந்திச் செப்பியபின் மீண்டார்கள்
அன்றுமுதல் செட்டிநாட்டில் அவர்கள் கொடிகட்டி
இன்றுவரை வாழும் இயல்புடையார் ஆனார்கள்
தங்கக் கொடிகட்டித் தலைநிமிர்ந்து வாழ்ந்தார்கள்
சிங்கக் கொடிகட்டிச் சேர்ந்திழுக்கக் கயிருகத்
ஆன்ற பெருஞ்செல்வம் அத்தனையும் இவர்க்கடக்கம்
ஈன்ற குழந்தை எனுஞ்செல்வம் மிகக் குறைவு
காலஓட் டத்தில் கருத்துக்கள் மாறுகையில்
சீலநக ரத்தார் சிறிதளவும் மாறாமல்
வாழ்ந்து வந்ததனால் வளங்குன்றிப் போனார்கள்
தாழ்ந்த நிலைமாறித் தலைநிமிர முயல்கின்றனர்
நாடெல்லாம் போற்றும் நகரத்தார் மேன்மையினை
ஈடின்றிக் காப்போம் இணைந்து.





# சிவாலய தரிசன முறை

பரங்கருணைத் தடங்கடலாகிய சிவபெருமான் ஒருவரே பரமபதி. அவர் ஒருவரே எல்லோராலும் வழிபடப் பெறுபவர். அவர் ஒருவரே யாரையும் வழிபடாதவர் என்றும் உள்ளவராயும், எங்கும் நிறைந்தவராயும், இயல்பாகவே பாசங்களின் நீங்கயிவராயும், எல்லாம் அறியபவராயும், எல்லாம் செய்பவராயும், இன்ப வடிவினாராயும், தம் வயமுடையவராயும் இருப்பதாலேயே சிவபெருமான் முதற்பெருங்கடவுளாக விளங்கிக் கொண்டிருக்கிறார்.

சிவபெருமானுக்கு அருவம், அருவுருவம், உருவம் என்னும் மூன்று வடிவங்கள் உள்ளன. இவற்றுள் அருவுருவத் திருமேனி கொண்டு மூலத்தானத்திலும் உருவத் திருமேனி கொண்டு திருக்கோயிலிலும் எழுந்தருளியிருந்து எல்லா உயிர்களுக்கும் சிவபெருமான் அருள்புரிந்து வருகின்றார். சிவாலயத்தில் சிவபெருமானது பரிவார மூர்த்திகளும் எழுந்தருளியிருப்பார்கள்.

. மூலத்தானத்திலுள்ள அருவுருவத் திருமேனியாகிய சிவலிங்கம், ''ஆவுடை'' என்னும் பீடத்துடன் கூடியிருக்கும். இதில் சிவலிங்கம் சிவமும், ஆவுடை சிவசக்தியும் ஆகும். இதைச் ''சதாசிவமூர்த்தி'' என்று அருள் நூல்கள் கூறும். சிவபெருமானது உருவத்திருமேனிகள் பல. அவற்றுள் சந்திரசேகரர், உமா மகேசர், இடபாரூடர், சபாபதி, கல்யாண சுந்தரர், பிக்ஷாடனர், காமாரி, காலாரி, திரிபுராரி, சலந்தராரி, மாதங்காரி, வீரபத்திரர், அரியர்த்தர், அர்த்தநாரீசுர், கிராதர், கங்காளர், சண்டேசாநுக்கிரகர், நீலகண்டர், சக்கரப்பிரதர், சுகமுகாநுக் கிரகர், சோமாஸ்கந்தர், ஏகபாதர், சுகாசீனர், தக்ஷிணாமூர்த்தி, லிங்கோற்பவர் என்னும் இருபத்தைந்து மூர்த்தங்களும் குறிப்பிடத்தக்கவை.

சிவாலய தரிசனம், நாடோறும் செய்தல் வேண்டும். தோய்த்துலர்ந்த ஆடையணிந்து அவரவர்கள் தீக்ஷைக்கேற்றபடி அநுட்டானம், ஆன்மார்த்த பூசை ஆகியவற்றை முடித்துக் கொண்டு, தேங்காய் பழம் முதலிய பொருள்களுடன் திருக்கோவிலுக்குச் செல்லுதல் வேண்டும். திருக்கோயிலை நெருங்கியவுடன் கால்களைக் கழுவி ஆசமனம் செய்து தூலலிங்கமாகிய திருக்கோபுரத்தை தொழுது கைகளைச் சிரசின் மேலே கூப்பி சிவ நாமங்களை உச்சரித்துக் கொண்டு திருக்கோயிலினுள்ளே செல்லுதல் வேண்டும்.

கொடிமரம், பலிபீடம், இடபதேவரை கும்பிட்டுக் கொடிமரத்துக்கு முன்னால் ஆடவர் அட்டாங்க நமஸ்காரமும் பெண்கள் பஞ்சாங்கநமஸ்காரம் மூன்று முறை செய்தல் வேண்டும் ஒன்று இரண்டு செய்வது குற்றம் திருக்கோவிலில் வேறு எந்த இடங்களிலும் கீழே விழுந்து வணங்குவதோ நவக்கிரகம் முதலியவற்றைத் தனித்து வலம் வருவதோ கூடாது. தலை, கையிரண்டு, செவியிரண்டு, மோவாய், புயங்களிரண்டு என்னும் எட்டுறுப்புகளும், நிலத்திற் பொருந்த வணங்குதல் அட்டாங்க நமஸ்காரம், தலை, கையிரண்டு, முழந்தாளிரண்டு என்னும் ஐந்துறுப்புகளும் நிலத்திற் பொருந்தும்படி வணங்குதல் பஞ்சாங்க நமஸ்காரம்.

பின்னர், கணநாதராகிய திருநந்தி தேவரையும் துவார பலாகரையும் துவார விஜயகரையும் வணங்கிச் சிவலிங்கப் பெருமான் சந்நிதியில் அருச்சனை செய்வித்து அருட்பாடல்களை ஓதித் திருநீறு வாங்கித் தரித்துக் கொண்டு உமாதேவியார், சபாபதி தக்ஷிணாமூர்த்தி, விநாயகர், சோமாஸ்கந்தர், சந்திரசேகரர், சுப்பிரமணியர், பைரவர் முதலிய மூர்த்திகளையும், சமயாசாரியர் அறுபான் மும்மை நாயன்மாரகிய மூர்த்திகளையும் வணங்கி வழிபடுதல் வேண்டும்.

விநாயகர் திருமுன்பு கண்டு விரல்கள் கட்டை விரல்களை நீட்டி முட்டியாகப் பிடித்துக் கைகளினால் நெற்றியில் மூன்று முறை குட்டி வலக்காதை இடக்கையினாலும், இடக்காதை வலக்கையினாலும் பிடித்து கொண்டு மூன்று முறை தோப்புக்கரண (உக்கி) போட்டு வழிபடல் வேண்டும் விநாயகர் மட்டும் தனியே எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில் ஒன்று அல்லது நூற்றெட்டு முறைதான் வலம் வருதல் வேண்டும் உமாதேவியார் மட்டும் தனியே எழுந்தருளியுள்ள திருக்கோயில்களில் நான்கு முறை வலம் வருதலும் நமஸ்கரித்தலும் வேண்டும்.

சிவாலயத்தில் மூன்று முறை வலம் வந்து சண்டேசுரர் சந்நிதியை அடைந்து வணங்கி மூன்று முறை மெதுவாகக் கைகளைக் கொட்டிப் பிரார்த்தித்து மீண்டும் கொடி மரத்தின் முன்னர் நமஸ்கரித்து எழுந்து இயன்ற அளவு ஸ்ரீ பஞ்சாக்ஷர ஜெபம் செய்து எழுந்து வீட்டுக்குச் செல்லுதல் வேண்டும்.

கோயிலிலுள்ள எந்த மூர்த்திகளையும் தனியாக வலம் வருதலும் கீழே விழுந்து வணங்குதலும் கூடாது. சண்டேசுரர் சந்நிதியில் கைகொட்டுதலைத் தவிர வேறு எதனையும் செய்தல் கூடாது.

நாடோறும் சிவாலய தரிசனம் செய்ய இயலாதவர் திங்கள், செவ்வாய், வியாழன், வெள்ளிக் கிழமைகள், பிரதோஷம், பௌர்ணமி, அமாவாசை, கார்த்திகை, திருவாதிரை, மாதப்பிறப்பு, வருடப்பிறப்பு, கிரகணங்கள், சிவராத்திரி, நவராத்திரி, சதுர்த்தி, சட்டி ஆகிய புண்ணிய தினங்களிலாயினும் அவசியம் தெரிசனம் செய்தல் வேண்டும்.

பிரதோஷ காலத்தில் சோமசூத்திரப் பிரதக்ஷணம் செய்வது சிறப்பு. முதலில் இடப தேவரைத் தரிசித்து இடமாகச் சென்று சண்டேசரைத் தரிசித்துச் சென்ற வழியே திரும்பி வந்து மீண்டும் இடபதேவரைத் தரிசித்து வலமாகக் கோமுகி வரை சென்று அதனைக் கடவாது திரும்பி வந்து மீண்டும் இடபதேவரைத் தரிந்து இடமாகச் சென்று சண்டேசுரைத் தெரிசித்துத் திரும்பி இடபதேவரைத் தரிசியாது, வலமாகக் கோமுகி வரை சென்று திரும்பி வந்து இடபதேவரைத் தரிசியாது இடமாகச் சென்று சண்டேசுரை தரிசித்து திரும்பி வந்து தரிசியாது இடமாகச் சென்று சண்டேசுரை தரிசித்து திரும்பி வந்து இடபதேவரைத் தரிசித்து அவரது இரு கொம்புகளினடுவே சிவலிங்கப் பெருமானைத் தெரிசிப்பது சோமசூத்திரப் பிரதக்ஷணமுறை.

சிவாலயத்துக்கு ஆசாரமில்லாது போதலும் சிவாலயத்தில் எச்சிலுமிழ்தல் மூக்கு நீர் சிந்துதல், பாக்கு வெற்றிலையுண்டல், நித்திரை செய்தல், முடி கோதுதல், தோளில் உத்தரீயம் இடுதல், சட்டையணிதல், பாதரக்ஷையணிதல், திருவுருவங்களைத் தொடுதல், நிருமாலியத்தை மிதித்தல், தூபி முதலியவற்றின் நிழலை மிதித்தல், வீண் வார்த்தை பேசுதல், மகா மண்டபத்தில் சுவாமிக்கும் இடப தேவருக்கும் குறுக்கே போதல், திரையிட்டிருக்கும் போது வணங்குதலும், வலம் வருதலும் ஆகியவை செய்யத் தகாத குற்றங்களாம்.

சிவலாயத்தில் திருவலகிடுதல் திருமெழுகிடுதல் திருநந்தனவனம் வைத்துப் பத்தி புட்பங்களெடுத்துத் திருமாலைகள் கட்டி சாத்துதல், சுகந்த தூபமிடுதல், திருவிளக்கேற்றுதல், பூசைத் திரவியங்களாதியன கொடுத்தல் மிகப் பெரும் சிவபுண்ணியங்களாகும்.

